# பண்டைத் தமிழர் போர் நெறி



புலவர். கா. கோவிந்தன் எம். ஏ.

# பண்டைத் தமிழர்
# போர் நெறி

புலவர் கா. கோவிந்தன், எம்.ஏ.

தமிழ்த்தாய் பதிப்பகம்
16, இராமானுஜர் தெரு
சிட்லபாக்கம், சென்னை—600 064.

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பண்டைத் தமிழர் போர் நெறி |
| ஆசிரியர் | : | புலவர் கா. கோவிந்தன் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | இலக்கியக் கட்டுரைகள் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு : 2003 |
| நூலின் உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| நூலின் அளவு | : | கிரவுன் 1 × 8 |
| பயன்படுத்திய தாள் | : | 10.5 கிலோ வெள்ளைத் தாள் |
| பக்கங்கள் | : | 304 |
| அச்சுப் புள்ளிகள் | : | 11 புள்ளிகள் |
| ஒளி அச்சு | : | எல். கே. எம். கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், சென்னை–17. |
| அச்சகத்தார் | : | பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை. |
| நூல் கட்டு | : | சாதா அட்டை |
| விலை | : | ரூ.80–00 |
| பதிப்பாளர் | : | தமிழ்த்தாய் பதிப்பகம் சென்னை - 64 |

---

**PANDAI TAMILAR POAR NERI :**
**PULAVAR K. GOVINDAN : PRICE Rs. 80-00**

---

**PUBLISHER : TAMIZHTHAI PATHIPPAGAM, CHENNAI - 64**

# முன்னுரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பழந்தமிழ் நாட்டு வாழ்வியலைப் படம் பிடித்துக் காட்டும் தொல்காப்பியர், புறத்திணை இயலில், பழந்தமிழ் மக்கள் மேற்கொண்டு நடத்திய போர் பற்றிய விளக்கங்களை அளித்துள்ளார். அத்தொல்காப்பியத்துக்கு உரை கண்ட பழைய உரையாசிரியர்களும், புதுப்புது விளக்கம் காணும் இன்றைய ஆராய்ச்சியாளரும், அன்றைய தமிழகத்தின் சூழ்நிலைகளைப் பின்னணியில் கொண்டு உரை காணத் தவறிவிட்ட காரணத்தால், தமிழர்கள் அறநெறி மறந்த வராகி, வலியார், மெலியார் மேல் செல்வதுபோல், பிறரைச் சென்று தாக்கும் அழிவுப் போரும் மேற் கொண்டனர் எனக்கொண்டு, அதற்கேற்ப, உரை வகுத்துள்ளனர்.

புறத்திணை இயலை, அவ்வுரைகளின் அடியொட்டிச் செல்லாமல், அக்காலத் தமிழ் மக்களின் வாழ்க்கை நிலையை உணர்வில் கொண்டு ஆராய்வார்க்கு, அவ்வுரைகள் உண்மையுரைகள் ஆகா; புறத்திணை இயல் விளக்கும் பழந் தமிழ்ப் போர்கள் சென்று தாக்கும் போர்கள் ஆகா; மாறாக, நின்று தாக்கும் போர்களே என்பது தெளிவுறப் புலனாகும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய அப் பழங்காலத்தில், வாழ்விலும், வளத்திலும், அறிவிலும், ஆண்மையிலும் தமிழினத்தை மிஞ்சிய இனம் வேறு இல்லை. ஆகவே, தம் வறுமையும் பிறர் வறுமையும் காரணமாக எழும் காழ்ப்புணர்வு கொண்டு பிறர்மீது போரிட்டு எழ வேண்டிய நிலை, பழந் தமிழர்க்கு உண்டாகவில்லை. மாறாகத் தாம் பெற்றிருந்த வளமார் பெருவாழ்வு பெற்றிராத பிறர், தம் வளம் கண்டு கொண்ட காழ்ப்புணர்வு காரணமாகத் தம்மீது போர் தொடுத்து வந்த காலை, அவ்வாறு வந்தாரை வென்று ஓட்டுவதற்கே அவர்கள் போர் மேற்கொள்ள வேண்டியிருந்தது. ஆகப் பழந்தமிழர் கொண்ட போரெல்லாம் நின்று தாக்கிய போரே அல்லது, சென்று தாக்கிய போர் அன்று.

புறத்திணை இயல் கூறும் போர் இலக்கணங்களுக்கு விளக்கம் தரும் எடுத்துக் காட்டுகளாகக் கூறத்தக்க சங்க இலக்கியச் செய்யுட்களை நோக்கிய வழி, அவையும் இக்கருத்திற்கே அரண் செய்வது புலனாம்.

உண்மை நிலை இதுவாகவும், இவ்வுண்மை நிலைக்கு மாறுபட்டதும், தமிழ் மரபுக்கு மாசு கற்பிக்கத் துணை நிற்பதுமாகிய உரை விளக்கங்களே இன்று கூறப்படுவது உணர்ந்து புறத்திணையியலுக்குப் பொருந்தும் விளக்கவுரை ஒன்று வர வேண்டும் என உணர்ந்தேன். அதன் பயனே இச்சிறு நூல்.

இந்நூலின் பெரும் பகுதி 1962-ஆம் ஆண்டுக்கு முன்பே முடிவுற்றது என்றாலும், அதன் பிறகு நான் ஏற்றுக் கொண்ட சட்டமன்றப் பணிகள் காரணமாக, இத்துணைக் காலம் கடந்து முழுவடிவம் பெற்று இப்போது வருகிறது.

வரவேற்றுப் போற்றுமாறு தமிழ்ப் பெருமக்களை வேண்டு கிறேன்.

வெளியீட்டாளர்க்கு நிறைபயன் அளிப்பன சிறுகதை பெருங்கதை வெளியீடுகளே அல்லது, இலக்கிய ஆராய்ச்சிகள் ஆகா, என்ற நிலை வளர்ந்து விட்ட இந்நாளிலும், இந்த இலக்கண ஆராய்ச்சி நூலை வெளியிட முன் வந்துள்ள தமிழ்த் தாய் பதிப்பகத்தாருக்கு என் நன்றி.

வணக்கம்.

அன்புள்ள
**கா. கோவிந்தன்**

# பொருளடக்கம்

# பண்டைத் தமிழர் போர் நெறி

## தோற்றுவாய்

**போ**ர் விரும்பத்தகாத ஒன்று; வேண்டாததும் கூட என்றாலும், போர் நிகழாத நாடு உண்டா? இல்லை. அது நிகழாத காலத்தைக் காண முடியுமா? இயலாது. போர் புரியாத உயிரினம் எதுவேனும் உண்டா? இல்லை. பனி தவழும் உலகின் கோடியிலும் போர்; இருள் தவழும் பெருங்காட்டு நிலமாம் உலகின் இடைப் பகுதியிலும் போர்; உலகம் தோன்றிய நாள் தொட்டுப் போர் தொடர்ந்தே வருகிறது. காட்டுக் கொடு விலங்கினங்களும் போர் புரிகின்றன; நாட்டில் வாழும் நாகரிக நெறி கற்ற மக்கள் இனமும் போர் புரிகின்றன.

இன்று நாம் காணும் இவ்வுலகமே மக்கள் இனம் மற்ற இயற்கைகளோடு ஓயாது நடத்திய போராட்டத்தின் உறு பயன் ஆகும்.

காய் கனி தின்று, காட்டாற்று நீர் குடித்து வாழ்ந்த மக்கள் இனம், சுவை ஆறே என்றாலும், ஆயிரம் ஆயிரம் வகையாக ஆக்கி உண்ணுகிறது இன்று. அதற்கு, அது மேற்கொண்ட போராட்டம் எத்தனை எத்தனையோ!

மலையிலும், மலைக் குகையிலும், மரங்களின் செறிவிலும் மறைந்து வாழ்ந்த மக்களினம், பனியின்

குளிரும், வெயிலின் வெப்பமும் தன்னை அணுகாதவாறு, வாய்ப்புப் பல கொண்ட மாடி வீடு கட்டி மகிழ்ந்து வாழ்கிறது இன்று. இவ்வுயர் நிலைபெற அம்மக்களினம் மேற்கொண்ட போராட்டம் ஒன்றா? இரண்டா? ஆயிரம், ஆயிரம்!

மானின் தோலும், மரத்தின் இலையும் கொண்டு தன் மேனியை மறைத்து மானத்தைக் காத்துக் கொண்ட மக்களினம், பட்டாலும், மயிராலும், பருத்தி நூலாலும் ஆன கொட்டைக் கரைய பட்டுடைகளையும், கால் உறை, மெய்யுறை முதலாம் சட்டைகளையும் அணியக் கற்றுக் கொண்டுளது இன்று. எத்தனை எத்தனை போராட்டங் களுக்குப் பின்னர்க் கிடைத்த பலன் இது?

பண்டு காடும், மலையும், காட்டாறுமாக இருந்த இந்நிலம், இன்று நாடாகவும், நகரங்களாகவும், நெல் விளை நன்செய் புன்செய்களாகவும், சிறியவும் பெரியவுமாய தொழில் நிலையங்களாகவும் காட்சி அளிக்கிறது. இக் காட்சியை அளிக்க மக்கள் இனம் மேற்கொண்ட போராட்டத்தின் எண்ணிக்கையினைக் கணக்கிட்டுக் காணல் கூடுங்கொல்?

ஊரை விட்டு ஒரு காத தூரம் செல்ல, ஒரு மாத காலத்தை வீணாக்கிய மனிதன், இன்று ஒரு சில நாட்களுக்குள் உலகத்தையே வலம் வந்து விடுகிறான்; வானிலே பறக்கிறான்; வான் வெளியையும் கடக்கிறான்; கடலிலே மிதக்கிறான்; நிலத்தில் காற்றினும் கடுகிச் செல்கிறான்; இவ்விரைவும் வசதியும் போராடாமலா கிடைத்தன?

ஆழ்கடலடியில் அடங்கியிருந்த முத்து, பவளம்; கண்ணொளிபுகாக் காடுகள் செறிந்த மலைப் பிளவுகளில்

மண்மூடிக் கிடந்த மாணிக்கம்; மண்ணுக்கடியில், மண்ணோடு மண்ணாகக் கலந்து கிடந்த பொன்; இவற்றைக் கொண்ட அழகிய அணி ஆக்கித் தர அம்மனித இனம் ஆற்றிய போராட்டப் பெருமையை அளவிட முடியுமா?

நீரோடும், நெருப்போடும், காற்றோடும், மற்ற இயற்கைப் பொருள்களோடும், காட்டில் வாழும் கொடு விலங்குகளோடும் நடத்திய இப்போராட்டங்களில், மக்களினம் ஓரளவு வெற்றி பெற்று விட்டது. மக்களினம் இயற்கைகளோடு நடத்திய இவை போலும் போராட்டங்களை விரும்பாத நாடு, உலகில் எங்கும் எப்போதும் இருந்தது இல்லை. இனியும் இராது; மாறாக, அத்தகைய போராட்டம் தொடர்ந்து நடைபெறுவதிலேயே தம் வாழ்வின் வளர்ச்சி அடங்கியுள்ளது என்பதை உணர்ந்து, அப்போராட்ட வெற்றிக்காக, ஒவ்வொரு நாடும் ஓயாது அரும்பாடு படுகிறது.

ஈண்டு நாம் ஆராயப் புகுவது, மக்களினம், இயற்கையோடு நடத்திய, நடத்திக் கொண்டிருக்கும் அவ்வாக்கப் போரை அன்று; மக்கள் என்ற ஓருயிரினத்திற்குள்ளாகவே, ஒரு பிரிவினர், பிறிதொரு பிரிவினரோடு நடத்திய போரே, ஈண்டைய நம் ஆராய்ச்சிப் பொருள் ஆகும்.

மக்களினம், பிற உயிரினங்களோடும், இயற்கைகளோடும் போராடுவது இயல்பு; எல்லோராலும் விரும்பப்படுவது; ஆக்கத்திற்கு வழிகோலுவது. ஆனால், மக்களினம், மக்களினத்தோடேயே போராடுவது, இயற்கையொடு மாறுபட்டது; விரும்பத்தகாதது; அழிவிற்கு வழி கோலுவது. என்றாலும், அப்போர் ஓயாமல் நடைபெற்றுக் கொண்டேயுள்ளது.

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்' என்றார் ஒரு பெரியார்; இவ்வுடலுக்குச் "சோற்றால் அடித்த சுவர்" என்ற பெயரிட்டு வழங்கினார் பிற்காலப் பெரியார் ஒருவர்; "உணவெனப்படுவது நிலத்தொடு நீரே" என்ற உண்மையை உணர்ந்து உணர்த்தியுள்ளார் சங்க காலப் பெரியார் ஒருவர்; அத்தகைய நிலம், எங்கும் ஒரே இயல்பு உடையதாக அமைந்து விடவில்லை. பல்வளம் கொழிக்கும் மலை நிலம் எனும் மாண்புடையதாகத் திகழ்கிறது ஒருபால்; காட்டு வளம் மிக்க கவினுடையதாகக் காட்சி அளிக்கிறது மற்றொருபால். நெல்லும் கரும்பும் விளையும் நன்செய் களாக நலம் பெற்று விளங்குகிறது, பிறிதொருபால்; உப்பும், மீனும், உயர்ந்த முத்தும் தரும் கடலாகக் காட்சி அளிக்கிறது வேறு ஒரு பால்; இவற்றினூடே, இட்ட விதைகள் வெந்து வீணாகும், ஒன்றிற்கும் உதவா உவர் நிலங்களும், மணலே பரந்த பாலை நிலங்களும் இடம் பெற்றுள்ளன. நில வகையில் காணலாம் இவ்வேற்றத் தாழ்வுகள் நிலவள வோடு நின்றுவிட வில்லை. "எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்பது உண்மை யொடுபட்ட உரையே ஆயினும், உழைப்பின் உறுபயன் அறியாத உலகத் தொடக்க நிலையில், நிலங்களின் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்பவே, மக்கள் நிலையிலும் ஏற்றத்தாழ்வுகள் இடம் பெற்றன. மக்கள் வாழ்வு, அவர்கள் சார்ந்து நின்ற மண்ணின் வளம் வளமின்மைகளுக்கு ஏற்ப, வளமுடையதாகவும், வளம் அற்றதாகவும் மாறுபட்டே அமைந்தது. நன்செய் போலும் வயல் வளம் மிகுந்த நாடுகளில் வாழப்பெற்ற மக்கள், வற்றாப் பேரின்ப வாழ்வுடையராயினர்; களர் நிலமும், கல்நிலமும் போலும்

நாடுகளில் வாழப் பெற்றவர், வறுமையிற் கிடந்து உழன்று வாழ்வின் பயன் பெறாராயினர். வளமும், வறுமையும், இவ்வாறு, வாழும் நிலத்தின் வளம், வளமின்மைகளுக்கு ஏற்ப அமைந்ததாகவும் அந்நிலையைத் தம் உழைப்பால் மாற்றி அமைக்கலாம் என்ற உணர்வோ, அது அவரவர் வாழும் நில இயல்பிற்கேற்ப வந்து வாய்த்துளது; அதற்கு நாமென்ன செய்யலாம்; அவரவர்க்குக் கிடைத்ததை அவரவர் நுகர்வதே நில இயல்பு போலும் என எண்ணி அடங்கும் உள்ள நிறைவோ, மக்களுக்கு உண்டாகவில்லை. அதனால், வறுமையில் கிடந்து வாழ்வின் பயன் காணாத மக்கள், வளம் கொழிக்கும் நிலத்தாரின் நிறைவைக் காணுந்தோறும் காழ்ப்புணர்வு மிகுந்தனர்; அப்பெரு வாழ்வு தமக்கும் வேண்டும் என ஆசை கொண்டது அவர் உள்ளம். அவ்வாசையை நிறைவேற்றிக் கொள்ள எதற்கும் துணிந்து நின்றார்கள் அம்மக்கள்; ஆனால், தாம்பெற்ற அவ்வின்ப வாழ்வை அவர்க்குப் பகிர்ந்தளிக்கும் விரிந்த உள்ளம் மேனிலை மக்களுக்கு உண்டாகவில்லை; அப்பேரின்ப வாழ்வு, இயற்கை, தமக்கு மட்டுமே வரைந்து வழங்கியுளது என்று எண்ணினார்கள். அதனால், அவ்விருதிறத்தார்க்குமிடையே மன வேறுபாடு இடங் கொண்டது; அவ்வாறு தொடக்கத்தில் தளிர்விட்ட அம் மனவேறுபாடே, பின்னர்ப் பகையாகவும், அதன் பயனாம் போராகவும் உருவு கொண்டு உலக அமைதியை உருக் குலைக்கத் தொடங்கியுள்ளது.

பகுத்துணரும் அறிவாற்றலைச் சிறிது முன்னர்ப் பெற்ற ஒருவன். அறிவு பெறும் வாய்ப்பின்றித் தன்னோடு வாழும் பிறரும் அதைப் பெற வேண்டும்; அவர் அவ்வறிவு

பெறத், தான் துணைபுரிதல் வேண்டும் என்று எண்ணாமல், அவர்கள் அறிவின்மையைப் பயன் கொண்டு, அவர்களை ஏமாற்றிப் பிழைக்க எண்ணிய காரணத்தால், அவ்வாறு எண்ணிய காலத்தில் உருப்பெற்றது போர்.

இயற்கையிலேயே, சிறிது மிக்க வலிவு பெற்ற ஒருவன், வலிவு குறைந்து தன்னோடு வாழும் பிறரைப் பாதுகாத்தல் தன்கடன் என்று கொள்வதற்குமாறாக, அவர் தம் வலிவற்ற நிலையையும் தன் வன்மையையும் பயன் கொண்டு அம் மிகப் பலரை அத்தனி யொருவன் ஆட்டிப் படைக்கத் தொடங்கிய அத்தொல்லூழிக் காலத்தில் தோற்றம் கொண்டது இப்போர்.

வாழ்வின் மேட்டிலே இருக்கும் ஒருவன், அதன் பள்ளத்தில் இருப்போனும், தன்னோடு மேனிலைக்கு வருவானாக என்ற நல்லெண்ணம் கொண்டு கை கொடுத்துத் தூக்கி விடுவதற்குப் பதிலாக, அவன் மீது கல்லையும் மண்ணையும் வீசி அப்பள்ளத்திலேயே அவனுக்கும் கல்லறை காணத் தொடங்கிய காரணத்தால், அக்காலத்தில் தோன்றிற்று இப்போர்.

தொடக்கத்தில் இவ்வாறு தோற்றங் கொண்ட போரை, அப்போர்க்காம் அடிப்படைக் காரணம் கருதி நான்கு வகையாகப் பகுத்து விளக்கியுள்ளார், தமிழ் மக்களின் வாழ்வியற் படங்களை வரைந்து காட்டும் உயிர் ஓவியப் புலவராம் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய னார். அவை வெட்சிப் போர்; வஞ்சிப் போர்; உழிஞைப் போர்; தும்பைப் போர்.

தமிழகம், ஆங்காங்குப் பெற்றிருக்கும் இயற்கை நிலைகளுக்கு ஏற்ப, குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐவகை நிலவளம் உடையதாகப் பிரிக்கப்

பட்டுள்ளது. மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி; காடும் காடு சார்ந்த இடமும் முல்லை; முழுதும் மலைகளையே கொண்டதோ, முழுதும் காடுகளையே கொண்டதோ ஆகாது, சிறுமலையும் குறுங்காடும் கலந்த நிலப் பகுதி பாலை; வயலும் வயல் சார்ந்த நிலமும் மருதம்; கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல்.

தமிழகத்து நிலங்கள், இவ்வாறு ஐவகையாகப் பகுக்கப் பெறுமெனினும், அவற்றுள் குறிஞ்சி நிலமே முதன் முதலில் தோன்றிய நிலப் பகுதியாகும்; கல் தோன்றிய பின்னரே மண் தோன்றும் என்பது நில இயல்பாகும். "கல் தோன்றி மண் தோன்றாக் காலம்'' என்ற பழந்தமிழ்ச் செய்யுட் சான்றினையும் காண்க. நிலங்களுள் குறிஞ்சி நிலமே முதற்கண் தோன்றிய நிலமாதற் கேற்ப, மக்கள் தங்கள் வாழ்க்கையை முதன் முதலில் தொடங்கிய இடமும் அக்குறிஞ்சி நிலமே ஆகும். மக்களின் உடலை வளர்த்து உயிர் ஓம்பவல்ல உணவுப் பொருள்களை அம்மக்களின் உழைப்பினை எதிர் நோக்காமலே அளிக்கக் கூடிய ஆற்றல் அம்மலை நிலம் ஒன்றிற்கே உண்டு. ஆகவே, உழைப்பின் திறம் அறியாத் தொல்லூழிக் காலத்து மக்கள் தம் முயற்சி சிறிதும் வேண்டாதே, தமக்கு வேண்டும் உணவினைக், காயாகவும், கனியாகவும், கிழங்காகவும் அளித்த அம்மலை நாட்டகத்தே தம் வாழ்வின் இடம் கண்டு இன்புற்றார்கள்.

காயும், கனியும், கிழங்குமாகிய மரவுணவுப் பொருள்களும், மக்கள் விரும்பி உண்ணும் உணவாகப் பயன்படும் மாவினங்களும், மக்கள் தம் முயற்சி ஒரு சிறிதும் வேண்டாதே, அம்மலையகத்தில் எங்கும் எக்காலத்தும் கிடைத்து வந்தமையால், நாளைக்கு வேண்டும் என ஈட்டி வைக்கும் தனியுடைமைப்பொருள் நிலை, மக்களுக்குக்

குறிஞ்சி நில வாழ்வின் போது உண்டாகவில்லை. ஆனால், அந்நிலை நெடிதுநாள் நிற்கவில்லை. ஆண்டுகள் செல்லச் செல்ல, மக்கள் தொகை மட்டும் பெருகிக் கொண்டே வந்ததாக, அவர்க்கு வேண்டும் உணவுப் பொருள்கள் பெருகவில்லை. அதற்கு மாறாக அம்மக்கள், அவ்வுணவுப் பொருள்களைத் தொடர்ந்து தின்று கொண்டே வந்தமையால், சிறுகச் சிறுகக் குறைந்து கொண்டே வந்து இறுதியில் கிடைப்பது அரிதாகி விட்டது அந்நிலை உண்டாகவே, அம்மக்களுள் சிலர் உணவுதேடி, அம்மலை யகத்தை விடுத்து வெளியேறினர். அவ்வாறு வெளியேறிய மக்கள், அடுத்துச் சென்ற இடம், மலைநாட்டிற்கும், காட்டு நாட்டிற்கும் இடைப்பட்டதான பாலை நிலமாகும்; அப்பாலை குறிஞ்சியினும் வளம் குறைந்ததாகவே, அந் நிலத்துட் புகுந்தார் அனைவர்க்குமே அதுவாழ்வளிக்காது என்பது உணர்ந்து, ஆண்டு ஒரு சிலர் மட்டுமே இருந்துவிட, ஏனையோர் அப்பாலையைக் கடந்து முல்லை நிலம் புகுந்தனர். முல்லை, பாலை போலாது, ஓரளவு வாழ வாய்ப்பளிக்கும் நிலமாகவே, அந்நிலம் புக்க மக்கள், ஆங்கே நிலையாக வாழத் தொடங்கினர். குறுங்காடுகளை அழித்துப் புன்செய்ப் பொருள்களை விதைத்து விளைத்தனர்; ஆடு, மாடு, எருமைபோலும் உயிர்களைப் பேணி வளர்த்துச் சுவை தரும் பால் பயன் கொண்டனர். அதனால், பொதுவுடைமை நிலை மறைந்து தனிவுடைமை நிலை இடம் பெற்று விட்டது.

முல்லைநிலம் புகுந்த மக்கள்நிலை, இவ் வகையால், ஓரளவு அமைதியுடையதாக, குறிஞ்சியை விட்டு அவரோடு புறப்பட்டுவந்து, இடைநிலமாம்பாலையில் தங்கி விட்ட மக்கள், அப்பாலை, எதுவும் விளையாப் பாழ்

நிலமாகவே, வாழ்வதற்கு வழிகாணாது வருந்தினார்கள்; அவ்வருத்தம் மிகவே, பழி பாவங்களை எண்ணிப் பாராது, அப் பாலையைக் கடந்து போவாரைக் கொன்று அவர் உடைமைகளைக் கொள்ளை கொண்டு உயிர்வாழத் தலைப்பட்டனர்; அவ்வகையால் ஆறலைக்கும் கொடியோ ராய் அலைந்து திரிந்த அவர்கள் தங்கள் வாழிடத்தை அடுத்து உளதான முல்லை நிலத்தார்பால் ஆடும், மாடும் குவிந்திருக்கக் கண்டு, அம்முல்லை நிலத்துள் அந்நிலத்தா ராகிய ஆயர் அறியாவாறு புகுந்து, அவர் உடைமைகளைக் கொள்ளையிட்டு வரத்தலைப் பட்டனர்; முல்லை நிலத்து ஆடு மாடுகள், குறிஞ்சி நிலத்து மான்போலவும், மரையா போலவும், தாமே பெருகின ஆகாது, தம்மால் வளர்க்கப் பட்டன வாதலின், தமக்கே உரியவாம் என்ற உணர்வு அவ்வாயர்க்கு உண்டாகவே, அவ்வுடைமைகளைக் கவர்ந்து செல்லும் பாலை நிலத்து மறவர் மீது மாறாச்சினம் உடையவராகி அவரை எதிர்த்துப் போராடி அழிக்கத் தலைப்பட்டனர்; இவ்வகையால் தமிழ் மக்களிடையே மெல்ல இடம் பெற்றது போராட்டம். இவ்வாறு தம் உடைமைகளாம் ஆனிரைகளைக் கொள்ளையிட்டுச் சென்ற பாலை நிலத்து மறவரைக் கொன்று, தம் உடைமைகளை மீட்டுக் கொணர ஆயர் மேற்கொண்ட போரை, ஆசிரியர் தொல்காப்பியனார் வெட்சிப் போர் எனும் பெயர் அளித்து விளக்கியுள்ளார்.

பசித்த பாலை நிலத்து மறவர் கவர்ந்து செல்ல, பேணி வளர்த்த முல்லை நிலத்து ஆயர் மீட்டுவர, ஆனிரை காரணமாக இடம் பெற்ற இப்போர் முறை. காலம் செல்லச் செல்ல வேறு உருவம் கொண்டு விட்டது. தம் ஆனிரைச் செல்வத்திற்கு அவ்வப் போது ஊறு நேரக் கண்டஆயர்

அவ்வானிரைகளைக் காப்பதற்கு என்றே ஒரு தலைவனைத் தேர்ந்து கொண்டனர்; அவ்வகையால் உருப்பெற்றதே அரசு நிலை. அவ்வாறு தலைவனாகப் பெற்ற அரசன், ஆனிரை காப்பதைத் தன் தலையாய கடமையாக் கொண்டு காத்து வந்தான்; முல்லைநிலத்தில் இடம்பெற்ற இப்புது நிலையைக் கண்ட பாலை நிலத்துமறவரும், தமக்கு வேண்டும் அவ்வானிரைகளைக் கொண்டு தருவதற் கென்றே ஒரு தலைவனைத் தேர்ந்து, தமக்கு அரசனாக்கிக் கொண்டனர்; இவ்வகையால், பாலை நிலத்து மறவர்க்கும் முல்லை நிலத்து ஆயர்க்கும் இடையே தோன்றிய போர் பாலை நிலத்து அரசனுக்கும் முல்லை நிலத்து அரசனுக்கு மிடையே நடைபெறுவதாகமாறி, மேலும் சில காலம் கழிந்த விடத்து அடுத்து அடுத்து அரசோச்சும் இரு நாட்டு அரசர்களுக்கு இடையே நடைபெறும் தொடக்கப் போராக மாறிவிட்டது. நிற்க.

மக்களின் வாழ்க்கைத் தரம் உயர உயர, அவர் தம் ஆடைகளும் பலவாயின; வயிற்றின் பசி தீர்த்த பின்னர், மக்களுக்கு வேறுபல பொருள்கள் மீது ஆசை மிகுந்தது. அவ்வாசைகள் பலவாயினும், அவற்றைப் பொன் ஆசை, மண்ணாசை, பெண்ணாசை என்ற மூன்று பிரிவினுள் அடக்கி விடலாம். பகைநாட்டு ஆனிரைச் செல்வங்களைக் கொள்ளையிட்டு வரல் காரணமாகவும், அதைக் காத்தல் காரணமாகவும், மேற்கொண்ட முதற்போர், பொன்னாசை காரணமாம் போரின் முதல் நிலையாம்; அப்போர் நிகழ்ச்சிகளால் உணவுக் குறைபாடு தீரவே, அதை அடுத்துப் பொன்னும் பொருளும் போலும் பொருள் காரணமான போர் நிகழும்; அதை அடுத்து அந்நாட்டு அழகு மகளிரை அடைவதற்காம் போர் நிகழும்; அதை

அடுத்து, இவ்வாறு தமக்குப் பொன்னும், பொருளும், பெண்ணும் வேண்டுந்தோறும் போர் மேற்கொள்வதினும் அவைகிடைக்கும் நாட்டையே உடைமையாக்கிக் கோடல் நன்று எனும் நினைவால், நாடு குறித்த போர் நிகழும். இவ்வாறு படிப்படியாக வளர்ந்து, தன் நாட்டிலும் வளம் மிக்க நாட்டைக் கைப்பற்றக் கருதி ஓர் அரசன் படை கொண்டுவர, அவனைவென்று ஓட்ட அந்நாட்டு அரசன் மேற்கொள்ளும் நிலைக்கு வளர்ந்து விட்ட போரையே, ஆசிரியர் தொல்காப்பியனார், போர் எனும் பெயர் சூட்டி விளக்கியுள்ளார்.

ஒரு நாட்டின் மீது ஆசை கொண்டு, அதைக் கைப்பற்றும் கருத்தோடு படையெடுத்து வந்தவன், அதை விரும்பி வந்தவனாதலின், அவன் அவ்வாறு வருவதன் முன், தன் வலி, மாற்றான் வலி, தனக்கு ஆகும் காலம், மாற்றானுக்கு ஆகும் காலம், தனக்கு ஏற்ற இடம் ஆகியவற்றை ஆராய்ந்து கண்டு, மாற்றானை வெற்றி கொள்ளும் பெரும்படையோடு, தனக்கு ஏற்ற காலம் வரை காத்திருந்து, தனக்கு ஏற்புடைய இடம் தேர்ந்து வந்திருப்பன்; ஆனால், அந்நாட்டிற்கு உரியவனோ பகையரசன், தன் நாட்டின் எல்லைப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டான் என்ற செய்தியைக் கேட்ட வுடனே, உள்ள படையோடு விரைந்து களம் புகுவன். ஆகையால், வந்த வேற்றரசன் வெற்றி கொள்ள, ஊராண்டிருந்த உடையோன் தோற்று விடுதலும் உண்டு. நிறை வளனும் பெரும் பொருளும் உடைய நாடாள் வோனுக்கு, இத்தகைய இடையூறுகள் அவ்வப்போது நேர்வது இயல்பு என்பதை உணர்ந்திருந்தமையால், அத்தகைய காலங்களில் தனக்கும் தன் நாற்படைக்கும்

இடமாகுக என்றும், தன்னாட்டுப் பொன்னும் நவமணியும், பல்வேறு உணவுப் பண்டங்களுமாகிய செல்வங்களைப் பேணிக்காக்கும் இடமாகுக என்றும் நாட்டின் இடையே சிறியவும் பெரியவுமாகிய அரண்களை அக்கால அரசன் அமைத்திருந்தான்; மண்ணாசை கொண்டு வந்த மன்னனை வென்று ஓட்டும் முதல் முயற்சியில் தோற்றுப் போன மன்னவன், அவனை வென்று ஓட்டும் வலிவும், இடமும், காலமும் வாய்க்கும் வரை, அவ்வரண் புகுந்து அடங்கியிருப்பன். நாட்டிற்கு உரியோன் செயல் அதுவாகவே, அந்நாட்டின் மீது ஆசை கொண்டு வந்தவன், அவன் அடங்கியிருக்கும் அவ்வரணை அழித்து அவனைப் பணி கொண்டாலல்லது தன் கருத்து நிறைவேறாது என்பதை உணர்ந்து அவ்வரணை வளைத்துக் கொண்டு அழிக்கத்தலைப்படுவன். பகைவன் அந்நாடு புகுந்து, தான் அடங்கியிருக்கும் அரணையும் வளைத்துக் கொண்டு விட்டான் என்பது கண்ட அந்நாட்டரசன், அப்பகைவன் எதிர்பாரா வகையில்; அரணை விட்டு வெளிப்பட்டு, அவன் படையைத் திடுமெனத் தாக்கி அழித்து வெற்றி கொண்டு விடுவன். இவ்வாறு, பொன்னாசை குறித்தோ, பெண் ஆசை குறித்தோ, மண் ஆசை குறித்தோ தன் நாட்டின் மீது படையெடுத்து வந்து, தான் அடங்கியிருக்கும் அரணை வளைத்துக் கொண்டானை, வென்று ஓட்டி அரணைக் காக்க அந்நாட்டு மன்னன் மேற்கொண்ட போர்க்கே, ஆசிரியர் தொல்காப்பியனார், உழிஞைப்போர் எனும் பெயர் கொடுத்து விளக்கியுள்ளார்.

மண், பெண், பொன் என்ற இம் மூவாசைகளுக்கு அப்பாற்பட்ட ஆசை எதுவும் மக்களுக்கு இல்லை என்று கூறிவிடுவதற்கு இல்லை. "தோன்றின் புகழொடு தோன்றுக!"

என்று கூறியுள்ளார் வள்ளுவர். அது மக்களுக்குப் புகழின் பால் உள்ள ஆசையை உணர்ந்து கூறிய கூற்று ஆகும். கல்வி, செல்வம், கொடை என்பன போல்வற்றாலும் புகழ் பெறலாம் என்றாலும், பண்டை மக்கள், தாம் வழிவழி யாகப் பெற்று வந்த மறவுணர்வின் மிகுதியால், போரில் பெறலாகும் வெற்றி தரும் புகழையே விழுமிய புகழாகக் கருதினார்கள். அதனால் அப்புகழ் பெறுவான் வேண்டித் தன் நாட்டிற்கு அணித்தாக உள்ள நாடுகளையே அல்லாமல், தன் நாட்டிற்கு நனிமிகச் சேயவாய்க் கடல் கடந்த நாடுகளையும் வெற்றி கொண்டு வர விரும்பி னார்கள், அக்கால அரசர்கள். ஆநிரை குறித்தோ, அரும் பொருள் குறித்தோ, அழகிய நாடு குறித்தோ, மேற் கொள்ளும் போர்களை வென்று, அப்போர் மேற்கொண்டு வந்தாரின் ஆசைகளை அடக்குவது எவ்வாறு அறம் எனப்பட்டதோ, அவ்வாறே ஆற்றல் காட்டுவது ஒன்றே குறிக்கோளாய்ப் போர் தொடுத்து வருவோனை வென்று ஓட்டுவதும் அறமாம் எனப்பட்டது. ஆகவே, அது செய்ய மேற்கொண்ட போர்கள் சிலவும் பண்டைத் தமிழகத்தில் நிகழ்ந்தன: அத்தகைய போர்களையே, ஆசிரியர் தொல் காப்பியனார், தும்பைப் போர்கள் எனப் பெயர் சூட்டி விளக்கியுள்ளார்.

இவ்வாறு நிரை கவர மேற்கொள்ள வந்தவன் மேற் கொண்ட போர், அந்நிரை மீட்க வந்தவன் மேற்கொண்ட போர் என, நிரைகாரணமாக நிகழ்ந்த போர்கள் இரண்டு. நாடு கவர வந்தவன் மேற்கொண்டபோர், நாடு காக்க வந்தவன் மேற்கொண்ட போர் என நாடு காரணமாக நிகழ்ந்த போர்கள் இரண்டு. அரணழிக்க முனைந்தான் மேற்கொண்ட போர், அவ்வரணழியாது காக்க முனைந்தான்

மேற்கொண்ட போர் என அரண் காரணமாக நிகழ்ந்த போர்கள் இரண்டு; ஆற்றல் செருக்கால் அஃதுடையான் மேற்கொண்ட போர், அச்செருக்கடக்க முனைந்தான் மேற்கொண்ட போர் என ஆற்றல் காரணமாக நிகழ்ந்த போர்கள் இரண்டு; ஆகப் போர்கள் எண் வகைப்படும்; ஆனால், இவற்றுள் நிரை கவரவும், நாடு கைப்பற்றவும், அரண் அழிக்கவும், ஆற்றல் நிலை நாட்டவும் மேற்கொண்ட போர்கள் அழிவுப் போர்களாம். அறமல்லாப் போர்களாம். ஆகவே, ஆசிரியர் அவற்றைப் பாராட்டினாரல்லர்; நிரை மீட்கவும், நாடு காக்கவும், அரண் காக்கவும், ஆற்றல் செருக்கு அழிக்கவும் மேற்கொண்ட போர்கள் நான்கும், ஆக்கப் போர்களாம்; அறநெறிப் போர்களாம்; ஆகவே, ஆசிரியர் தொல்காப்பியனார் அப்போர்களுக்கே, முறையே, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை எனும் பெயர்கள் சூட்டிப் பாராட்டியுள்ளார்; அப் போர் நிகழ்ச்சிகளைக் கூறுவார், அப்போர்கள் நிகழ்தற்கு வழி வகுத்த அவ்வழிவுப் போர்கள் இல்லையேல், அவ்வாக்கப் போர்கள் இல்லையாகவே, அவ்வாக்கப் போர் நிகழ்ச்சிகளைக் கூறுவதன் முன்னர், அவ்வழிவுப் போர் நிகழ்ச்சிகளையும் விளக்கியுள்ளார்.

தொல்காப்பியர் பாராட்டும் பழந்தமிழ்ப் போர்கள் இந்நான்கேயாவும், அறவழி ஆட்சி நடாத்திய பண்டைத் தமிழகத்தின் பண்பாட்டுப் பெருமையினை உணராத பிற்கால இலக்கண ஆசிரியர்கள், அவ்வெட்டுப் போர் களுமே பாராட்டற்குரியன என்றும், ஆசிரியர் தொல் காப்பியனாரும் அவ்வெட்டுப் போர்களையும் எடுத்துக் கூறி விளக்கிப் பாராட்டியுள்ளார் என்றும் கூறுவாரா யினர்; தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணை

இயலை, அக்காலத் தமிழகத்தின் நிலையை அகத்துட் கொண்டு ஊன்றி நோக்குவார்க்கு, ஆசிரியர் கூறுவன எல்லாம், நின்று தாக்கிய ஆக்கப் போர்களே அல்லது, சென்று தாக்கிய அழிவுப் போர்கள் அன்று என்பது தெற்றெனப் புலனாகும். இக்கருத்தை ஆராய்ந்து நிலைநாட்டுவதோடு அந்நான்கு போர்களின் ஒவ்வொரு நிலையினையும் விளக்கும் துறைகளின் அமைதியினை, அத்திணைகளோடு பொருத்திக் காண்பிப்பதே இக் கட்டுரையின் நோக்கமாம்.

# 1

# வெட்சியும் கரந்தையும்

வெட்சியாவது நிரை கவர்தல், பகைவர் நாட்டுப் பசு நிரைகளைக் கவர்ந்து வரச்செல்லும் வேந்தரும் வீரரும் வெட்சி மலர் அணிந்து செல்வராதலின், நிரைகவரும் இவ்வொழுக்கம் வெட்சியெனும் பெயர் பெற்றது. வெட்சி வீரர் வெட்சிமலர் அணிதல், தாம் பிறந்த குடி இஃது என அறிவித்தற் பொருட்டு, சேரர் பனந்தோடும், சோழர் ஆத்திப் பூவும், பாண்டியர் வேப்பம் பூவும் அணிதலைப் போன்றதுதானோ அல்லது அம்மலர் அணிவதில் யாதேனும் தனிச் சிறப்பு உண்டோ என அறிதல் நலமாம்.

வெட்சி மலர் செந்நிறம் உடையது என்ப. நக்கீரரும் சீத்தலைச் சாத்தனாரும் "செங்கால் வெட்சி" (முருகு: 21; மணி: 3: 111) என, அம்மலர்க்குச் செந்நிறம் ஏற்றிக் கூறுதல் காண்க. நிரை கொள்ளச் செல்வார், வெட்சி மலர் அணிந்து சேறல், செவ்வானம் செல்வதுபோலும்,– "வெவ்வாள் மறவர் மிலைச்சிய வெட்சியால் செவ்வானம் செல்வது போல் செல்கின்றார்" – (பெரும் பொருள் விளக்கம்: புறத்

திரட்டு: 752) என்னும் செய்தியும் வெட்சி மலர், செந்நிறம் உடைத்து என்பதை உறுதி செய்தல் காண்க.[1]

நிறங்கள் ஏழு என்றாலும், எல்லா நிறங்களும் எல்லாராலும் விரும்பப் பெறுவது இல்லை. சிலர்க்குச் சில நிறங்களிடத்து மட்டுமே விழைவுண்டாம். அவ்விழைவு தானும், அவரவர் தம் மன இயல்புகளுக் கேற்பவே அமையும். துறவி காவியாடை விரும்புவன். செந்நிற ஆடை யிடத்து அவன் சிந்தை செல்வதில்லை. வெள்ளாடை விழுமிய எண்ணங்கள் வாய்க்கப் பெற்றவர் விரும்பும் ஆடையாம். பன்னிற ஆடைபால் பரிவுண்டாதல் பண்பின் நீங்கிய பழி நிறை வாழ்வினர்க்கு மட்டுமே இயல்பாம். இது யாவரும் அறிந்த உண்மை. ஆகவே, ஒருவர் விரும்பும் நிறங்களைக் கொண்டே அவர்தம் இயல்பினை அறிந்து கோடல் கூடும் என அறிக. இந்நெறியே நோக்கின், செந்நிறம் சினம் மிக்காரும் செருவேட்கையுடையாரும் விரும்புவது என்ப. "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" (தொல், சொல். 372) எனத் தொல்காப்பியனார் கூறுவதும் காண்க.

வெட்சி மலர் செந்நிறம் உடையது என்ப. ஆகவே, அதை அணிவார் சினமும் செருவேட்கையும் உடைய ராதல் வேண்டும். வெட்சி மலர் அணிந்து செல்லும் வெட்சி வீரர், அதற்கு ஏற்பச் சினமும் செரு வேட்கையும் இயல் பாகவே வாய்க்கப் பெற்றவராவர் என்பது அவ்வெட்சியார் யாவர் என்பதை அறிவார்க்கு நன்கு புலனாகும்.

---

1. **Vetchi** : The English name for Vicle Sativa, also known as Tare, a leguminous annual herb, with trailing or climbing stems, compound leaves with five or six pairs of leaflets. Reddish-purple flowers born singly or in pairs, the leafet-axis, and a silky pot containing four to ten smoothy seeds.

- Encyclopaedia Britanica Vol.23, Page 113.

புறப்பொருள் திணைகளுள், வெட்சித் திணையும் ஒன்றாகக் கொள்ளப் பெற்று, ஒரு நாட்டின் மீது போர் மேற்கொள்ளும் வேந்தர், அந்நாட்டின் மீது, தாம் போர் தொடுக்கப் போதலை அறிவிக்கும் வாயில்களுள் ஒன்றாக, அந்நாட்டு ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொள்வதாகப் பாடல் புனைந்து, அவ்வாறு நிரை கொள்ளும் வீரர் அனைவரையும் வெட்சியார் என அழைப்பது வழக்கமாகி விட்டது எனினும், வெட்சித் திணை இயல்பினை விளங்க உணர்ந்தார்க்கு, நிரைகோடல் ஒழுக்கத்தினைப் பண்டு மேற்கொண்டிருந்தவர், பாலை நிலத்தார் மட்டுமேயாவர் என்பது புலனாம்.

வெட்சி மலர், குறிஞ்சித் திணைக்கோ, முல்லைத் திணைக்கோ முழுவதும் உரிமையுடையதாகாது, பாலைத் திணைக்கே உரியதாம். பாலையாவது, முழுவதும் குறிஞ்சி என்றோ, முழுவதும் முல்லை என்றோ கோடற்கியலாது. இரண்டும் கலக்குமிடமாம் என்ப. "வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன், தான் நலம் திருகத் தன்மையிற் குன்றி, முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து, நல்இயல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப் பாலை என்பதோர் படிவம் கொள்ளும் காலை" (சிலம்பு: காடு காண், 62-66) என்ற பாவடிகளில், இளங்கோவடிகள் படைக்கும் பாலை நிலத்தின் பண்பினை உணர்க. மேலும் பாலையாவது முழுவதும் மலைகளையே கொண்டதோ, முழுவதும் காடுகளையே கொண்டதோ ஆகாது. சிறு மலைகளும், குறுங்காடுகளும் கலக்குமிடமாம் என்பதும் பொருந்தாது. குறிஞ்சியும் முல்லையுமாகிய அந்நிலங்களே மழைபெறா வறுமையால் தம் வளமும் வனப்பும் இழந்து தோன்றும், வேனிற் காலத்தில் பாலை யென்னும் பெயர் பெறும்

என்னும் கருத்துடையராவர் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் என்பது, மேலே காட்டிய சிலப்பதிகாரத் தொடர்க்கு, "வேனிலாகிய உரிய அமைச்ச னோடே, வெவ்விய விளக்கத் தோடேயமைந்த வேந்தன் தானும் வெம்மை மிகுதலானே, தமது இயற்கை கெட்டு, முல்லை, குறிஞ்சி என்னும் இரு திணையும் முறைமை திரிந்து, தமது நல்லியல்பை இழந்து, தம்மைச் சேர்ந்தோரை நடுங்குதுயரை உறுவித்துப் பாலை என்பதோர் வடிவைக் கொள்ளும் இந்தக் காலம்" என உரை கூறுவதோடு, "பாலைக்கு நிலமின்மையும், முல்லையும் குறிஞ்சியும் பின்பு பாலையாதலும் முன்னர்க் கூறப்பட்டன" என விளக்க வுரை கூறுவதாலும் விளங்கி நிற்றல் உணர்க.

இடைச்சொல் என்பதன் பெயர்க் காரணம் கூறவந்த ஆசிரிய சிவஞான சுவாமிகள், 'அஃது (பாலைத் திணை) எவற்றின் நடுவு நிற்பது என்று அவாவுங்கால், எண்ணு முறைமைக்கண் நடுவு நிற்பது என்றல் பொருந்தாது, முதற்பொருள் முறைபற்றி முல்லை முதலாக வைத்து எண்ணினார். உரிப்பொருள் முறைபற்றியும், புறப்பொருள் முறைபற்றியும் குறிஞ்சி முதலாக வைத்து எண்ணப்படும். அம்முக் கூற்று எண்ணு முறைமையினும் பாலைத்திணை நடுவு நிற்பது அன்றாகலின், இனி, ஏனை நால்வகை உரிப் பொருள்களினும் இடையிடையே பிரிவு நிகழ்தலின் அதுபற்றி நடுவு நிலைத்திணை என்றாரெனின் புணர்ச்சி யும் அவ்வாறு இடையிடையே நிகழ்தல் பற்றிக் குறிஞ்சியும் நடுவு நிலைத்திணை யெனல் வேண்டுமாகலானும், நடுவதாகிய நண்பகற் காலம் தனக்குக் காலமாதல் பற்றி அங்ஙனம் கூறினாரெனின், நடுவணதாகிய இடையாமம் தனக்குக் காலமாதல் பற்றிக் குறிஞ்சியும் அவ்வாறு

கூறப்படுமாகலானும், புணர்தற்கும் இருத்தற்குமிடைய பிரிவு வைத்தல் பற்றிக் கூறினாரெனின், இருத்தல் இரங்கலும் அவ்வாறாகலின், அது பற்றி முல்லை நெய்தல்களும் அவ்வாறு கூறப்படுமாகலானும், உலகியற் பொருளாகிய அறம் பொருள் இன்பங்களுள் நடுவண தாகிய பொருட்குத்தான் காரணமாதல் பற்றி அங்ஙனம் கூறினாரெனின், பரத்தையிற்பிரிவு, ஓதற்பிரிவு போல்வன ஏனையவற்றிற்கும் காரணமாகலின், பொருள் மாத்தி ரைக்கே காரணம் என்பது படாமையானும், அங்ஙனம் உரைப்பன எல்லாம் போலி என்று ஒழிக. மற்று என்னையோ காரணம் பற்றிக் குறியிட்டவாறெனின்:- 'நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப் படுதிரை வையம் பாத்திய பண்பே' என நிலம் பகுத் தோதுங்கால், நடுவணது எனக் குறியிட்டாராகலின், அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களும் ஆகாது, அவற்றின் வேறும் ஆகாது, தனக்குரிய நிலம் நடுநிகர்த்ததாய் நிற்றல் பற்றி நடுவு நிலைத் திணையெனக் குறியிட்டாளுதலே ஆசிரியர் கருத்தென்க. அங்ஙனமாதல், "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல் பழிந்து நடுங்குதுயர் உறுத்துப் பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்" என்பதனாலும் உணர்க. இங்ஙனம் குறிப்பிட்டமையின் பாலைக்கு நிலம் உண்டு என்பதும், அதனை ஏனை நிலங்களின் வேறாக வைத்துப் பகுத்தெண்ணுதல் மரபன்று என்பதூஉம் ஆசிரியர் கருத்தாதல் உணர்ந்து கொள்க," எனத், தம்முடைய தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் கூறுவனவும் ஈண்டு உணரத்தக்கனவாம். நிற்க.

மேலும், "கடற்றில் கலித்த முடச்சினை வெட்சி" (குறுந்: 209) என்பர், பாலையின் பண்பெல்லாம் உணர்ந்து

பாடிய, பாலைபாடிய பெருங்கடுங்கோ. ஈண்டுக் கடறு எனப்படுவது, கடத்தற்கரிய பாலைவழி என்றே பொருள்படும். "ஆறுசெல் வம்புலர் தொலைய மாறுநின்று கொடுஞ்சிலைமறவர் கடறு கூட்டுண்ணும்' (குறுந்தொகை: 331), "இருங்கடறு வளை இயகுன்றம்" (புறம் ; 140), "வெட்சிக் கானத்து வேட்டுவர் ஆட்டக் கட்சி காணாக் கடமா நல்லேறு கடறு மணிகிளரச் சிதறு பொன் மிளிரக் கடிய கதழும்" (புறம்: 202) என வரும் இடங்களிலெல்லாம், கடறு எனும் சொல் காட்டையோ, மலையையோ வரைந்து குறிப்பதாகாது, அவை இரண்டினுக்கும் இடைப்பட்ட பாலை நிலத்தினைக் குறிப்பதாகவே புலவர்கள் பாடியுள்ளமையும் உணர்க. வெட்சி மலர் பாலைக்கே உரியதாதல் இவற்றாலும் உறுதியாதல் காண்க. ஆகவே அவ்வெட்சி மலர் புனைந்து நிரை கொள்ளும் வீரர், அப்பாலை நிலத்தவரே யாவர் என்பது உறுதியாம்.

அம்மட்டோ! நிரை கொள்ளும் வெட்சி வீரர் யாண்டும் வேட்டுவர், குறவர் எனக் குறிஞ்சித் திணைப் பெயர்களினாலோ, ஆயர், கானவர் என்ற முல்லைத் திணைப் பெயர்களினாலோ அழைக்கப் பெறுவதில்லை. மாறாக மறவர், எயினர் என்ற பாலைத் திணைப் பெயர் களினாலேயே அழைக்கப் பெறுகின்றனர். வெட்சியார் வென்று கொணரும் ஆனிரை கண்டு மகிழ்வார் கூறும் கூற்று அமைந்த "தலைத் தோற்றம்" என்னும் துறை யினையும், அந்நிறைகளை வெட்சியார் ஊர் மன்றத்தே கொண்டு நிறுத்தியதைக் கூறும் "தந்து நிறை" என்னும் துறையினையும் விளக்க வந்த புறப்பொருள் வெண்பா மாலைச் செய்யுட்களில், "எயிற்றியவர் வாட்கண் இடன்ஆட", "கண்டாள் அணி நிரை வாண் முறுவல்

அம்மா எயிற்றி" (பு.வெ.மா. 1213) எனப் பாலை நிலத்துப் பெண்ணாகிய எயிற்றியே கூறப்பட்டுள்ளாள். இதுவே பொருளாக வரும் "இளமா எயிற்றி! இவைகாண் நின்ஐயர் தலை நாள் வேட்டகத்துத் தந்த நல் ஆனிரைகள்" (சிலம்பு. வேட்டுவவரி) என்ற சிலப்பதிகாரத் தொடரிலும் பாலை நிலத்துப் பெண்ணின் பெயரே இடம் பெற்றிருப்பது காண்க. ஆக, வெட்சி வீரர் பாலை நிலத்திற்கு உரியவராவர் என்பது இவற்றாலும் உறுதியாதல் உணர்க.

நிரை கோடல் ஒழுக்கத்தினைப், பாலை நிலத்து மறவர் மேற் கொண்டது ஏன்? நிலப் பகுதி, நான்கு வகையாகவும், ஐந்து வகையாகவும் பகுக்கப் பெறும் எனினும், அவற்றுள் குறிஞ்சி என அழைக்கப் பெறும் மலைநிலமே முதற்கண் தோன்றிய நிலமாம். "கல் தோன்றி மண் தோன்றாக் காலம்" (பு.வெ.மா. 35) எனக் கூறுவது காண்க. நிலங்களுள் குறிஞ்சி நிலமே முதற்கண் தோன்றிய நிலமாதலைப் போன்றே, மக்கள் முதற்கண் வாழத் தொடங்கிய இடமும் அம்மலை நாடேயாம். முதற்கண் தோன்றிய நிலத்தில், மக்கள் தம் வாழ்க்கையினைத் தொடங்குவதும் பொருந்தும் அன்றோ? தம் வாழ்க்கையினை, மக்கள் ஆண்டுத் தொடங்கியதற்கு, அதுவே முதற்கண் தோன்றிய நிலமாம் என்பதினும் அம்மக்கட்கு வேண்டும் உணவுப் பொருள்கள் அனைத்தையும், அன்னார் உழைப்பினை எதிர் நோக்காமலே அளித்தது அது என்பதே பொருந்தும் காரணமாம். மக்கள் முயற்சியில்லாமலே பெறலாம் காயும் கனியும் கிழங்கும் ஆண்டு நிறையக் கிடைத்தன. உண்ணுநீர்ச் சுனைகளும் ஆங்கே இருந்தன. காயும், கனியும், கிழங்கும் அருகிய காலத்தில், தன்னகத்தே வாழும் மக்கட்கு உணவாகிப் பயனளிக்கும்

ஆடு, மாடு, மான் போலும் உயிரினங்களும் ஆங்கே வாழ்ந்திருந்தன. மழையிலும் வெய்யிலிலும் கிடந்து வருந்தாதவாறு, மக்களுக்கு இருக்க இடம் அளித்து உதவும் மலைக் குகைகளும் மரப் பொந்துகளும் போலும் இயற்கையின் இயன்ற வாழிடங்களும் ஆண்டே இடம் பெற்றிருந்தன.

இவ்வாறு தமக்கு வேண்டும் உணவுப் பொருள்கள், தம் முயற்சி ஒரு சிறிதும் இன்றியே, எங்கும் எப்பொழுதும் கிடைத்தமையால், நாளைக்கு வேண்டும் என ஈட்டி வைக்க வேண்டிய இன்றியமையாமை, அம்மலை வாழ் மக்கட்கு உண்டாகவில்லை. ஆனால் அந்நிலை நெடிது நாள் நிற்கவில்லை. நாள் ஆக ஆக, மக்கள் தொகை பெருகிக் கொண்டே வந்தது. ஆனால், அம்மக்கள் வளர்ச்சிக்கு ஏற்ப, உணவுப் பொருள்கள் பெருகவில்லை. மக்கள் தொகை நாள்தோறும் பெருகிக் கொண்டே வந்தமையாலும், மக்கள் பெருக்கத்திற்கேற்ப உணவுப் பொருள்கள் பெருகாமை யோடு, அம்மக்கள் அவற்றைத் தொடர்ந்து தின்று கொண்டே வந்தமையால் இவை நாளடைவில் நனி மிகக் குறைந்து விட்டமையாலும், அம்மலை வாழ் மக்கட்கு உணவுக் குறைபாடு உண்டாயிற்று. ஆகவே, அம் மக்களுள் ஒரு சிலர் தாம் வாழும் அக்குறிஞ்சி நிலத்தைக் கைவிட்டு நீங்கி, அந்நிலத்தைச் சார்ந்துள்ள குறுமலைக் காட்டு நிலமாம் பாலை நிலத்துள் சென்று தங்குவராயினர். ஆனால் அப்பாலை நிலம், குறிஞ்சி போல் வளம்வாய்க்கப் பெற்றது அன்று. ஆகவே, அம்மக்கள் நிலைத்த குடியினராய் ஆண்டே வாழ்தல் இயலாது போயிற்று. அதனால், அவர்கள் அப்பாலையையும் கடந்து, அப்பாலையை அடுத்திருந்ததான மலை யொழிந்து காடு கொண்ட

நிலமாம் முல்லை நிலத்துட் புகுந்து வாழத்தலைப்பட்டனர். முல்லை நிலம் புக்க மக்கள், அந்நிலம், காடும் காடு சார்ந்த நிலமுமாகி வாழ்வதற்கு வாய்ப்பளிக்கும் நிலமாக ஓரளவு விளங்குவது கண்டு ஆண்டே நிலையாக வாழத் தொடங்கினர். காடுகளை அழித்துப் பயிரிடவும், ஒரு சிறிது பழகினர். விலங்குகளோடு வாழ்ந்து பழகிய பழக்கத்தின் விளைவால், அவ்விலங்குகளுள் ஆடுமாடு, எருமை போன்றன உடன் வைத்துப் பேணத் தக்கன, பெரும் பயன் தருவன என உணர்ந்தனர். அவ்வாறே அவற்றைப் பெருமளவில் வைத்துப் போற்றினர். அவர் தம் செல்வமாக அவை போற்றப்பட்டன. அவர் செல்வ வாழ்வை அளந்து காட்டும் அளவு கோலாக அவை கொள்ளப்பட்டன. அவற்றை நிறையக் கொண்டார் செல்வ வாழ்வினராவர் எனவும், குறையக் கொண்டார் வறுமையில் வாடுவோ ராவர் எனவும் மதிக்கப் பெற்றனர். "ஓர் ஆன்வல்சிச் சீரில் வாழ்க்கை" (குறுந்; 295), "சிறப்பும் சீரும் இன்றிச் சீறூர் நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை, ஓர் ஆ யாத்த ஒரு தூண் முன்றில், ஏதில் வறுமனை" (அகம்: 369), "தடமருப்பு எருமை மடநடைக் குழவி","தூண்தொறும் யாத்த காண்தகு நல்இல்" (நற்: 120) என்ற தொடர்களில் புலவர்கள் கையாண்டிருக்கும் செல்வ அளவுகோலின் இயல்பினைக் காண்க. ஆகப் பண்டு, கால்நடைகளே செல்வமாகக் கொள்ளப்பட்டன. மாடு எனும் ஒரு சொல், ஆவைக் குறிக்க வழங்கும் சொல்லாதலோடு, செல்வத்தைக்குறிக்க வழங்கும் சொல்லும் ஆதல் இவ்வுண்மையை உறுதி செய்து நிற்றல் உணர்க. "கேடுஇல் விழுச்செல்வம் கல்வி; ஒருவற்கு மாடு அல்ல மற்றையவை" (குறள்: 400) எனும் குறளில், மாடு எனும் சொல் செல்வம் எனும் பொருளில் ஆளப்

பட்டிருப்பது. அறிக.[1] இவ்வாறு, முல்லை நிலம் புக்க மக்கள், ஆண்டு ஆனிரைகளைப் பேணிப் பெருக்கி வாழ்ந்தமை யால் அவர்கள் வாழ்வு ஓரளவு அமைதியுடையதாயிற்று. மோர் விற்றுப் பெறலாம் சிறுபணத்தால் உணவுப் பொருள் வாங்குதல் வேண்டும்; நெய் விற்றுப் பெறலாம் பெரும் பணத்தால் பசும் பொற்கட்டி வாங்குவதினும், பசுங் கன்றும் எருமை நாகும் வாங்குதல் வேண்டும் என்பதை அறிந்திருந்த ஆயர் முதுமகளிரின் வளத்தக்க வாழ்க்கை வனப்பினைப் புலவர் பாராட்டும் நிலை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இடம் பெற்றுவிட்டது. "ஆய்மகள் அளைவிலை உணவிற் கிளையுடன் அருத்தி, நெய் விலைக்கட்டிப் பசும்பொன் கொள்ளாள், எருமை, நல் ஆன், கரு நாகு பெறூஉம்" என்ற பெரும் பாணாற்றுப்படை அடிகளைக் காண்க. நிற்க.

குறிஞ்சி நிலத்தே வாழ்க்கையைத் தொடங்கிய மக்கள் அனைவருமே முல்லையுள் குடி புகுந்து விட்டாரல்லர். ஒரு சிலர் அக் குறிஞ்சியிலேயே தங்கி விட்டனர். ஒரு சிலர், இடைவழியில் இருந்த பாலை நில வாழ்க்கையிலேயே பழகிவிட்டனர். பாலை, குறிஞ்சி நிலத்தின் மலை வளமோ

---

1. "Domesticated Cattle existed in Egypt about 3500 B.C. and possibly much earlier. The word Cattle, etymologicaly merely denote a form of property. Before the days of settled Community, nomadic man possessed herds of cattle which represented his wealth."

- Encyclopaedia Britanica Vol.5, Page 46.

Cattle, old English 'Catel' = goods Cattle from old French, "Catel", "chatel" = property in general From later Latin "Capitale", "Capitale" = property, Capital. From Latin "Capitalis" Chief, Capital From Caput = The head Cattle - Chattel - Capital.

முல்லை நிலத்தின் காட்டுச் செல்வமோ வாய்க்கப் பெறாத வன்னிலம் ஆதலின், ஆண்டு வாழத் தொடங்கியோர், தம் வாழ்க்கைக்காம் வழக்கினைக் காணாராயினர். வயிற்றுப் பசி, அவர்கள் உள்ளத்தில் வற்றாச் சினத்தீயை மூட்டிற்று. அதனால், அவர்கள் பழிபாவங்களை எண்ணிப் பாரா ராயினர். தாம் வாழும் அப்பாலை வழியினைக் கடந்து செல்வார் கொண்டு செல்லும் பொருள்களைக் கொள்ளை யடித்து உண்ணும் கொடியராயினர். பாலையில் ஆறலைத்து வாழும் வாழ்வினை மேற்கொண்டு வாழ்ந்த அம்மறவர், தாம் வேண்டும் பொருளை ஆண்டுப் பெற இயலாக் காலத்தில், அப்பாலையை அடுத்துள்ள நாடுகளுள் புகுந்து கொள்ளையிட்டு வாழும் வாழ்க்கை யினை மேற்கொண்டனர். அப்பாலையை அடுத்து ஒரு பால் குறிஞ்சியும், ஒருபால் முல்லையும் உளவெனினும், குறிஞ்சி அந்நிலத்துவாழ் மக்கட்குத் தேவையாம் பொருள்களைத் தருவதே அரிது; ஆகவே, ஆண்டுவாழ்வார் ஈட்டி வைத்திருக்கும் பொருள் எதுவும் இராது என்பதை, அக் குறிஞ்சியில் ஒரு காலத்தில் வாழ்ந்திருந்தவராய அம் மறவர் அறிவர் ஆதலின், அவர்கள் தமக்குத் தேவையாம் பொருள் குறித்துக் குறிஞ்சி நிலக் குறவர்பால் செல்லாராயினர். முல்லைநிலத்து மக்களாகிய ஆயர், ஆடு மாடுகளைப் பழக்கி, ஒன்று பலவாகப் பெருக்கிப் பயன் கொண்டு வாழ்ந்திருந்தனர். அதை அறிந்திருந்தார்கள் பாலை நிலத்து மறவர். அதனால் தமக்குப் பொருள் குறைபாடு நேருந்தோறும், முல்லை நிலம் புகுந்து, ஆயர் களின் ஆனிரைகளைக் கைப்பற்றிச் சென்று வாழ்தலை வழக்கமாகக் கொண்டு விட்டார்கள் அம்மறவர்கள். நிரைகோள் ஒழுக்கம் தொடக்கத்தில் தோன்றிய முறை இதுவே.

உணவுக் குறைபாடுற்றுப் பசியான் வருந்திய பாலை நிலத்து மறவர், தம் பசி போக்க மேற்கொண்ட ஒழுக்கமே நிரை கோடல் என்ற பண்டை நிலை மாறிப் பகைவர் நாட்டுப் பசுநிரைகளை அந்நாட்டின் மீது படையெடுத்துச் செல்ல விரும்பும் அரசன் கைப்பற்றிச் செல்வதே வெட்சியாம் என ஆயிற்று எனினும், பக்கத்தில் உள்ளோர் பொருளைப் பசித்தவர் வலிதிற் பற்றிக் கொள்வதே வெட்சியாம் என்ற அதன் உண்மை இயல்பில் சிறிதும் மாறவில்லை.

செம்மறியாட்டுக் கிடாயின் இரு கொம்புகள் போல் சுருண்டு, பிடரி மறையத் தொங்கும் தலைமயிரும், செம்மை நிறம் மாறாக் கண்களும் கொண்டு கண்டார் அஞ்சும் உருவம் வாய்க்கப் பெற்று, ஆறலைத்து வாழும் வாழ்க்கை மேற்கொண்டு, கைந்நிறையப் பொருள் கொண்டு, காட்டு வழியைக் கடந்து போவாரை எதிர்நோக்கிக் கூரிய அம்பேந்திய கையினராய்க் காத்துக் கிடந்து, அவ்வழி வருவார் ஏழை எளியார் யாவரேயாயினும் அனைவரை யும் கொன்று, அவர்பால் உள்ள சிறு பொருளையும் கொள்ளையிட்டுக் குடியோம்பியும், தம் வறுமை வாடாமையால், அண்டை நாடுகளுள் புகுந்து அந்நாட்டு ஆனிரைகளை, அவற்றைக் காத்து நிற்கும் காவல் வீரர்களைக் கொன்று உயிர் போக்கிக் கவர்ந்து வந்து வறுமை தீர்ந்து வளங்கண்ட தமிழகத்து மறவர் வரலாறும், வலித்துக் கட்டிய வில் நாணில் பூட்டிவிடும் அம்புகள் விர்ர் எனும் ஒலி எழுப்பியவாறே விரைந்து வெளிப்பட, காட்டுக் கொடு விலங்குகளும் கண்டு அஞ்சும் வேட்டை நாய்கள் பின் தொடர்ந்து வர, கேட்டாரை நடுங்கப் பண்ணும் பம்பைப் பறையினை முழக்கிக் கொண்டு பக்கத்து

நாடுகளுள் புகுந்து, ஆனிரைக் காவலரை அழித்துவிட்டுக், கன்றுகளோடும் காளைகளோடும் கூடிய ஆனிரையை இரவோடு இரவாகக் கொண்டு சென்றோராகிய, வேங்கடத்திற்கு அப்பால் உள்ள நாட்டை வாழிடமாகக் கொண்ட வடுகர் வரலாறும், பசித்தவர், பக்கத்தில் உள்ளார் பொருளைக் கொள்ளையிட்டுச் செல்லும் கொடுமையை அடிப்படையாகக் கொண்டு தோன்றியதே, ஆனிரை கவரும் வெட்சியர் தொழில் என்பதை உறுதி செய்வது உணர்க. இவ்வொழுக்கம் பண்டைத் தமிழகத்தில் மட்டுமே - பண்டைத் தமிழரிடையில் மட்டுமே இடம் பெற்றிருந்தது என்று எண்ணற்க. நாகரிகத்தின் நிழல் தோன்றாத் தொடக்க நிலையில் உலகெங்கும் நிகழ்ந்தது இதுவே என்பதற்கான உலக வரலாற்றுச் சான்றுகள் நிறைய உள.[1]

பசித்தவர், பக்கத்தில் உள்ளார் பொருளைக் கொள்ளையடித்து உண்ணும்கொடுமையை அடிப்படை

1. "Warlike for aiming at the seizure of movable wealth played a considerable role in human history down to comparatively recent times. The Syrian Coast civilization was always exposed to Bedo win raids. The Balkan Peninsula and the region south of Caucasus were anciently harassed by the Scythians. The chinese centers of culture have been subject to frequent attacks by the wild horsemen of Mongolia and Siberia."

- Encyclopaedia of the Social Science : 12:331

"All Cattle raids were chiefly for Cattle. There were large number of hymns in the Atharva Veda, praying for the portection of Cows and Cattle. To the primitive men Cattle constituted wealth and a Cattle raid meant the loss of ones property. This primitive from the Cattle lifting survived even when people became civilized is seen in the Maha baratha."

– The Art of War in Ancient India, by V.R.R.

யாகக் கொண்டதே, நிரைகவரும் வெட்சியார் ஒழுக்கம் என்ற கருத்தினையே, புறப்பொருள் வெண்பா மாலைச் செய்யுட்களும் வற்புறுத்துகின்றன. வெட்சியாவது, வேற்றரசர் நாட்டுப் பசு நிரைகளைப் பற்றிக் கொணர்தல். அஃது இரு வகைப்படும். அரசன் ஏவ அவன் வீரர் சென்று கைப்பற்றிக் கொணர்தல். வீரன் ஒருவன் தானே சென்று கைப்பற்றிக் கொணர்தல் என்பனவே அவ்விரண்டும் என்று கூறி, அவற்றை விளக்குவதற்கு இரு வெண்பாக் களையும் அளிக்கிறது அப்புறப் பொருள் வெண்பாமாலை. அவ்வெண்பாக்களின் பொருளை நோக்கினால், வெட்சித் திணை குறித்து, ஈண்டுக் கூறிய கருத்தே ஏற்புடைத்தாம் என்பது இனிது விளங்கும்.

வீரன் தானே சென்று ஆனிரை கவர்தலாம் தன்னுறு தொழில் எனும் துறைக்கு எடுத்துக்காட்டாக வந்த பாட்டில், ஓர் ஊரின் இயல்பு உணர்ந்தான் ஒருவன், அவ்வூர்க் கள்விலையாட்டிபால் சென்று, அவள்பால் வழக்கமாக வந்து கள்ளுண்ணும் ஒரு வீரன், கடுஞ்சின முடையவனாய்க் காலில் கழல் புனைந்து நிற்பதை அறிவித்து, அவன் நிலை நிரைகோடற்குச் செல்கின்றனன் என்பதை உறுதியாக்குகிறது. ஆகவே, நாளைக் காலை அவன் கைப்பற்றிக் கொணரும் பகைவர் நாட்டுப் பசுநிரைகள் நின் கடையின் மன்றத்தே கள்விலையாகக் கொண்டு நிறுத்தப் போவது உறுதி. ஆகவே, கள்விலை யாகத் தரக்கூடிய பொருள் எதுவும் அவன்பால் இல்லை யெனக் கொண்டு, அவனுக்குக் கள் அளிக்க மறுத்து விடாதே! மறுப்பதை அம்மறவன் இனியும் பொறுத்துக் கொள்வானல்லன்!' எனக் கூறியதாகக் கூறப்பட்டுள்ளது.

"அறாஅ நிலைச்சாடி ஆடுறு தேறல்
மறாஅல்; மழைத்தடங் கண்ணி! – பொறாஅன்

கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை
நெடுங்கடைய நேரார் நிரை."
—பு.வெ. மாலை:– 2

இதனால், அம்மறவனிடத்தில் கைப்பொருள் கரைந்து விட்டது; கள் விலையாகத் தருவதற்காம் சிறு பொருளும் அவன்பால் இல்லை. அவன் வறுமைநிலையை அவ்வூர்க் கள் விலையாட்டியும் உணர்ந்து கொண்டாள்; அதனால் அவனுக்குக் கள் அளிக்க மறுத்து விட்டாள் அவள். அதனால் அவனுக்குக் கள் கிடைப்பதும் அரிதாகி விட்டது. அந்நிலை அவனுக்கு மாறாச்சினம் தந்தது. அதனால் அண்டை நாடுகளுள் புகுந்து, அந்நாட்டு ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொணரத் துணிந்தான். அதற்காகவே படையேந்திப் புறப்பட்டான் என்பது பெறப் படுகிறது. படவே, பற்றாமையால் வந்த பசிக்கொடுமையே, பகைவர் நாட்டுப் பசு நிரைகளைப் பற்றிக் கொணருமாறு அவனைத் தூண்டிற்று எனப் பட்டு நிரைகோடற்காம் பண்டைக் காரணத்தின் பிறழாது, அதற்கு அரண் செய்து நிற்பதைக் காண்க. இனிக், "கள்விலையாட்டி மறுப்பப் பொறா மறவன் கைவில் ஏந்திப்புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரை கருதிப் போகும் போலும்" என வரும் சிலப்பதிகாரத் தொடர்ப் பொருளும் (சிலம்பு: வேட்டுவவரி.) புறப்பொருள் வெண்பா மாலைச் செய்யுட் கருத்தோடு ஒத்து நின்று நிரைகோடற்காம் காரணம் குறித்து மேலே கூறிய கருத்தினை அரண் செய்து நிற்பது அறிக.

இனி, மன்னுறு தொழிற்கு உதாரணமாக வந்துள்ள வெண்பாமாலைச் செய்யுள் அரசன் ஒருவன், தன் படையைச் சேர்ந்த வீரன் ஒருவன் வில்லைச் செப்ப னிடவும், அம்புகளைத் தேர்ந்தெடுக்கவும் கண்டான்.

அவன் செயல் விட்டெரியும் பெருநெருப்பினிடையே மேலும் பல மரங்களை வெட்டியிடுவது போலாம் என உணர்ந்தான். உடனே அவ்வில் வீரனை அழைத்து, அவன் வேற்படை ஆற்றலையும், காளைபோலும் அவன் இளமைச் செவ்வியினையும் நனிமிகப் பாராட்டிய பின்னர், பகைவர் படையைப் பாழ்படுத்தி, அவர் தம் ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொணருமாறு பணித்தான் என்ற பொருள் அமையப் பெற்றுள்ளது.

"மண்டும் எரியுள் மரம் தடிந்து இட்டற்றாக்
கொண்ட கொடுஞ்சிலையன் கோல் தெரியக் – கண்டே
அடையார் முனையலற, வை இலை வேல் காளை!
விடைஆயம் கொள்களன்றான் வேந்து."

–பு.வெ. மாலை.1

இப்பாட்டின் பொருளைப் பார்ப்பதன் முன்னர், அக்கால அரசன் இயல்பு யாது? அவனுக்கும் அவன் நாட்டு மக்கட்கும் இடையே நிலவிய உறவு எத்தகைத்து? என்பனவற்றை அறிந்துகொள்வது மிகவும் நன்று. தொடக்க நிலையில் எவர்க்கும் அடங்கி வாழாது தத்தம் விருப்பம் போல் தனித்து வாழ்ந்து பழகிய மக்கள், நாளடைவில் தம்மையும் தம்பொருளையும் பேணிப்புரக்கும் தலைவன் ஒருவன் தேவை என உணர்ந்து, அத்தகைய தலைவனைத் தம்முள்ளே தேர்ந்து கொண்டனர். அவ்வாறு தேர்ந்து கொண்ட அத்தலைவனே பிற்காலத்தில் அரசன் என அழைக்கப் பெற்றான். அக்காலத்தில் அரசனே அனைத்தும். மக்கள் உயிரே மன்னன்தான். மக்களுக்கு உணவளித்துப் புரப்பதும், அவன் கடனே; எதற்கும், மக்கள் மன்னனையே எதிர் நோக்கினர். தம் வளமார் வாழ்விற்கும் அவனே காரணம்; தம் வறுமைத் துயர்க்கும் அவனே காரணம் எனக் கருதினர். அதனால் வளமார் வாழ்வு

பெற்றக்கால் அவனை வாழ்த்தினர்; வணங்கினர்; வறுமையில் வாடிய்க்கால், அவனைத் தூற்றினர்; தொலைக்கவும் துணிந்தனர். அரசனும் அவன் குடிகளும் அன்று கொண்டிருந்த உறவும் தொடர்பும் இன்ன.

அரசனும் அவன் குடிகளும் அன்று கொண்டிருந்த இவ்வுறவு முறையினையுட் கொண்டு, புறப்பொருள் வெண்பாமாலைப் பாடற் பொருளைப் பார்த்தல் வேண்டும். அரசன் படையைச் சேர்ந்த வீரன் ஒருவன், போருக்கு ஆவன புரியலாயினன். ஆனால், போருக்குப் போகுமாறு அந்நாட்டு அரசன், அவனை அப்போது பணிக்கவில்லை. போரிடும் எண்ணமே அரசனுக்கு அப்போது உண்டாகவில்லை. ஆகவும் அவன் வீரன் படைக்கலம் ஏந்த எண்ணுகின்றான். இதைக் கண்ணுற் றான் அரசன். அவன் படைக்கலம் ஏந்துவது ஏன்? என எண்ணலாயினன். பயிற்சி பெற்ற படையமைத்து வாழும் அரசன், அப்படை வீரர்க்குக் குறைநேரா வண்ணம் நின்று காக்கக் கடமைப் பட்டவனாவன். நாட்டு மக்கள் துயர் துடைப்பதினும், படையாளர் துயர் துடைத்தலை அரசன் விரைந்து மேற்கொள்ளுதல் வேண்டும்.

நல்ல போர் வீரர்களைத் தேர்ந்து பணி கொள்வ தோடு தன் கடமை தீர்ந்து விட்டதாகாது. தன் வாழ்வும் தன் நாட்டின் வாழ்வும் அப்போர் வீரர்களின் அயரா நற்றொண்டிலேயே அமைந்துள்ளன ஆதலின், அரசன் வாழ்வே தம் வாழ்வு, அவன் பொருட்டு உலையாது உழைப்பதே தம் கடனாம் என்ற உணர்வு அவர் உள்ளத்தில் இயல்பாகவே ஊற்றெடுத்துப் பெருகி எந்நிலையிலும் பாய்ந்து கொண்டே யிருக்கும் வகையில், அவர் உள்ளம் உவக்கும் உறுபொருள்களை ஓயாது அளிப்பதும் தன்

நீங்காக் கடமையாம் என்றும் அரசர்கள் எண்ணுதல் வேண்டும். பண்டு பாராண்ட பைந்தமிழ் நாட்டுப் பேரரசர்கள் இப்பேர் உண்மையினை உணர்ந்து அதற்கு ஏற்ப நடந்து வந்தார்கள். *'வேந்தே! உன் வெற்றிமிகு வாழ்விற்கு வழிகோலியவர் நின் படை வீரராவர். ஆதலின் அவர்கள் நல் வாழ்வில் நீ என்றும் நாட்டம் உடையை யாதல் வேண்டும். நெல்விளை நன்செய்களில் கதிர் உண்ண வந்து படியும் பறவைகளை ஓட்டிக் காவல் புரிந்திருப்போர் பசிவந்து வருத்தக் காவலைக் கைவிட்டு வீடு சென்று விடாது, அணித்தாக ஓடும் உப்பங்கழியில் கொண்ட மீனைப் பனங்கருக்குத் தீயில் தீய்த்து உண்டும், கையோடு கொண்டு சென்றிருக்கும் புதிய கட்டெளிவைக் குடித்தும் பசி தீராதாயின் தெங்கிளங் காய்களை வேண்டுமட்டும் உதிர்த்து வெட்டிப் பருகிப் பசி தீர்ந்து மகிழ்தற்கு வாய்ப்பளிக்கும் வளநாடுகளை, அவ்வீரர்களின் உடைமை யாக்குக! அப்பெரு வாழ்வு வாழும் அவர்கள், உன்மறதி காரணத்தால், நான்கே கால்கள் நடப்பெற்றுத் தழை இட்டு வேயப்பட்ட சின்னஞ்சிறு குடிசை வாழ்வினராகி வருந்த

---

"நெல்விளை கழனிப் படுபுள் ஓப்புநர்
ஒழிமடல் விறகில் கழிமீன் சுட்டு
வெங்கள் தொலைச்சியும் அமையார், தெங்கின்
இளநீர் உதிர்க்கும் வளமிகு நன்னாடு
பெற்றனர் உவக்கும் நின் படைகொள் மாக்கள்
பற்றா மாக்களின் பரிவு முந்துறுத்துக்,
கூவை துற்ற நாற்கால் பந்தர்ச்
சிறுமனை வாழ்க்கையின் ஒரீஇ, வருநர்க்கு
உதவியாற்றும் நண்பின் பண்புடை
ஊழிற்றாக நின் நீர்மை"

—புறம்: 29

நேர்ந்து விடாவாறு, பொருள் வேண்டி உன்னை நாடி வருவார்க்கும் தாமே தம் பொருள் வழங்கி அவர்கள் வறுமை போக்கி வழியனுப்பும் வளமார் வாழ்விலேயே அவர்கள் என்றென்றும் இருக்கும் வண்ணம் உன் அரசியல் முறைகளை வகுத்துக் கொள்வாயாக!" எனப் புலவர் புகன்ற பொன்னுரையின் வழிநடந்து பொலிவு பெற்றான் சோழன் நலங்கிள்ளி, என்ற புறநானூற்றுச் செய்தியினையும் ஈண்டு நினைவு கூர்க. நிற்க.

தன் படை வீரர்களை, இவ்வாறு பெரு வாழ்வில் வைத்துப் புரத்தற்காம் பெருஞ் செல்வத்தினை, அரசன், தன் நாட்டிற்குள்ளேயே பெற இயலாதாயின், அப் பொருளைப் பிற நாடுகளிலிருந்தேனும் பெறுதல் வேண்டும், இஃது அரசன் கடமை. அவன் அக்கடமையை மறந்து, தன் படையினருக்கு வேண்டும் பொருள் அளித்துப் பேணத் தவறின், படையாளர் அமைதி யிழந்து போவர். அமைதி இழந்த படை, தன் அரசனையே எதிர்த்து எழுதலும் கூடும். ஆகவே, அந்நிலை உண்டாகா வண்ணம், அரசன், படையாளர் சிந்தையினை வேற்று நாட்டுச் செல்வங்களைக் கவர்ந்து வருதற்கண் திருப்பி விடுதல் வேண்டும்.

அக்கால அரசர்கள், இவ்வுண்மையைக் கடைப் பிடித்து ஒழுகி வந்தார்கள். அதனாலேயே, அண்டை நாடுகளோடு ஓயாது போர் தொடுத்து வந்தார்கள். ஆகவேதான், தன் படை வீரன் போருக்குத் தயாரா கின்றான் என்பது உணர்ந்த அரசன், அவனைப் பகைவர் நாட்டுப் பசுநிரைகளைப் பற்றிக் கொணருமாறு பணித்தான் என்கிறது அப்புறப்பொருள் வெண்பா மாலைச் செய்யுள். தன் பேராண்மையினைப் பிறர் கண்டு

பாராட்டுமாறு வெளிப்படுத்தற்காம் வாய்ப்போடு, தன் வறுமை ஒழிந்து வளம் பெறுதற்காம் வழியும் கிடைப்பது காணும் வீரனும், தன் அரசன் மீது சென்ற சினத்தைச் சிதைத்துப் பகை நாட்டு ஆனிரைமீது போக்குவன். ஆகவே, மன்னுறு தொழிலாக எழும் வெட்சியும், வீரன் வறுமை காரணமாகவே எழுவதாம் என்பது தெளிவு. ஆகப் பசித்தவர் பக்கத்தில் உள்ளார் பொருளைக் கொள்ளை யிட்டு வருவதற்கு எழுவதே வெட்சியாம் என்ற உண்மை இதனானும் உறுதி செய்யப்படும். படவே, பொருள் ஈட்டி வாழ மாட்டாப் பாலை நிலத்து மறவர், ஆனிரைச் செல்வத்தால் அகமகிழ்ந்து வாழும் முல்லை நிலத்து ஆயர் பொருளைக் கொள்ளையிட்டுண்ட கொடிய ஒழுக்கத் தினை ஒட்டியே மன்னுறு தொழிலாம் வெட்சியும் தொழிற் படுகிறது என்பது முடிபாதல் உணர்க.

பாணர் முதலாம் இரவலர் தம் இன்மை நிலை கூறிவந்து இரந்து நிற்க, அவர்க்குத் தருதற்காம் பொருள் தன்பால் இல்லையாகவே, அப்பொருளைப் பிறநாடுகளில் இருந்தேனும் கொணர்ந்து தருதல் வேண்டும் என்னும் கருத்துடைய கொடை வீரன் ஒருவன், தனக்குப் படைக்கலம் பண்ணித் தரும் தன்னூர்க் கொல்லன்பால் அவ்விரவலர் கூட்டத்தை அழைத்துச் சென்று, அவனுக்கு அவர்களின் வறுமைக் கொடுமையைக் காட்டி, அது துடைக்கத் தான் மேற்கொள்ளப் போகும் போர்க்கு வேண்டும் படைக்கலங்களைப் படைத்துத் தருமாறு வேண்டுவன் என்னும் பொருள் அமைய வந்த புறநானூற்றுச் செய்யுளும், பசித்தவர், பக்கத்தில் உள்ளார் பொருளைக் கொள்ளையிடுவதற்கு மேற்கொள்ளும் போரே வெட்சிப் போராம் என்ற உண்மையினை உறுதி செய்து நிற்றல் காண்க:

"யாம் தன் இரக்கும் காலைத் தான் எம்
உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை இரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே." —புறம்: 180

வாட்படையும் விற்படையும் உடையராய் விரைந்து சென்ற வெட்சியார், ஆனிரைகளைக் காத்து நின்ற கரந்தையாரை வென்று துரத்திவிட்டு, அவ்வானிரைகளைக் கைப்பற்றிக் கொண்டு, காட்டு வழியே ஓட்டி வருங்கால், இடைவழியில் தம் பசிநோய் மிகவே, அவ்வானிரையுள் கொழுத்த ஆவொன்றைக் கொன்று அதன் ஊனை நெருப்பிலிட்டுப் புழுக்கி, வேம்பின் நீழற்கண் இருந்து உண்டு செல்வராயினர் எனக் கூறும் அகநானூற்றுச் செய்யுளும்,

"வய வாள் எறிந்து வில்லின்நீக்கிப்
பயநிரை தழீஇய கடுங்கண் மழவர்
அம்பு சேட்படுத்து வன்புலத்து உய்த்தெனத்
தெய்வம் சேர்ந்த பராரை வேம்பின்
கொழுப்பா எறிந்து குருதி தூஉய்ப்
புலவுப் புழுக்கு உண்டவான்கண் அகல் அறை" —அகம்: 309

வடித்துக் கூராக்கிய அம்பும், நாணேற்றி வளைந்த வில்லும் உடையராகிய வெட்சி வீரர், கண்டவர் அஞ்சிக் கலங்குமாறு வளைத்து வில்லிலிருந்து விரைந்து பாயும் அம்புகளின் துணையால், பகை நாட்டு ஆனிரைகளைக் கைப்பற்றி வருங்கால், இடைவழியில் வந்தெதிர்த்த ஆனிரை ஓம்பும் கரந்தை வீரரை, ஆகோட் பறை ஒலிக்க வென்று துரத்திய வெற்றிக் களிப்பால் வாகை அணிந்து, இடை வழியில், உமணர் எனும் உப்பு வணிகர் மூட்டி விட்டுச் சென்ற கல் அடுப்பில் ஊனை அவித்து உண்டு

மகிழ்வர் என்ற செய்தியைத் தெரிவிக்கும் அகநானூற்றுச் செய்யுளும்,

"உமண் உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பில்
வடியுறு பகழிக் கொடுவில் ஆடவர்
அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்
பல்லான் நெடுநிரை தழீஇக் கல்லென
வருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தர்
கனைகுரல் கடுந்துடிப் பாணி தூங்கி
உவலைக் கண்ணியர் ஊன் புழுக்கு அயரும் கவலை."

—அகம்: 159

பண்டு ஆனிரை கவர்ந்தார், தம் வறுமை போகவே கவர்ந்தவராவர் என்பதை நிலை நாட்டி, வறுமையுற்றவர், தம் வயிற்றுப் பசியினைப் போக்க மேற் கொண்ட ஒழுக்கமே வெட்சி ஒழுக்கம் என்ற உண்மையினை உறுதி செய்து நிற்றல் உணர்க.

உயிரினங்களுள் ஆண்களைக் குறிக்கும் பெயர்கள் இவை இவை; அப்பெயர்களுள் இன்ன பெயரால் குறிப்பிடப் பெறும் ஆணுயிரினங்கள் இவை இவை என்பனவற்றை விளக்கும் பகுதியில், மோத்தை, தகர், உதள், அப்பர் என்ற இவை ஆட்டின் ஆண் இனத்தைக் குறிக்கும் பெயர்களாம். "மோத்தையும் தகரும், உதளும், அப்பரும் யாத்த என்ப யாட்டின் கண்ணே" (மரபு. 47) என்ற ஆசிரியர் கூற்றிலோ, ஆசிரியர் கூறாதனவற்றை, மிகையாலும், இலேசாலும் கொள்ளும் உரிமையுடைமையால், "யாத்த என்றதனால், கிடாய் என்பதும் யாட்டிற்குப் பெயராகக் கொள்க" எனக் கூறும் உரையாசிரியர் கூற்றிலோ, ஆட்டின் ஆணைக்குறிக்கும் பெயர்களுள் ஒன்றாக 'விடை' என்பது கொள்ளப்படவில்லை யாதலாலும், 'குரங்கின் ஏற்றைக் கடுவன் என்றலும்" எனத் தொடங்கும் சூத்திரத்தின்

உரையில், "கடனறிந்தோர் என்றதனான்வெருகினை விடை என்றலும் போல்வன பலவும் கொள்க" என்பதற்கு ஏற்ப "வெருக்குவிடை அன்னவெருள்நோக்கு" (புறம்: 324) என்புழி வெருக்கு எனப்படும் காட்டுப் பூனையின் ஆணும் விடை என்ற பெயரால் வழங்கப்பட்டுளது ஆதலாலும், விடை என்னும் பெயர் ஆட்டின் ஆணையே குறிக்கும் என்பது பொருந்தாது. மேலும், "பெற்றமும் எருமையும், மரையும் ஆவே" (மரபு:60) என மாட்டின் பெண் ஆ என வழங்கப் பெறும் என்ற ஆசிரியர் தொல்காப்பியனார், "ஆ தந்து ஓம்பல்" என்றே கூறியுள்ளமையாலும், "பன்றி, புல்வாய் உழையே கவரி என்றிவை நான்கும் ஏறு எனற்கு உரிய", "எருமையும், மரையும், பெற்றமும் அன்ன" (மரபு.388, 39) என்ற சூத்திரங்களால், மாட்டின் ஆணைக் குறிக்கும் பெயராம் என உறுதி செய்யப்பட்ட "ஏறு" என்ற பெயரே, வெட்சியாரால் கவரப்பட்ட நிரையினைக் குறிப்பிடும் "ஏறுடைப் பெருநிரை பெயர்தர" (புறம், 259) என்ற புறநானூற்றுத் தொடரில் இடம் பெற்றுள்ளமையாலும் நிரை கவர்தலாவது, மாட்டினத்தின் நிரை கவர்தலைக் குறிக்குமே யல்லது, ஆட்டினத்தின் நிரை கவர்தலைக் குறிக்காது என்பது உறுதியாம். அஃது உறுதியாகவே மன்னுறு தொழிலாம் நிரை கவர்தலுக்கு எடுத்துக் காட்டாக வந்துள்ள பு.வெ.மா. செய்யுட்கண் "விடை ஆயம் கொள்க என்றான் வேந்து" என்புழி வந்திருக்கும் "விடை என்ற சொல்லால் குறிக்கப் பெறுவது மாட்டினத்து ஆணாம் ஆனேறே ஆகும். மேலும் "உதள நெடுந்தாம்பு" என்ற பெரும்பாணாற்றுப் படைத் தொடரில் (151) வந்திருக்கும் 'உதள்' என்ற சொல்லிற்கு, ஆட்டின் ஆணைக் குறிக்கும் பெயர்களுள் ஒன்றாக, மிகையால் கொள்ளப் பட்ட கிடாய் எனப் பொருள் கூறிய ஆசிரியர் நச்சினார்க்கினியர், அவ்வரிக்கு ஏழு வரிகளே முற்பட,

வீரன் ஒருவன் பகைநாட்டு நிரை கவர்ந்து வந்து, கடன் தீர்த்துக் கள் குடித்தும், கறிச்சோறுண்டும் களிக்கும் நிகழ்ச்சியை விளக்க வந்திருக்கும், "நாள் ஆ தந்து நறவு நொடை தொலைச்சி, இல்லடு கள்ளின் தோப்பி பருகி மல்லல் மன்றத்து மதவிடை கெண்டி" (141–143) என்ற பகுதியில் இடம் பெற்றிருக்கும் "விடை" என்ற சொல்லிற்கு ஆட்டின் ஆணைக் குறிக்கும் "கிடாய்" என்று பொருள் கூறாமல், மாட்டின் ஆணைக் குறிக்கும் "ஏறு" என்றே பொருள் கூறியுள்ளாராதலின், நிரை கவர்ந்த அவ்வீரன், ஆண்டு அறுத்துத் தின்றது, ஆனேற்றின் கறியே அல்லது, ஆட்டுக்கிடாயின் கறி அன்று என்பதே நச்சினார்க்கினியர் கருத்தாலும் புலனாகும். ஆகவே, "செங்கண் மழவிடை கெண்டிச்சிலை மறவர் வெங்கள் மகிழ்ந்து விழவு அயர" (பெரும்பொருள் விளக்கம்), "நறவும் தொடுமின் விடையும் வீழ்மின்" (புறம்:262) எனவரும் இடங்களில் எல்லாம், விடை என்பதற்கு ஆனேற்றைக் குறிப்பதாகவே பொருள் கோடல் வேண்டும். அதை விடுத்து, ஆட்டுக் கிடாய் என வலிந்து பொருள் கொள்வது பொருந்தாது. மேலும் "ஆ" என்ற பெயரால் குறிக்கப்படும் பெண் இனங்களுள் மாடு இடம் பெற்றுள்ளதேயல்லது ஆடு இடம் பெறவில்லை. 'பெற்றமும் எருமையும் மரையும் ஆவே' என்பது காண்க. ஆகவே, "கொழுப்பு ஆ எறிந்து' (அகம்.309) என்பதற்குக் கொழுத்த ஆட்டை வெட்டி என்ற பொருள் பொருந்தாது. நாவலர் நாட்டார் அவர்களும், கரந்தைக் கவியரசர் அவர்களும் 'கொழுப்பினையுடைய பசுவினைத் தடிந்து' என்றே பொருள் கூறியுள்ளமையும் உணர்க.

ஆனால், பசுவை அதன் பாற் பயன் அறிந்து போற்றும் பண்பட்ட பெருநிலையைத் தமிழர், தொல்

காப்பியர் காலத்திற்கும் முற்பட்டதான தொல்பெருங் காலத்திலேயே அடைந்து விட்டனர் என்பது உண்மை.

வெட்சியாவது யாது என்பதை விளக்குங்கால் ஆசிரியர் தொல்காப்பியனார், "ஆ தந்து ஓம்பல்" எனப் புலத்தலைப் புல்லார்த்தி, அலைத்தலை நீரூட்டிப் பேணலாம். ஓம்பல் தொழிலை வெட்சியார்க்கு ஏற்றிக் கூறுவதும், கைப்பற்றிய ஆனிரைகளை வெட்சியார் வழியிடைச் செலுத்திச் செல்லும் துறையினைக் கூறுங்கால். தொல்காப்பியனார் "நோயின்று உய்த்தல்" என்றும், புறப்பொருள் வெண்பா மாலையார், "அருஞ் சுரத்தும் அகன் கானத்தும் வருந்தாமல் நிரை உய்த்தன்று" என்றும் துயர் செய்யாத் தூய்மையினை விதந்து கூறுவதும் இந்நிலையிலேயே வேண்டுவனவாயின.

பிறர் நாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து வருதல் தம் வயிற்றுப் பசிகளைத் தீர்த்துக் கோடற்கு அன்று. ஒரு நாட்டின் மீது படை தொடுத்துச் செல்வோன் அவ்வாறு செல்வதன் முன்னர், அந்நாட்டு ஆனிரைகளை, அவை, தம்படையாளரால் பாழுறாவாறு பற்றிப் பாதுகாவலான தோரிடத்தில் வைத்துக் காத்தற் பொருட்டே என்ற நிலை வந்துற்ற பின்னர், அவ்வாறு ஆனிரை கைக்கொண்ட அரசன் ஒருவன், அந்நாட்டோடு பகையொழிந்து போய விடத்தும், அவ்வானிரைகளைத் தன் பாலே இருத்திக் கோடல் போர் அறம் ஆகாது உன உணர்வானாயினன். அவ்வாறு உணர்ந்த அக்காலத்தில், கைப்பற்றிய ஆனிரை களை அவற்றிற்கு உரியவர்பால் ஒப்படைக்கும் உயர்ந்த ஒழுக்கமும் உருப் பெறலாயிற்று. தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறையின் படைவீரர், கழுவுள் எனும்

பகைவன் நாட்டு ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொண்டாராக, அவ்வானிரைக்குரிய ஆயர், தங்கள் தலைவனாம் கழுவுள் சேரர் படையினைப் பாழ் செய்து தம் ஆனிரைகளை மீட்டுத் தரும் ஆற்றல் இலனாதல் அறிந்து, தாமே முன் வந்து, சேரர்படை வீரர்க்கு அவர் விரும்பும் நிறைப் பொருளாகச் சில ஆனிரைகளைத் தந்து பகையொழிக்கவே, பெருஞ்சேரல் இரும்பொறையின் படை வீரர், ஆங்குத் தாம் பற்றிய அவ்வாயர் தம் ஆனிரைகளை அவர்பாலே ஒப்படைத்து மீண்டனர். அஃதறிந்த கழுவுள், பின்னர்ப் போந்து பணிந்தனன் எனக் கூறும் பதிற்றுப்பத்து நிகழ்ச்சி, வெட்சியொழுக்கத்தின் வளர்ந்த நிலையினை விளக்கி நிற்றல் உணர்க.

"ஏறொடு, கன்றுடை ஆயம் தரீஇப் புகல் சிறந்து
புலவுவில் இளையர் அங்கை விடுப்ப
மத்துக் கயிறுஆடா வைகற்பொழுது நினையூஉ
ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்கப்
பதிபாழாக வேறுபுலம் படர்ந்து..."

—பதிற்று:71

புறப்பொருள் திணைகளுள், வெட்சித் திணை முதற்கண் வைத்து எண்ணப்படுகிறது என்றாலும், அது அத்துணைச் சிறந்த ஒழுக்கம் அன்று. போர்மேற்கொள்ளும் அரசர் செயல்களுள், முதற்கண் மேற்கொள்ளப்படும் செயலாக அது கருதப்படினும், உண்மையில் அது அரசர்க்குரிய ஒழுக்கம் அன்று என்பது, புறப்பொருட்கண் வரும் ஏனைத் திணைகளின் துறைகளோடு இவ்வெட்சித் திணைக்குரிய துறைகளையும் ஒப்பிட்டு நோக்கின் உணரலாகும்.

போர்கள் இருவகைப்படும். ஒன்று சென்று தாக்கும் போர். பிறிதொன்று நின்று தாக்கும் போர். புறத்திணைக்

கண் கூறப்பெறும் போர்களுள் வெட்சிப் போரும் வஞ்சிப் போரும் சென்று தாக்கும் போர்களாம்; கரந்தை காஞ்சிப் போர்கள் நின்று தாக்கும் போர்களாம். ஆகவே, முன்னைய இரண்டினையும் ஓரியல்புடையவாகவும், பின்னைய இரண்டினையும் ஓரியல்புடையவாகவும் கோடல் வேண்டும். இவ்வகையால், வெட்சியும், வஞ்சியும் ஓரியல்புடையவாகக் கருதப்படினும், வெட்சிப் போர், வஞ்சிப்போர் போல் பாராட்டப் பெறுவதில்லை. பகைவர் ஆனிரை கவர்ந்து கொண்டனர் என்ற செய்தியைக் கேட்டு அதை மீட்க முனையும் கரந்தையாரோ, பகைவர் தம் நாட்டு எல்லையைக் கைப்பற்றிக் கொண்டனர் என்பதைக் கேட்டு, அதைக் காக்க விரையும் காஞ்சியாரோ, காலமும், இடமும், தன்வலியும் மாற்றான் வலியும் பார்த்துப் புறப்படல் இயலாது ஆகவே, அவர்கள் படையெடுப்பிற் காம் நல்ல நாளைத் தேர்ந்து கொண்டு, அந்நாளில் குடையையும் வாளையும் முதற்கண் புறவீடு போக்கிப், பின்னர்த் தாம் புறப்படுவது என்பது ஏலாது. ஆனால், நிரை கொள்ளக் கருதும் வெட்சியானுக்கோ, பிறர் மண் கொள்ளக் கருதும் வஞ்சியானுக்கோ அந்த விரைவு இல்லை. ஆகவே, அவர்கள் இடம், காலம், வலி முதலாயின வற்றை ஆராய்ந்து, நல்ல நாளில் போர் மேற்செல்லுதல் பொருந்தும், ஆக, அவ்வாய்ப்பு அவ்விருவர்க்குமே ஒத்த இயல்பினதாக, வாள் குடைகளைப் புறவீடு போக்குவதை வஞ்சியானுக்கு மட்டும் வகுத்து, வெட்சியானுக்கு வரைந்து தராதது பின்னதன் சிறப்பின்மையினையே குறிப்பதாம் என்க.

படை யெடுத்துச் செல்லுங்கால், தம் படை யெடுப்பைப் பறைசாற்றும் போர் முரசு முழங்கிப் போர்

அரவம் செய்யச் செல்லும் வஞ்சியாரைப் போலவே, வெட்சியாரும் ஆரவாரம் செய்து கொண்டே செல்வர் என்னும் பொருள்படுமாறு, படையெடுத்துச் செல்லுங்கால் எழும் ஆரவாரத்தை உணர்த்தும் வெட்சி அரவம் என்னும் துறை, வஞ்சித் திணையைப் போலவே, வெட்சித் திணைக்கும் வகுத்து உரைப்பது வழக்கமாகிவிட்டது என்றாலும், பிறர் அறிய ஆரவாரம் எழப் படையெடுத்துச் செல்வது வஞ்சியார்க்கு மட்டுமே உண்டு. வெட்சியார்க்கு இல்லை. மாறாக வெட்சியார், தாம் செல்வது பிறர்க்குப் புலனாகாதவாறே சென்று மீள்வர். பகைவர் நாட்டுப் பசுநிரைகளை அவர்கள் அப்பகைவர் அறியச் சென்று கவர்ந்து வருவது இலர். மாறாக, அவர்கள் அறியாவாறு களவாடியே கொண்டுவருவர். 'களவின் ஆதந்து ஓம்பல்" எனக் களவேற்றியே உரைப்பர் தொல்காப்பியனாரும். ஒரு பொருளைக் களவாடி வரச் செல்வார், அவ்வாறு செல்லுங்கால், தம்மையோ தம் செயலையோ பிறர் அறியாவாறு கரந்தே செல்வர். நடையரவம் கேட்பினும், எண்ணிச் செல்வதை எய்துவது இயலாது என அறிந்து, காலொதுங்கு இயக்கமும் கேளாதவாறே செல்வர். களவின் இயல்பு இது. ஆகவே, களவில் நிறைகொள்ளும் ஒழுக்க மாகிய வெட்சிக் கண், வெட்சி அரவம் என ஒரு துறை அமைத்தல் அமைவுடைத்தாகாது. களவாடச் செல்வார் துடி முதலாய பறை ஒலிக்கச் செல்வர் எனல் ஏலாது.

பகைவர் பசு நிரை கருதி, வெட்சியார் செல்வதைக் கூறும் "செலவு", அவர்கள், பகைவர் நாட்டுப் பசு நிரையின் அளவு, அது நிற்கும் இடம், அதைக் காத்து நிற்கும் வீரர் தொகை ஆய இவற்றை அறிந்துணர்த்தும் "வேய்" ஆகிய துறைகளைக் குறிப்பிடும் ஆசிரியர் தொல்காப்பியனார்,

பகைவர் நாட்டு ஒற்றர் உணரா வகைச் சென்றனர்; பகைவர் நாட்டு ஒற்றர் உணராவகை ஒற்றி வந்து உரைத்தனர் - "புடைகெடப் போகிய செலவே", "புடைகெட ஒற்றின் ஆகிய வேயே" (தொல். புறம்:3) என உரைத்தலும், அவற்றிற்கு முறையே, "மாற்றரசர் பக்கத்த ராகித் தம் மாட்டு ஒற்றொடு நிற்பார் அறியாமல் போதல்", "மாற்றரசர் பக்கத்தில் உள்ளார் அறியாத வகை ஒற்றரால் ஆகிய ஒற்றுதலும்" என உரையாசிரியரும், "பற்றார் புலத்து ஒற்றர் உணராமல் பிற்றை ஞான்று சேறலும்", "பகைப் புலத்து ஒற்றர் உணராமல் சென்று ஒற்றி உணர்த்திய குறளைச் சொல்" என நச்சினார்க்கினியரும் உரை வகுப்பதும், அவ்விரு துறைக்கும் எடுத்துக்காட்டாகக் காட்டப் பெற்றுள்ள செய்யுட்கள். "பிறர்புலம் என்னார், தமர்புலம் என்னார், விறல் வெய்யோர் வீங்கு இருட்கண் சென்றார்" என்றும்,"ஒருவர் ஒருவர் உணராமல் சென்று ஆங்கு இருவரும் ஒப்ப இசைந்தார்" என்றும் அமைதலும், பகை நாட்டு ஆனிரை நின்ற நிலையும், நிரை அளவும், நிரைப்புறத்து நின்ற சிலை அளவும் செரு முனையுள் வைகிச் சென்றறிந்து வந்த ஒற்றர் செயலைக் கூறும் புறப் பொருள் வெண்பா மாலைச் செய்யுள், "நல்லிருட்கண் வந்தார் நமர்" எனக் கூறுதலும், ஆனிரையைக் காத்து நிற்கும் படைவீரரைக் கொன்று, கன்றுகளோடு கூடிய பெரிய நிரையைத் தம்மன்று நிறையக் கொண்டு செல்லும் கொடியோராகிய வடுகரும் ஆரிருள் நடுநாள் போதிலேயே அதைச் செய்வர் என 'ஆர் இருள் நடுநாள் ஏர் ஆ ஒய்யப் பகைமுனை அறுத்துப் பல்லினம் சா அய்க்... கன்றுடைப் பெருநிரை மன்று நிறை தரூஉம் நேராவன் தோள்வடுகர்" என அகநானூறு (253) அறிவிப்பதும், வெட்சி ஒழுக்கம்

களவொழுக்கமே, பலர் அறியச் செல்லும் தகுதி வாய்ந்த தன்று என்றாகி, ஆகவே, வெட்சியார் ஆரவாரம் செய்து கொண்டே சென்றனர் என உரைக்கும் வெட்சி அரவம் எனும் துறை வெட்சித் திணைக்குப் பொருந்தி மாறின்மையினை உணர்த்தும் என்க. ஆகவே வெட்சி அரவம் என்ற துறை. கரந்தை அரவம், வஞ்சி அரவம் எனப்பிறதிணைகட்கு அரவம் கூறப் பெறுவதை நோக்கிப் பிற்காலத்தே மேற்கொண்டதேயல்லது. இன்றியமையாது வேண்டப்படுவதோ, இயல்பாக அமைந்ததோ அன்று என அறிக.

வெட்சியொழுக்கம் தோன்றிய காலத்தில், அதில் இடம் பெறாத வெட்சி அரவம், பின்னர் இடம் பெற்றது எவ்வாறு? பசித்த பாலை நிலத்து மறவர், பக்கத்து நிலத்தவராகிய ஆயர்களின் ஆனிரைகளைக் கவர்ந்து செல்வதே வெட்சியாம் என்ற தொடக்க நிலை கெட்டு, வேந்தன் ஒருவன் வேற்று நாட்டவர் மீது போர் தொடுக்கும் முதல் நிகழ்ச்சியாம் நிலை பெற்ற அந்நிலையிலேயே, வெட்சித் திணைத்துறைகளுள் ஒன்றாக வெட்சி அரவமும் இடம் பெற்றிருத்தல் வேண்டும். மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தர்க்கு மறத் துறையிலும் அறமே நிகழ்தல் வேண்டும் என்ப. வெட்சியார் தம் ஆனிரைகளைத் தாம் அறியா நிலையில், தாம் ஏமாந்திருக்கும் நிலை நோக்கி வந்து கவர்ந்து சென்றமை கண்டு, "வந்தவர் யாம் அறிய வந்திருப்பின், யாமும் படையோடு காத்திருக்குங்கால் வந்திருப்பின், அவரால் எம் ஆனிரைகளைக் கைப்பற்றிக் கோடல் ஒண்ணுமோ? மாறாக வந்தவர் அனைவரும் மடிந்து மண்ணாகிப் போயிருப்பர் அல்லரோ? யாம் ஏமாந்திருக்கும் போது, இரவிற் போந்துக் களவாடியன்றோ

சென்றனர்! இதுவும் ஒரு ஆண்மையோ?" எனக் கரந்தையார் பழித்துரைப்பது கேட்டு, எளியார் மீதும், ஏமாந்திருப்பார் மீதும் போர் தொடுத்தல் ஆண்மையோ அறமோ ஆகாது; அது, தம் பேராண்மைக்கோர் இழுக்காம் என உணர்ந்த வெட்சியார், அந்நிலையில், ஆனிரைக் குரியார் அறியாவாறு சென்று களவாடிக் கொணர்தல் இனிக் கூடாது, அவர் அறியவே சென்று கவர்ந்து வருதல் வேண்டும், அதுவே ஆண்மையும் அறமுமாம் எனக் கொண்டு, ஆனிரை கவர்ந்து வரச் செல்லும் தம் செயலை, அவ்வானிரைக்குரிய ஆயர் அறிந்து கொள்ளுமாறு போர் முரசு முழக்கிப் பேராரவாரம் பண்ணுவாராயினர். ஆனிரைகளைக் காத்துக் கிடக்கும் அந்நாட்டு வீரர்களே யல்லாமல், அந்நாட்டுப் பறவைகளும், பகைவர் நிரை கவர வருகின்றனர் என்பதை உணர்ந்து கொள்ள வல்ல நிரைகோட் பறையாம் துடியினை முழக்கிக் கொண்டே செல்லத் தலைப்பட்டனர்.

நெடிபடு கானத்து நீள் வேல் மறவர்
அடிபடுத்து ஆரதர் செல்வான் – துடிபடுத்து
வெட்சிமலைய, விரவார் மணநிரைக்
கட்சியுள் காரி கலுழ்ம்..."

—பு. வெ. மாலை 3

என்ற புறப் பொருள் வெண்பா மாலைச் செய்யுளில், ஆனிரை கருதிச் செல்லும் வெட்சியார், செல்வதன் முன் நிகழ்வதான வெட்சி மலர் அணியும் விழாவில், ஆனிரை உறையும் காட்டிடத்ததான காரி எனும் பறவையும் கேட்டுக் கலங்குதற்குக் காரணமான துடிப்பறை கொட்டப் படுவது கூறப்பட்டிருப்பதையும்,

"பிள்ளை உள்புகுந்து அழித்தது ஆதலால்
எள்ளன்மின் நிரை இன்று நீர்"

– சிந்தாமணி: 420

என்ற சிந்தாமணிச் செய்யுளில், துடிப்பறையொலி கேட்டு அழும் காரியின் செயல் கண்டு, ஆயர் முதுமகன், ஆனிரை கவர அண்டை நாட்டவர் வருவர்; ஆகவே விழிப்பாய் இருந்து காவல் மேற்கொள்ளுங்கள் எனக் கூறப்பட்டிருப் பதையும் காண்க. நிரைக்குரிய ஆயர்க்கு நிரை கொள்ளக் கருதும் தம் கருத்தினைப் புலப்படுத்த வெட்சியார் மேற்கொள்ளும் இந் நிகழ்ச்சியையே, "படை இயங்கு அரவம்", "வெட்சி அரவம்" என முறையே பெயர் சூட்டிப் பாராட்டுவர் ஆசிரியர் தொல்காப்பியனாரும், ஐயன் ஆரிதனாரும்.

பிற நாடு மீது படையெடுத்துச் செல்வான், தன் செயல் குறித்துத் தன் நாட்டு மக்கள் யாது கருதுகின்றனர் என்பதை அறிந்து கோடல் இன்றியமையாததாம். மக்கள் விரும்பாத ஒன்றை மன்னவன் மேற் கொள்ளின், அதனால் அவன் கேடுறுவதல்லது ஆக்கம் பெறான். நாட்டு மக்களின் ஒப்புதல் பெறாத ஒரு செயல், நாடாள்வானுக்கு வெற்றியைத் தராது. ஆகவே, அவர் இசைவினைப் பெறுதல் அரசனின் இன்றியமையாக் கடனாம். அரசன் நாட்டு மக்களை அரசவையில் நிறுத்தி, அவர் ஒப்புதலை வேண்டுவனாயின், அரசன்பால் கொண்டிருக்கும் அச்சம் காரணமாகத் தாம் விரும்பாது போயினும், அவன் செயலுக்கு ஒப்புதல் அளிப்பது போலவே உரைப்பர். அவ்வாறு பெறும் ஒப்பு, உண்மை ஒப்புதல் ஆகாது. ஆகவே, நாட்டு மக்கள் உள்ளத்தை உள்ளவாறு அறிய விரும்பும் அரசன், அம்மக்களிடையே அவர் அறியாவாறு கலந்து நின்று தன் செயல் குறித்து, அவர் கூறுவனவற்றை அறிதல் வேண்டும். அவரும் தான் கருதுவதே கருதுவராயின், அவர் மனம் உவந்து ஒப்பினர் எனக் கொண்டு வினைமேற்

செல்லுதல் வேண்டும். விரிச்சி எனும் துறையினை விளக்க வந்த வெண்பா மாலைச் செய்யுள் இதையே கூறுகிறது. நிரை கொள்ளும் நினைப்பினனாய ஒரு வீரன், மக்கள் மனம் அறிய ஊர் மன்றத்திடையே உருவு கரந்து இருக்குங்கால், ஒருத்தி. அவ்வழிச் செல்லும் வேறு ஒரு வீரனை விளித்து, 'பகைவர் நாட்டு மன்றுகள் பாழ்பட, அவர் ஆனிரைகளைக் கொண்டு வந்து நம் மன்று பொலிய நிறுத்துவாயாக!" எனக் கூறி வாழ்த்தினாள். அக்கூற்று, அந்நாட்டு மக்கள் உள்ளமாதல் அறிந்து வினைமேற் சென்றான்.

எழுவணி சீறூர் இருள்மாலை முன்றில்
குழுவினம் கைகூப்பி நிற்பத் – தொழுவில்
"குடக்கண் ஆ கொண்டுவா" என்றாள்; குனிவில்
தடக்கையாய்! வென்றி தரும்

–பு.வெ.மாலை 4.

நிரை கொள்ளச் செல்லும் தன் செயலில் வெற்றியும் தோல்வியும், தன் நாட்டு மக்களின் விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்பவே அமையும்; ஆதலின் அவர் கருத்தைத் தெளிவாக அறிய விரும்பிய வேந்தன். தான் இருப்பதை அவர்கள் அறியாத நிலையில் அவர்கள் உரையாடும் காலத்தில்தான், அவர் உள்ளத்தோடு ஒன்றுபட்டு உரைகள் வெளிப்படும்; அவ்வுரைகளிலேயே அவர் உள்ளத்தை உணர முடியும் என்னும் உணர்வுடையனாக அந்நிலைக்கு வாய்ப்பளிக்கும் நிறைந்த இருள் பரவும் மாலைக் காலத்தைத் தேர்ந்து மன்று அடைதலும், மக்கள் அறியாதவாறு மன்றிடையே மறைந்திருக்கும் அம் மன்னவன், ஆண்டு அவர் கூறுவனவற்றைத் திரிபற உணர்வான் வேண்டி, அவர் உரைகளைக் கூர்ந்து கேட்டலும் வேண்டும். மக்கள் உள்ளம் உணர, மன்னவன்

மேற்கொள்ளும் வழிமுறை அதுவே என்பதை விரிச்சி என்பதனை விளக்கிப் பொருள் கூறும், "வேண்டிய பொருளின் விளைவு நன்கு அறிதற்கு ஈண்டு இருள் மாலை சொல் ஓர்த்தன்று" என்ற புறப்பொருள் வெண்பாமாலைக் கொளுவில், "நன்கு அறிதற்கு", "ஈண்டு இருள் மாலை", "சொல் ஓர்த்தன்று" என்பன போலும் பொருள் பொதிந்த சொற்களைப் பெய்து வைத்திருக்கும் புலவர் போக்கு உறுதி செய்வது உணர்க.

மக்கள் ஒப்புதல் பெற்றே மன்னர் வினையாற்றுதல் வேண்டும் என்ற அரசியல் உண்மை உணர்ந்த நிலையில், மன்னர் அம்மக்கள் மனக்கருத்தை அறியும் முறையினைக் கூறுவதே விரிச்சி எனும் துறையின் விளக்கம் பெறும் முதற் பொருளாகவும், அது நாளடைவில், நிமித்தம் பார்த்தல் எனும் நிலைக்குத் தாழ்ந்து விட்டது. தம் ஆற்றலால் ஆகாது எனத் தன்னம்பிக்கை இழக்கும் தாழ்நிலையினராகி விட்ட மக்கள் எடுத்துக் கொண்ட வினை இனிதே முற்றுப் பெறுமோ, இடையே மடங்கி மாண்பிழந்து போகுமோ என்ற ஐயுணர்வு உற்று, தம் ஆற்றலால் ஆகாதது, நற்சொல், நன்னிமித்தம் போன்றனவற்றால் ஆகும் என நம்பி விட்ட நிலையிலேயே, விரிச்சி, அப்பின்னிலைப் பொருள் பயக்கலாயிற்று.

"கார்காலத் தொடக்கத்தில் வந்து விடுவேன் !" என்று கூறி வினைமேற் சென்ற தலைவன், கார்காலம் தொடங்கி நாள்பல கழிந்த நிலையிலும் வந்திலனாக வருந்தும் தலைவியின் துயர் கண்ட செவிலித்தாய், மன்றிடை நிற்கும் கோயிற்குச் சென்று. நெல்லும் மலரும் தூவித் தலைவன் விரைவில் வர வேண்டி வணங்கி வழிபாடாற்றி இருந்தாளாக, அப்போழ்து, காலையில் காடு புகுந்த தன்

கறவைகள் மாலை ஆகியும் வராமையால் வருந்தும் கன்றுகளின் துயர் தாங்க மாட்டா ஆய்மகள் ஒருத்தி, கார் காலத்துக் குளிர் உடலை உலுக்குவ தாகவும், அதைப் பொருட்படுத்தாது, கன்றுகளோடு ஊர்க் கோடியில் உள்ள அக்கோயில் வரையும் வந்து, மாலைவர மனை திரும்பும் ஆயர் வரவை எதிர்நோக்கி நின்று அக்கன்றுகளுக்கு ஆறுதல் உரைப்பாளாய், "கன்றுகாள்! கோவலர் பின் நின்று ஓட்டி வர, உம் தாயர் விரைந்து ஓடி வருவர்; வருந்தற்க!" என்று கூறினாள். வினைமேற் கொண்டு வேற்றூர் சென்றிருக்கும் தலைவன் விரைந்து வந்து சேர்வனோ என்பதை அறிய விரிச்சி வேண்டி நிற்கும் செவிலியின் காதுகளுள், "வருவர் நின் தாயர்; வருந்தற்க!" என்ற ஆய்மகள் வாய்ச்சொல், நற்சொல்லாய், நன்னிமித்த மாய்ப்பட்டு, தலைவன் வருவன் என்ற உறுதியை அளிக்க, உளம் தேறித், தலைவியை அடைந்து, விரிச்சியின் விளைவு கூறி ஆற்றினாள் என்ற முல்லைப் பாட்டுச் செய்தியில் விரிச்சி முறை விளக்கப்பட்டுள்ளது.

"அருங்கடி மூதூர் மருங்கில் போகி
யாழ் இசை இனவண்டு ஆர்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பு அவிழ் அலரி தூஉய்க் கை தொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்,
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
நடுங்கு சுவல் அசைத்த கையள், கைய
கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர
இன்னே வருவர் தாயர் என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம்; அதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள்; தெவ்வர்

முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருதல் தலைவர் வாய்வது; நீ நின்
பருவரல் எவ்வம் களை! மாயோய்!"
—முல்லை; 7—21

அம்முறைப்படி நிரைகவரத் துணிந்த வெட்சியார், தம் வினைக்கண் வெற்றி வாய்ப்பினை வேண்டி விரிச்சி அறிந்து வரச் சிலரை ஏவ, சென்றவர் விரிச்சி வேண்டி நிற்கும் நிலையில், யாரோ ஓர் எயிற்றி, யாரையோ விளித்து, "தொழுவில் இருக்கும் குடக்கண் ஆவைக் கொணர்க!" என்று கூறினாளாக, அதையே நற்சொல்லாகக் கொண்டு, விரிச்சி நன்னிமித்தம் வாய்த்து விட்டதாக நினைந்து கொண்டு, நெஞ்சுறுதி மிக்கு நிரை நோக்கிச் செல்லலாயினர்.

வயிறுகாய் பெரும் பசி வந்துற்றகாலை அதை எப்படியாவது தீர்க்க வேண்டும் என்ற எண்ணம் ஒன்று மட்டுமே தலைதூக்கி நிற்குமே யொழிய, அந்நிலையில், இதற்கு ஊரார் ஒப்புகின்றனரா? நல்ல நிமித்தம் கிடைத்ததா? என்றெல்லாம் எண்ணிப் பார்க்க இடம் தராது ஆதலின், வெட்சியாவது, பக்கத்தில் உள்ளார் பொருளைப் பசித்தவர் பறித்து உண்பது என்ற தன் தொன்னிலை திரியாதிருந்த காலத்தில், விரிச்சி எனும் துறை, மக்கள் மனக் கருத்து அறிதல் என்ற நிலையிலாவது, நற்சொல் கேட்டல் என்ற நிலையிலாவது இடம் பெற்றிருப்பது இயலாது. அவ்வெட்சி, தன் தொன்னிலை கெட்டு, மாற்றானோடு போர் தொடுக்கும் மன்னனின் முதல் நிகழ்ச்சி என்ற நிலை அடைந்த பிற்காலத்திலேயே அது, அப்பொருளில் இடம் பெற்றிருத்தல் வேண்டும். அந்நிலையிலும் மக்கள் மனநிலையை மன்னன் அறிதல் என்ற பொருள் நிலையே முதற் கண்ணதாக, நற்சொல் கேட்டல் என்ற பொருள்நிலை, மக்களும், மன்னர்களும் தம்

தோளாற்றலில் ஐயப்பாடு கொண்டு தன்னம்பிக்கை இழந்து போன பிற்காலத்திலேயே இடம் பெற்றதாதல் வேண்டும்.

நிரை கவரத் துணிந்து, அது செய்தற்காம் நன்னிமித்தமும் வாய்க்கப் பெற்றதும், வெட்சியார் மேற்கொள்வது நிரை நிற்கும் இடம் நோக்கி விரைவதேயாம் என்றாலும், அந்நிரை யாண்டு உளது? அந்நிரையின் அளவு யாது? அதைக் காத்து நிற்கும் ஆயர்களின் பலம் எத்தகைத்து? ஆனிரையை ஓட்டி வர எத்துணையர் தேவை? அதைக் காத்துவர எத்துணையர் தேவை? என்பன போல்வனவற்றை அறிந்து கொள்ள வேண்டுவது இன்றியமையாதது ஆதலின், அதை அறிந்து அறிவிக்கவல்ல ஒற்றர் சிலரை ஆனிரைப் பக்கம் போக்குவதும், அவர்கள் ஆயர் அறியாவாறு சென்று அச்செய்திகளை அறிந்து வந்து உரைப்பதும் ஆகிய (ஒற்று நிகழ்ச்சி) ஆனிரை மேற்கொள்ளச் செல்வதன் முன் மேற்கொள்ளப்படுதல் வேண்டும். ஆகவே, “விரிச்சி, செலவே, வேயே, புறத்திறை” என வெண்பாமாலையும், “புடைகெடப் போகிய செலவே புடைகெட ஒற்றின் ஆகிய வேயே” எனத் தொல்காப்பியமும் செலவை முன்னாகவும், வேயைப் பின்னாகவும் வைத்துக் கூறினும், வேயை முதல் நிகழ்ச்சியாகவும் செலவைப் பின்னிகழ்ச்சியாகவும் கோடலே செவ்விதாம்.

ஆனிரைகளைத் தம் முல்லை நிலத்தை அடுத்துள்ள குறிஞ்சி நிலத்தே கொண்டு சென்று மேய்க்கும் ஆயர், ஆங்கு அவ்வானிரைகட்கு அழிவு நேராமை கருதித் தம்மோடு ஒரு சிறு படையையும் உடன் கொண்டு செல்வர். ஆனிரை ஓம்பலே தம் தொழிலாம் எனக் கொண்டு வாழ்ந்த கொங்கர் என்ற இனத்தவர், கொற்றம் மிக்கவராகவும்

விளங்கினர்; அவர்பால் கல்கால் கவணை என்ற அரிய படைக்கலம் ஒன்றும் இருந்தது; அதன் துணையால், அவர்கள் பகைவர்களின் அரிய பெரிய அரண்களையும் தகர்த்துத் தூளாக்கி விடுவர் எனப் பதிற்றுப் பத்துக் கூறுவதும் காண்க. "ஆரெயில் அலைத்த கல்கால்கவணை நார் அரிநறவின் கொங்கர்" (பதிற்று.88). அவ்வாறு தம் ஆனிரைகளைக் குறிஞ்சி நிலக் காடுகளுக்குச் சென்று மேய்க்கும் ஆயர், அங்குத் தாமும் தம் ஆனிரையும் ஏதம் அற்று இரவிலும் இருத்தற்பொருட்டு ஒரு சிறு அரணும் அமைத்துக் கொள்வர். அத்தகைய அரண், குறும்பு என அழைக்கப் பெறும். ஆயர் பலர், பல நிரைகளோடும் ஒன்றுகூடி வாழும் அவ்விடம் ஒரு சிற்றூர் போலும் காட்சி அளிக்கும். ஆகவே. ஆனிரை கவர்ந்து வரச் செல்லும் வெட்சியார், அந்நிரைகளைக் கைப்பற்றுவதன் முன்னர், அச்சிற்றூர் அரண்களில் உள்ளாரை அழித்தல் இன்றியமையாததாம். அதைக் கூறும் "ஊர் கொலை" என்ற துறை, அதனால், வெட்சித் திணைத் துறைகளுள் ஒன்றாகச் சேர்க்கப் பட்டுள்ளது. ஈண்டு ஊர் என்றது, முல்லை நிலத்தை யொட்டியுள்ள குறிஞ்சி நிலத்தில் ஆயர் அரண் அமைத்து வாழும் இடமேயாம். நிற்க.

காடு அழித்து நாடுகண்ட நிலையிலும், ஆனிரை ஓம்பும் ஆயர், பேரூர்களின் மதிலகத்து வாழ்வினை விரும்பாது, மதிற்புறத்தே அமைந்துள்ள புறநகர்ச் சேரி வாழ்வினையே விரும்புவாராயினர். ஆயர் முல்லை நிலத்தவர் என்ப. முல்லையாவது காடும் காடு சார்ந்த பகுதியுமாம். தங்கள் ஆனிரைக்கு வேண்டும் புல் தரும் நிலம் அதுவே யாதலின், ஆயர் காட்டகத்து வாழ்வையே விரும்புவர். அதனால், பேரூர் வாழ்வினராகி விட்ட

நிலையிலும், ஆயர் புறச்சேரி, மதிற்புறத்தே அமைந்துள்ள காவற் காட்டிடத்ததாகி, ஆனிரைக்குப் புல் அளிக்கும் அரும்பயன் உடைமை நோக்கிப் போலும், பசித்தவர் பக்கத்தில் உள்ளார் பொருளைப் பறித்து உண்பதே வெட்சியாம் என்ற நிலையில், "ஊர் கொலை" எனும் துறை, முல்லையை அடுத்த குறிஞ்சி நிலத்தில் ஆயர் அமைந் திருந்த குறும்பு எனும் சிற்றரண்களின் அழிவினைக் குறிக்கும் என்றால் - "குரை அழல் நடப்பக் குறும்பு", "எறிந்தன்று", "கொலைவிலார் கொண்டார் குறும்பு" என்ற வெண்பா மாலையினைக் காண்க. மாற்றானோடு போர் தொடுக்கும் மன்னவர்களின் முதல் நடவடிக்கையே வெட்சி எனும் புதுநிலை புகுந்தபோது, "ஊர் கொலை", பகையரசர்களின் பேரூர்ப் புறத்ததான ஆயர் பாடிகளின் அழிவைக் குறிக்கும் எனக் கொள்க.

ஆனிரைக்கு அரண் தந்து நின்ற சிறு படையை அழித்துவிட்டு, வெட்சியார் ஆனிரையைக் கவர்ந்து சென்றனர் என்ற செய்தியை எஞ்சிய ஆயர் சிலர் தம் ஊர் அடைந்து உணர்த்துவதும், ஆண்டுள்ள வீரர் பலரும் ஒன்று கூடி அவ்வானிரையை மீட்டுக் கொணர்வான் வேண்டி விரைவதும் நிகழும் ஆதலின், ஆனிரைகளைக் கவர்ந்து செல்லும் வெட்சியார் இடைவழியில் வந்தெதிர்க்கும் ஆயர்களாம் வீரரையும் வென்று ஓட்டிய பின்னரே, ஆனிரைகளைத் தம் ஊர்க்குக் கொண்டு செல்லுதல் இயலும். ஆகவே, நிரையோடு சிலர் செல்ல, சிலர் கரந்தையாரை எதிர்நோக்கிக் காட்டிடையே காத்திருப்பதும் உண்டு. "ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது, இலை புதை பெருங்காட்டுத் தலைகரந்திருந்த

வல்வில் மறவர் ஒடுக்கம் காணாய்" (புறம்:259) என்ற புறநானூற்றுச் செய்யுளைக் காண்க. அவ்வாறு காட்டின் இடைவழியில் கரந்திருந்த வெட்சிவீரர், வந்த கரந்தையார் மீது பாய்ந்து போரிட்டு, அவர்களை அறவே அழித்து வெற்றி கொள்வர். ஆகவே, அந்நிகழ்ச்சியைக் கூறும் "பூசல் மாற்று" எனும் துறையும், வெட்சித்திணைத் துறைகளுள் ஒன்றாக மேற்கொள்ளப்பட்டுள்ளது. முன்னர்க் கூறிய "ஊர் கொலை" நிகழ்ச்சி, ஆனிரை தங்கியிருந்த இடத்தில், அதைக் காவல் புரிந்திருந்தாரொடு செய்த போர்; "பூசல் மாற்று" இடைவழியில், கவர்ந்த ஆனிரையை மீட்க வந்த கரந்தை வீரரொடு ஆற்றிய போர். இவ்வேற்றுமை தோன்ற "ஆகோள்" நிகழ்ச்சிக்கு முன் நிகழ்ச்சியாக "ஊர்கொலை" யினையும், பின் நிகழ்ச்சியாகப் "பூசல் மாற்"றினையும் வைத்து, "ஊர் கொலை" ஆகோள் பூசலமாற்றே" என முறை வகுத்து இலக்கணம் கூறியுள்ளார்கள், தொல்காப்பிய னாரும், ஐயன் ஆரிதனாரும்.

கரந்தையாரை வென்று துரத்தி விட்டு, அவர் ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொண்டு காட்டு நெறியில் ஓட்டிச் செல்லும் வெட்சியார், அவ்வானிரைகளைத் தம்மூர்க்குக் கொண்டு சென்று தம்முள்ளே பங்கீடு செய்து கொள்ளும் வரையும் பொறுப்பாரல்லர். அவர் வறுமைக் கொடுமை, அதுவரை பொறுத்திலது. அதனால் இடை வழியில், நிழல் நிறைமரம் ஒன்றின் கீழ்த்தங்கி, கைப்பற்றிக் கொணரும் ஆனிரையுள் கொழுத்த ஆவொன்றை வெட்டி வீழ்த்தி, அதன் ஊனை நெருப்பில் இட்டுப் புழுக்கி உண்டு செல்வராயினர்; ஆவைக் கொன்று தின்னும் ஆற்றவும் கொடிய அக்காட்சியைக் கண்டு கண்ணீர் வடித்துக் கலங்கியுள்ளார் கடைச் சங்கப் புலவர் ஒருவர். ஆனால்,

அந்நிலை கழிந்து விட்டது. பசியான் வருந்திய பாலை நிலத்து மறவர், தம் அண்டையில் வாழ்ந்த ஆயர்தம் ஆனிரைகளைக் களவாடிக் கொன்று தின்று வாழ்ந்த கொடிய ஒழுக்கம், நாள் ஆக ஆக, அருள்நிறை ஒழுக்கமாக மாறி அமைவதாயிற்று. கைப்பற்றும் ஆனிரைகளை யெல்லாம் கொன்று கொன்று தின்றே தீர்த்தமையால் மீண்டும் உணவுக் குறைபாடு உண்டாகும்தோறும், பகைவர் நாட்டுள் புகுந்து போரிட்டு வர வேண்டிய நிலையுற்ற வராய் வெட்சியார், அது தொல்லை தருசெயலாம் என உணர்ந்தமையாலும் கொணர்ந்த ஆனிரைகளைக் கொன்று தின்றுவிடாது, அவற்றிற்குப் புல்லும் புனலும் அளித்துப் புரப்பின், அவை ஒன்று பலவாகியும் பால் முதலாயின அளித்தும் பயன்தரும் என அறிந்தமையாலும், கைப்பற்றிய ஆனிரைகளைக் கொன்று கொடுமை செய்யாமையோடு ஆங்கு, அவற்றிற்குப் புலி முதலாம் கொடுவிலங்குகளால் கேடுறாவாறு நின்று காத்தும், புல்லும் புனலும் அளித்தும் போற்றிக் கொணர்ந்து பேணி வளர்ப்பாராயினர். இந்நிலையிலேயே "நோய் இன்று உய்த்தல்" எனத் தொல்காப்பியனாராலும், "அருஞ்சுரத்தும் அகன் கானத்தும் வருந்தாமல் நிரை உய்த்தன்று" என வெண்பாமாலையாராலும் போற்றப்படும் "சுரத்து உய்த்தல்" என்ற துறை வெட்சித் திணைக்கண் இடம் பெறலாயிற்று.

வெட்சியாவது, பசித்தவர் பக்கத்தில் உள்ளார் பொருளைப் பறித்து உண்பது என்ற நிலை இருந்த போதினும், அந்நிலை கெட்டுப், பகை நாட்டின் மீது படையெடுத்துப் போகும் மன்னனின் முதல் நிகழ்ச்சியாம் நிலைபெற்ற போதே, கவர்ந்து கொண்ட ஆனிரைகளைக்

கேடின்றிக் காக்க வேண்டுவது, மிக மிக இன்றியமையாத தாகி விட்டது. அந்நிலையில் போர் தொடுக்கும் தன் செயலைப் பகை நாட்டவர்க்கு முன்னதாகவே அறிவித்துப் போர் நிகழ்ச்சியால் அந்நாட்டுப் போர் வீரர் தவிர்த்துப் பிற உயிர் எதுவும் கேடுறல் பொறா அறத்தொடு பட்ட அருள் உள்ளம் உடைமையால், அந்தணர், அறவோர், பெண்டிர், பிணியாளர், மகப்பேறு பெறா மறவர் முதலாயினோரைத், தம் படைக்கலம் வந்து புகா அரண்தேடி அடைக என அறிவுறுத்தி விட்டு, அதைத் தாமே செய்து கொள்ள மாட்டா அந்நாட்டு ஆனிரைகளைத் தானே முனைந்து காத்தற் பொருட்டே அவற்றைக் கவர்வன் ஆதலாலும், போர் ஒழிந்து இரு நாட்டவர்க்கு இடையேயும் நட்புறவு நிலவியதும், அவ்வானிரைகளை அவற்றின் உரியவர்பால் ஒப்படைக்க வேண்டுவது முதற் பெரும் கடமையாம் ஆதலாலும், அவற்றையும் கேடுறாவாறு காக்க வேண்டுவது மிக மிக இன்றியமையாததாகி விட்டது. ஆகவே, கவர்ந்து காட்டு நெறியில் ஓட்டி வரும் போதே அவற்றின் நல் வாழ்வில் நாட்டங் கொள்வதைக் கூறும் "சுரத்து உய்த்தல்" என்ற துறை, அந்நிலையிலேயே தனி மிகப் பொருத்தம் உடையதாகி விட்டது.

பாலை நிலத்து மறவர், ஆயர்தம் ஆனிரைகளைத் தம் வறுமையும் வயிற்றுப் பசியும் போக்கக் கவர்ந்து வந்ததே வெட்சித் திணைத் தோற்றத்தின் தலையாய காரணமாம் ஆதலின், அவ்வாறு வென்று கைக்கொண்ட ஆனிரைகளை, அம்மறவர் தம்முள்ளே பங்கிட்டுக் கோடலும், தம் வெற்றிப் புகழ் பாடும் பாணர் கூத்தர் முதலாயினோர்க்குக் கொடுத்தலும் அப்பாலை நிலத்து மறவர்களின் பண்பாகி விட்டது. ஆகவே, அச்செயல்களைக் கூறும் "பாதீடும்,"

"கொடையும்" வெட்சித் திணைத் துறைகளிடையே இடம் பெற்றன. அவ்வாறு அம்மறவர் அளித்த கொடைப் பொருளாம் ஆனிரை பெற்றாருள், பகைவர்க்குரிய ஆனிரை நிற்கும் இடம், அவற்றின் அளவு, அவற்றைக் காத்து நிற்கும் காவலர் அளவு ஆகியவற்றை அறிந்து வந்து உரைத்த ஒற்றர், நற்சொல் கேட்டும், நன்னிமித்தம் கண்டும், ஊக்கம் ஊட்டியவர் ஆகிய இருவரும் சிறப்பாகப் பாராட்டிற்கு உரியராவர்; அவர்களுக்கு வழங்குவது, உரிமையை அடிப்படையாகக் கொண்டதாயின் "பாதீட்"டின் கீழ் அடங்கும்; அருளை அடிப்படையாகக் கொண்டதாயின் "கொடை"க் கீழ் அடங்கும் எனக் கொண்டமையால் தொல்காப்பியனார் அவ்விரு நிகழ்ச்சிகளையும் தனியே பிரித்து வேறு கூறினாரல்லர்; ஆனால், வெண்பா மாலையாரோ, அவற்றைப் "புலன் அறி சிறப்பு", "பிள்ளை வழக்கு" எனத் தனித் தனித் துறைகளாக்கிப் பாராட்டிச் சென்றுள்ளார்.

கேட்ட தம் வீரர்க்கு ஊக்கமும் உரனும், பகை நாட்டவர்க்கு அச்சமும் ஆற்றாமையும் தருவது நிரை கோட்டறையாம் துடியின் ஒலியேயாம். அவ்வொலி தானும், இதை ஒலிப்போன் ஆற்றல், ஆற்றல் இன்மைகளுக்கு நிற்ப, நிறை பயனும் குறை பயனும் அளிக்குமாதலின், இவ்வொலித்தற் கென்றே ஒரு சிலரை வரைந்து கொள்ளுதலும், புலன் அறிந்து உரைத்தார்க்கும், புள் நிமித்தம் பார்த்து உரைத்தார்க்கும் பெரும் பொருள் அளித்துப் பேணல் போல், அவர்க்கும் பொருள் அளித்துப் போற்றலும் பாராட்டலும் பாலை நிலத்தாரிடையே பண்டே நிலவின. ஆகவே, அதைக் கூறும் "துடிநிலையும்" வெட்சிக் கண் இடம் பெற விதி வகுத்துள்ளார் வெண்பா

மாலையார்; ஆனால், அதுவும், பாதீடு, கொடை ஆகிய இரண்டனுள் யாதேனும் ஒன்றனுள் அடங்கி விடும்; அவற்றுள் ஏதேனும் ஒன்றின் விரிவே இது எனக் கொண்டமையால், தொல்காப்பியனார் அதை வேறு பிரித்து வழங்கினாரல்லர்.

பாலை நிலத்து மறவர், பண்டு ஆனிரை கவர்ந்தது. தம் வயிற்றுப் பசியைத் தணித்துக் கொள்வதற்கே யாதலின், அது பொருளாக அந்த வெட்சித் திணைக்கண் பாதீடும் கொடையும், அவற்றின் விரிவுகளாம் புலனறி சிறப்பும் பிள்ளை வழக்கும் துடி நிலையும் இடம் பெறுவது தனிமிகப் பொருத்தம் உடைத்து; அத்திணைக்கண் இவை இடம் பெற்றிருப்பது ஒன்றே போதும். வெட்சித் திணை தம் வயிற்றுப் பசியைத் தீர்த்துக் கொள்ள முனைந்த பாலை நிலத்து மறவர்களின் வேட்கையை அடிப்படையாகக் கொண்டு தோன்றியதே என்பதை நிலைநாட்ட. ஆனால், பகை நாட்டின் மீது போர் தொடுப்போர், அந்நாட்டுப் பசுநிரைகளைப் போர் முடியும் வரையும் பற்றிக் காத்துப் போர் முடிவில் உரியவர்பால் ஒப்படைத்தல் வேண்டும் என்ற திருப்பம் அத்திணைக்கண் இடம் பெற்றுவிட்ட பின்னர், பாதீடும் கொடையும் ஆகிய அவ்விரு துறைகளோ, அவற்றின் விரிவுகளாம் புலவர் சிறப்பு, பிள்ளை வழக்கு, துடி நிலைகளோ இடம் பெறுதல் பொருந்தாது. அப்புது நிலை புகுந்து விட்ட பின்னர், அதற்கு வழி வகுத்துத் தாம் வழக்கற்றுப் போதலே பொருந்தும். நிற்க.

மழை வறண்டு வறுமையுற்றால் இது தெய்வ சோதனை; ஆகவே அத்தெய்வத்தை வழிபடின் வறுமை ஒழியும், வளங் கொழிக்கும் என வழிபடுதலும், மழை பெய்யப் பெருவளம் பெற்றக்கால், இது தெய்வ அருள்;

ஆகவே அத்தெய்வத்தை வழிபடுவோமாக என வழி பாடாற்றுவதும் சிற்றூர் மக்களிடையே இன்றும் காணலாம் சீரிய ஒழுக்கமாம். "மலைவான் கொள்கென உயர்பலி தூஉய் மாரியான்று மழைமேக்கு உயர்கெனக் கடவுள் பேணிய குறவர்மாக்கள்" (புறம்: 143) என அம்மக்கள் மாண்பினைப் படம் பிடித்துப் பாராட்டி யுள்ளார் பெரும்புலவர் கபிலர். இவ்வொழுக்கம் வெட்சி வீரரிடையேயும் விளங்கி நின்றது. வெட்சி வீரர், தம் தோள் ஆற்றலால் ஆண் ஆனிரை கொண்டாராயினும் நமக்கு அவ்வாற்றலும் ஆண்மையும் தருவாள் தங்கள் பாலை நிலத் தெய்வமாம் கொற்றவையே என்ற நம்பிக்கையுடையவ ராவர். அதனால், நிரைகோள் கருதிப் போவதற்கு முன்னர், அவள் அருள் வேண்டியும், வென்று நிரை கொண்டு வந்த பின்னர் அவள் அருள் நினைந்தும். விழாக் கொண்டாடி மகிழ்வர். ஆகவே அத்தெய்வ வழிபாட்டைக் கூறும் கொற்றவை நிலையும் வெட்சித் திணைத் துறைகளுள் ஒன்றாயிற்று.

நிரைகோடல் ஒழுக்கம் உருப்பெற்ற காலத்தில், வெட்சியார், நிரைகளை, இரவில் எவரும் அறியாவாறு களவாடியே கவர்ந்து வந்தனராதலின், அக்காலத்தில் வெட்சியாரின் நிரைகவர் முயற்சியைப் பறைசாற்றும் "வெட்சி அரவம்" எனும் துறை இடம் பெற்றிருக்கவில்லை. அதைப் போலவே, அவர்கள் ஆனிரை கொண்டது தம் வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்ளவேயாதலாலும், அதற்கேற்ப நிரையோடு வாழியிடம் வந்தடைவதற்கு முன்பே, இடைவழியில் விடைவீழ்த்தி உண்பதும் செய்தனர் ஆதலாலும், "நோயின்றி உய்த்தல்" எனும் துறையும் அக்காலத்தில் இடம் பெற்றிருப்பதும் இயலாது;

ஆனால், நிரைகோடல், போர் மேற்கொள்ளும் வேந்தர்களின் முதல் நடவடிக்கையாகக் கொள்ளப்பட்ட பிற்காலத்தில் போர் தொடங்குவதை அறிவித்தே தொடங்கினராதலின், அக்காலை "வெட்சி அரவம்" இடம் பெற்று விட்டது; அதைப் போலவே, போர் ஒழித்த பின்னர் ஆனிரைகளை அவற்றின் உரியவர்பால் ஒப்படைக்க வேண்டிய நிலை பிறந்து விட்டமையால், அவற்றைக் கேடின்றிக் காக்க வேண்டுவது இன்றியமையாததாகி விடவே, அந்நிலையில், "நோய் இன்றி உய்த்தல்" துறையும் இடம் பெற்று விட்டது. மேலும், பண்டு நிரை கொண்டது, தம் வாழ்வை நிறைவாக்கிக் கோடற் பொருட்டேயாதலின், கைப்பற்றிய நிரைகளைத் தம்மை நச்சி வாழும் பிறர்க்கும் பகிர்ந்து அளிப்பது நிகழவே "பாதீடும்", "கொடையும்", அவற்றின் விரிவாம் "புலனறி சிறப்பும்" "பிள்ளை வழக்கும்" பண்டு இடம் பெற்றிருந்தன; ஆனால், படை தொடுப்பதன் முதல் நிகழ்ச்சியாகும் நிரை கவர்தல் என்ற நிலை பிறந்துவிட்ட பிற்காலத்தில் ஆனிரைகளைக் காப்பதே கருத்தாகி விட்ட காரணத்தால், அவற்றைத் தம் உடைமையாக்கிக் கொள்வது ஒழிக்கப்படவே "பாதீடு" முதலாம் துறைகள் அக்கால வெட்சியில் இடம் பெறுவது பொருந்தாததாகிவிட்டது. ஆயினும், பண்டு வழக்கிற்கு வராது, பின்னர் வழக்கிற்கு வந்தனவும், பண்டு வழக்காற்றில் இருந்து பின்னர் வழக்கற்றுப் போயினவும் ஆகிய அனைத்தையும் கொண்டு பாடுவதே பாடல் சான்ற புலன் அறிவழக்கமாம் என ஆன்றோர்கள் வகுத்து விட்டமையால், அம்மரபு கருதி அவை அனைத்தும் வெட்சித் திணைக்கண் இடம் பெற்று விளக்கப் பெறுகின்றன.

இனிக் கரந்தையாவது, பாலை நிலத்து மறவர்களாகிய வெட்சியார் கவர்ந்து சென்ற ஆனிரைகளை முல்லை நிலத்து ஆயர்களாகிய கரந்தையார் மீட்டுக் கொணர்தலாம். அவ்வாறு மீட்டுவரச் செல்வார் கரந்தை சூடிச் செல்வராதலின், அவ்வொழுக்கம் கரந்தை எனப் பட்டது. கரந்தையாவது ஒரு பூண்டு எனச் சிலர் கூறுவர். திருநீற்றுப் பச்சையெனப்படுவது அதுவே என்பர் மற்றும் சிலர். துளசிக்கும் அது ஒரு பெயர் என்பர் வேறு சிலர். கரந்தை வயல்களில் விளைவது என்றும், நாகுமுலை போலும் வடிவினையும் நறிய பூக்களையும் உடையது என்றும் கூறுவர் பழந்தமிழ்ப் புலவர். "காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல் (பதிற்று: 40); "நாகுமுலையன்ன நறும்பூங் கரந்தை" (புறம்; 261) என்ற தொடர்களைக் காண்க.

கரந்தை எனும் பெயரால் குறிப்பிடப்படுவது எதுவேயாயினும், அது பச்சை நிறம் உடையதென்பது உறுதி. நிறங்கள் பலவற்றுள்ளும் பச்சை நிறம், அன்பும் அருளும் குறிக்க வருவதாம். ஆகவே, அந்நிறம் வாய்ந்த கரந்தையினைச் சூடுவாரும், அன்பும், அருளும் நிறைந்த மனத்தினராதல் வேண்டும். கரந்தை வீரராவார், நிரை மீட்கும் வீரராவர். நிரை மீட்கும் ஒழுக்கம், நின்று தாக்கும் அரசர்க்கெல்லாம் ஏற்புடைய ஒழுக்கமாகக் கொள்ளப் பட்டுள்ளது. எனினும், அவ்வினையினைப் பண்டு மேற் கொண்டிருந்தவர் முல்லை நிலத்து ஆயர் மட்டுமேயாவர். அன்று ஆனிரை நம்பி வாழ்ந்தவர் அவ்வாயர் மட்டுமே யாவர். அத்தொழிலை இன்றுவரை மேற்கொண்டு வாழ்வாரும் அவ்வாயரே யாவர். ஆயர் என்ற இனத்தாரைக் குறிக்க இன்று வழங்கும் பட்டப் பெயராம் "பிள்ளை" என்பதே, நிரை மீட்கும் வீரராகிய

கரந்தையாரை அழைக்கும் இலக்கணப் பெயராய் அமைந்துள்ளதும் காண்க. வெட்சியாரைத் தான் ஒருவனாகவே நின்று, வெட்டி வீழ்த்தி வெற்றி கொள்ளும் வீரன் செயல் "ஆள் எறிபிள்ளை" என்றும், நிரைமீட்சிப் போரில் பெற்றதன் போர்ப்புண் கண்டு பெருமிதம் கொள்ளும் ஆயன் செயல் "பிள்ளைத் தெளிவு" என்றும், பகைவர் உடலிற் பாய்ச்சி அவர் குடல் சரித்த கொற்றம் மிக்க வேல் ஏந்தி வரும் ஆயன் செயல், "பிள்ளையாட்டு" என்றும், நிமித்தமும் நோக்காதே சென்று வெட்சியாரை எதிர்த்துப் போராடிய ஆயன்செயல் "பிள்ளைப்பெயர்ச்சி" என்றும் துறைப்பெயர் அளித்துப் பாராட்டப் பெறும் இடங்களிலெல்லாம், ஆயர்-பிள்ளை" என்றே பெயரிடப் பட்டுள்ளமையும் காண்க. மேலும் நிரைகொள்ளும் வெட்சி வீரராகிய மறவர் வாழும் பாலை நிலத்தினை அடுத் திருப்பது ஆயர்க்குரிய முல்லை நிலமே யாதலும் காண்க. ஆனிரைகளே தங்கள் உடைமையாம் எனக் கொண்டு வாழ்ந்த முல்லை நிலத்து ஆயர், அவ்வானிரைகளை வெட்சி மறவர் கைப்பற்றிச் சென்றனர் என அறிந்ததும் அவர் பின் சென்று, போரிட்டு வென்று மீட்டுக் கொணர்வர். இவ்வாறு பாலை நிலத்து மறவர், ஆனிரைகளை அவற்றின் கன்றுகளின் நீக்கிக் கொண்டு சென்று கொடுமை செய்தாராக, ஆயர் அவற்றை மீட்டுக் கொணர்ந்து, அவற்றின் கன்றுகளோடு புணர்த்து அருள் புரிபவராவர். அன்புடைமைக்கும் அருள் உடைமைக்கும் எடுத்துக்காட்டாகக் கூறும் கரந்தை சூடும் ஆயர் அவ்வியல்புக்கு ஏற்ப இயல்பாகவே அன்பும் அருளும் நிறைந்த நல்வாழ்வினராதலும் காண்க. "ஆகாத்து ஓம்பி, ஆப்பயன் கொள்ளும் கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்

பாடில்லை" என, ஆசிரியர் இளங்கோவடிகளாரும் அவ்வாயர்தம் நலம் பாராட்டுவது காண்க. (சிலம்பு: 15; 120-121)

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையால் கவர்ந்து செல்லப்பட்ட தன் நாட்டு ஆனிரையை, அவன் படைவீரர்க்குக் காளைகளோடும், கன்றுகளோடும் கூடிய கறவைகள் சிலவற்றை அளித்தே மீட்டுக்கொண்ட கழுவுள் என்பானை 'ஆன்பயம் வாழ்நர் கழுவுள்' என ஆயர் தலைவனாகவே கூறும் பதிற்றுப் பத்தும் (71), வேடர் கவர்ந்து சென்ற தன் ஆனிரையை நாடாளும் காவலனாம் கட்டியங்காரனால் மீட்டுத்தரல் இயலாது போனபோது அதை மீட்டுத் தருவானுக்குத் தன் மகளை மணம் செய்து தருவதாகப் பறைசாற்றி அவ்வாறே மீட்டுத்தந்த சீவகனுக்கு மகளை மணம் முடித்துத் தந்த நந்தகோனை ஆயர் தலைவனாகவே கூறும் சீவக சிந்தாமணியும் (கோவிந்தையார் இலம்பகம்) ஆனிரை மீட்கும் கரந்தை வீரர் முல்லை நிலத்து ஆயரே என்பதற்கு அரணாதல் காண்க.

எண்ணித் தொடங்கும் போர் அன்று, கரந்தைப் போர். அது அவர்க்கு இன்றியமையாது வந்துற்ற போர். வீர்களில் விழைவு காரணமாக, போர் வெறிகாரணமாக வந்துற்றதன்று. ஒரு வினையின்பால் வேட்கையுற்று அதைத் குறைவற நிறைவேற்றிக் கொள்ளுதல் வேண்டும் என்று எண்ணுபவரே, அவ்வினையைத் தொடங்குவதன் முன்னர், அதைத் தொடங்கற்காம் வாய்ப்புடைய காலம், இடம் முதலியவற்றை எண்ணிப் பார்ப்பர். கரந்தைப் போரோ, அத்தகைய வேட்கை காரணமாக மேற் கொள்ளும் போர் அன்று. தம் ஆனிரைகளை வெட்சியார்

கைப்பற்றிச் செல்கின்றனர் என்ற செய்தி கேட்டுச் சினந்தவர் மேற்கொள்ளும் போர் அது. தம் பொருள் கொள்ளை போகிறது என அறிந்து மேற்கொண்ட போர். ஆகவே, அப்போர் மேற்கொள்வார், அப்போர் தொடங்கற் காம் காலத்தின் நன்மையினையோ, ஏற்புடைய இடவாய்ப் பினையோ பகைவர்க்கும் தமக்கும் உளவாம் படை வலியினையோ எண்ணிப்பாரார். செய்தி கேட்டவுடனே செய்யும் தொழிலையும் மறந்து அந்நிலையிலேயே விரைந்து ஓடுவர். "நிரைகோள்கேட்டுச் செய்தொழில் ஒழிய விரைவினர் குழூஉம் வகையுரைத்தன்று" என்ற வெண்பாமாலை விளக்கத்தினையும் காண்க. ஆகவேதான், கரந்தைத் திணைக்கு நற்சொல் கேட்கும் விரிச்சி, பகைவர் படைவலியறியும் "வேய்" முதலாம் துறைகள் இல்லாயின.

பாலை நிலத்து மறவர் களவாடிச் சென்ற ஆனிரையை மீட்டுக் கொணர்ந்து ஓம்பும் ஆயர்களின் புகழ் பாடுவதே வெட்சித் திணையாம் என்ற கருத்துடையராகிக் குறிஞ்சிப் புறனாகிய வெட்சியாவது, களவாடிச் செல்லப்பட்ட ஆனிரையை வேற்றுப் பலத்திலிருந்து மீட்டுக் கொணர்ந்து ஓம்பல் ஆகும்-"வெட்சிதானே குறிஞ்சியது புறனே", "வேந்து விடுமுனைஞர் வேற்றுப் புலக் களவின் ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்" என வெட்சியின் பொது இலக்கணம் கூறி, அதன் பின்வரும் படைஇயங்கு அரவம்' "மறங்கடை கூட்டிய" என்ற சூத்திரங்களில் களவாடும் பாலை நிலத்து மறவர் செயல்களையும் அதன் பின் வரும் "வெறியறி சிறப்பின்" என்ற சூத்திரத்தில் நிரை மீட்கும் ஆயர் தொழிலையும் முறையே விளக்கிச் சென்றுள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார். வெட்சித் திணைப் பொருள் பற்றிய தம் கருத்தினை ஆசிரியர்

இவ்வாறு தெளிவாகப் புலப்படுத்தியிருப்பதோடு, ஆனிரை கவர்வார் தொழில் கூறுங்கால், "படையியங்கு அரவத்தை" அடுத்து "விரிச்சி", "வேய்" முதலாம் துறைகளைக் கூறியிருப்பது போல், ஆனிரை மீட்பார் தொழில் கூறுங்கால், "விரிச்சி", "வேய்" முதலாயினவற்றைக் கூறாமல் விட்டதோடு நில்லாமல் எடுத்த எடுப்பிலேயே "ஆரமர் ஓட்டலும்", "ஆபெயர்த்துத் தருதலும்" போல்வனவே கூறுவதையும் நோக்காது, "படை இயங்கு அரவம்" என்ற சூத்திரம் ஆனிரை கவர்வார், அது மீட்பார் ஆகிய இரு திறத்தவர் தொழில்களையும் ஒருங்கே குறிப்பதாகக் கொண்டு அதில் கூறும் ஒவ்வொரு துறையினையும் அவ்விரு திறத்தவர்க்கும் ஏற்றிக் கூறும் நச்சினார்க்கினியர் உரை போலி உரையேயல்லது, பொருளொடு பொருந்திய மெய்யுரை அன்று எனக் கொள்க. "படையியங்கு அரவம்" என்ற சூத்திரம் ஆனிரைதரும் வெட்சியார், அது மீட்கும் கரந்தையார் ஆகிய இரு திறத்தவர் நிகழ்ச்சிகளையும் கூறவே வந்ததாயின், ஆனிரை மீட்கும் கரந்தையார் நிகழ்ச்சிகளைத் தனியே எடுத்துக் கூறும் "வெறியறி சிறப்பின்" என்ற சூத்திரத்தைத் தருவதோ, அதில் கூறியது கூறல் எனும் குற்றம்பட "ஆரமர் ஓட்டல்", "ஆபெயர்த்துத் தருதல்" என்பன போலும் துறைகளையும் சேர்த்து வழங்குவதோ பொருந்தாது. ஆகவே, படை இயங்கு அரவம் என்ற சூத்திரம் நிரை கவரும் வெட்சியார் ஒழுக்கத்தை மட்டுமே உணர்த்துவதாகவும் "வெறியறி சிறப்பின்" என்ற சூத்திரமே நிரை மீட்கும் கரந்தையார் ஒழுக்கங்களை உணர்த்துவதாகவும் கோடலே பொருந்தும். உரையாசிரியர்க்கும் அதுவே கருத்து என்பது, அச்சூத்திரத்தின் அவதாரிகையில், 'இனி அதற்கு மாறாகிய கரந்தைத்

திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று. அதுவும் ஆநிரை மீட்டல் காரணமான அந்நிலத்தின்கண் நிகழ்வதாகலின் வெட்சிப் பாற்பட்டுக் குறிஞ்சிக்குப் புறனாயிற்று" எனக் கூறுவதால் புலனாம்.

வெட்சியார் செயல்களைக் கூறுங்கால் வலியச் சென்று ஆனிரையைக் காத்து நின்றாரைக் கொன்று, அவருடைமையாம் ஆனிரையைக் கொள்ளை கொண்டு வந்தனர் என்பது பொருள்பட "ஊர் கொலை", "ஆகோள்" எனப் பெயரிட்டு அழைக்கும் ஆசிரியர், கரந்தையார் செயலைக் கூறுங்கால் வலியவந்த போரை வென்று ஓட்டிக் களவாடப்பட்ட நிரையை மீட்டுக் கொண்டு வருதல் என்பது பொருள்பட "ஆரமர் ஓட்டல்", "ஆபெயர்த்துத் தருதல்" எனும் பெயரிட்டு அழைக்கும் வேறுபட்ட நிலையாலும், "படைஇயங்கு அரவம்" என்ற சூத்திரம் வெட்சியார் செயல் குறிப்பதாக, "வெறியறி சிறப்பின்" என்ற சூத்திரம் கரந்தையார் செயல் குறிக்கும் என்பது உறுதியாகும்.

பாலை நிலத்து மறவர், குறிஞ்சி நிலம் புகுந்து புல் மேய்ந்திருந்த தம் ஆனிரைகளைக் களவாடிக் கவர்ந்து செல்கின்றனர் என்ற செய்தி செவிப்பட்ட அந்நாழிகையே, முல்லை நிலத்து ஆயர் போர்க் கோலம் பூண்டு புறப்படுவதே இயற்கையோடு பட்டதாம் என்ற கருத்துடைமையால், நிரை மீட்கும் ஆயர் நிகழ்ச்சிகளைக் கரந்தை எனத் தனித்திணை வகுத்துக் கொண்டு விளக்கும் புறப் பொருள் வெண்பா மாலையாரும், "கரந்தையரவம்" என்ற துறையினை அடுத்து "அதரிடைச் செலவு", "போர் மலைதல்" என்பன போலும் போர் நிகழ்ச்சிகளைக் கூறும் துறைகளை மட்டுமே வகுத்துக் கொண்டிருப்பதும் காண்க.

ஆகவே, கரந்தை ஒழுக்கத்தில் "விரிச்சியும்", "வேயும்" இடம் பெற்றில; அவ்வொழுக்கத்திற்கு அவை ஏவாதன என்றே கோடல் வேண்டும்.

நிரைகொண்ட வெட்சிவீரர், தமக்கு வெற்றி தந்தவள், தங்கள் பாலைநிலத் தெய்வமாம் கொற்றவையே என உணர்ந்து அவளுக்குப் பரவுக்கடன் கொடுத்து விழாக் கொண்டாடல் கண்ட கரந்தையாரும், தமக்கு வெற்றி வேண்டித் தெய்வத்தை வழிபட விரும்புவராயினர். அவ்வாறு, விரும்பிய ஆயர், அப்போது தாம் நிற்பது குறிஞ்சி நிலத்தின்கண் ஆதலாலும், தாமும் நிரையும் ஆண்டு முழுவதும் இருந்து வாழவேண்டிய இடம், அந்நிரைக்கு வேண்டும் புல் உணவு அளிக்கும் குறிஞ்சி நிலமே ஆதலாலும் வெட்சியாரோடு போரிடவேண்டிய இடமும் அக்குறிஞ்சியே ஆதலாலும், முருகனையும், அவன் மனைவியும் அக்குறிஞ்சி நிலமகளும் ஆகிய வள்ளியையும் வழிபடுவாராயினர். ஆகவே, அவ்வழிபாட்டைக் கூறும் "காந்தள்," "வள்ளி" என்ற இரு துறைகளும் கரந்தைத் திணைக்கு உரியவாயின.

வந்த நிலத்தின் கடவுளர் இருவரை வாழ்த்தி வழிபட்ட ஆயர், தங்கள் நிலமாம் முல்லைநிலக் கடவுளாம் மாயோனை மறந்தாரல்லர்; மறவர் வலைப்பட்டு மாண்டு போக இருக்கும் கறவைகளைக் காக்க விரையும் கோவலர், குன்று எடுத்து, கன்று காலிகளைக் காத்த கண்ணனை வழிபட விரும்புவது இயல்பேயன்றோ? அதனால், நிரைமீட்கச் செல்லுங்காலும், நிரைமீட்டு வருங்காலும், தம் முல்லை நிலத்து எல்லைக் கண் மலர்ந்து மணம் நாறும் காயாம் பூவைக் கண்டதுமே, அக்காயாம் பூ நிறத்தனாகிய கண்ணன் அருள் நினைந்து, அவனை வணங்கி வாழ்த்துவா

ராயினர். ஆகவே, மாயோன் வழிபாட்டைக்கூறும், "பூவை நிலையும்" கரந்தைத்திணைத் துறைகளுள் இடம் பெற்றது.

மரத்தில் காய்க்கின்றன காயும் கனியும். மண் அளிக்கிறது கிழங்குகளை. காட்டில் தாமாகவே பிறந்து பெரியவை ஆகின்றன விலங்குகள். ஆகவே, அவை, மக்கள் அனைவர்க்கும் உரிமையவாம். அவற்றைத் தன் ஒருவனின் தனியுடைமையாகக் கருதும் உரிமை ஒருவர்க்கும் இல்லை. அவ்வாறு வரைந்து கொள்ள வேண்டிய நிலையும் அக்கால மக்களுக்கு உண்டாகவில்லை. ஆகவே, தனியுடைமை கொண்டு எவரும் வாழ்ந்தாரல்லர். அதனால் களவு கவர்தல் என்ற பொல்லாங்குகட்கு இடம் இல்லாமல் இருந்தது. மக்களினம், குறிஞ்சி நிலவாழ்வினராம் நிலை பெற்றிருந்த காலத்திய வாழ்வியல் முறை இது. ஆனால், அப்பொதுவுடைமை நிலை நெடிதுநாள் நிலைத்திருக்க வில்லை. மக்கள் குடிபெயர்ந்ததும், உடைமை நிலையிலும் மாறுதல் இடம்பெற்று விட்டது. முல்லை நிலம் புகுந்து, ஆயர் எனும் புதிய இனப் பெயர் உடையவராகி, ஆட்டையும் மாட்டையும் வளர்க்கத் தலைப்பட்டதும், மனித உள்ளமும் மாறுபடத் தலைப்பட்டது. புல்லும் புனலும் அளித்தும், பொல்லா விலங்குகளிடமிருந்து காத்தும் தான் வளர்ப்பதால் வளர்கின்றன ஆடுகளும் மாடுகளும். ஆகவே, அவை, தன் உடைமைகளாம் என்று எண்ணத் தொடங்கினான் மனிதன். இவ்வாறு, தனியுடைமை நிலை உருப்பெறவே, அவ்வுடைமையைப் பெறமாட்டாதான், அதைக் களவாடியோ கொள்ளை யடித்தோ தனக்கு உடைமையாக்கிக் கொள்ளும் நிலையும் உடன் தோன்றலாயிற்று. அதனால் உடைமை பெற்றவர், தன் உடைமை ஒன்று பலவாகப் பெருக்குவதோடு

அவற்றைப் பறி கொடுக்காது காக்க வேண்டிய ஓர் இன்றியமையாமைக்கும் உள்ளாயினர். அந்நிலைக்குத் துரத்தப்படவே, அவர்கள் தத்தம் உடைமைகளைத் தனித்தனியே நின்று காத்துக் கொள்ள மாட்டாமை யுணர்ந்து, அவற்றைக் காக்க வென்றே ஒரு தலைவனைத் தேர்ந்து கொண்டார்கள். அவ்வாறு கொண்ட தலைவனின் காக்கும் திறம் கண்டு பாராட்ட எண்ணியபோது, கன்று காலிகளுக்கு உண்டான கேட்டினைக் குன்றெடுத்துக் காத்த கண்ணன் நினைவு அவர்கள் நெஞ்சில் எழவே, ஆனிரை ஓம்பும் அத்தொழில் ஒற்றுமையால் காவலனைக் கண்ணனாகவே கொண்டு பாராட்டுவாராயினர். அதனால் கண்ணன் வழிபாட்டைக் குறித்து நின்ற பூவை நிலைத்துறை, பிற்காலத்தில் காவலனைக் கண்ணனாகக் கொண்டு பாராட்டும் நிலையினைக் குறிப்பதாயிற்று. மேலும் சில காலம் செல்ல, காவலன்பால் காணலாம் சில பல பெருமைகளால், அவன் வேறு பல கடவுளர்களாகவும் கருதப்படும் நிலை பிறக்கவே, அவனை, அக்கடவுளர் களாகவும் கொண்டு பாடும் நிலையினைக் குறிப்பனவும் பூவை நிலையே என்ற மரபு இடம் பெற்றது.

முல்லைக் காட்டு எல்லைக்கண் மலர்ந்திருக்கும் பூவை மலர்க்காட்சியால், அம்முல்லை நிலத் தெய்வத்தை நினைத்து வழிபட்ட நிலையிலேயே பூவை நிலைத்துறை தோன்றியது ஆதலின் ஆசிரியர் தொல்காப்பியனார் அதை, அந்நிலத்து ஆயர் ஒழுக்கங்கூறும் கரந்தைத் திணையிடத்தே வைத்தார். பூவை மலர்ச்சியைக் கண்டு மாயோன் நிறத்தை ஒத்தது எனப் புகழ்தல், நாடெல்லை காடாதலின், அக்காட்டிடைச் செல்வோர் அப்பூவைக் கண்டு கூறுதல்" என்ற இளம்பூரணரின் விளக்கவுரையினையும் காண்க.

தொல்காப்பியர் கூறும் பூவை நிலையின் இயல்பு அது வாகவும், அரசர்களை அமரர்களாக ஆக்கிப் பாடுவதையே அவரும் குறிப்பிடுகின்றார் எனப் பிறழ உணர்ந்தமையால், "மாயோனொடு பொருந்திய நிலைபெற்ற பெரும் சிறப்பு உடைமையால் கெடாத விழுப்புகழைப் பொருந்திய பூவை நிலை" என இயல்பாகப் பொருள் தரத் தக்கதாகிய "மாயோன் மேய் மன்பெரும் சிறப்பின் தாவா விழுப்புகழ் பூவை நிலையும்" (தொல். புறம்: 5) என்ற அவர் தொடரை "மாயோன் விழுப்புகழ் மேய பெருஞ்சிறப்பின் தாவா விழுப்புகழ்-மன் பூவைநிலையும்" எனக் கண்ணழித்து "மாயனுடைய காத்தற் புகழையும், ஏனோர்க்கும் உரிய வாய் மேவிய பெரிய தலைமையிற் கெடாத படைத்தல் அழித்தல் என்னும் புகழ்களையும், மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவை நிலையும்" எனத் தமக்கு வேண்டியவாறெல்லாம் பொருள் கொள்ளும் நச்சினார்க் கினியர் உரை, உண்மையுரை அன்று.

பூவை நிலைத் துறை தன் தொல்லியல்பு இழந்து, அரசர்களை அமரர்களாக ஆக்கிப் பாராட்டுவதைக் குறிக்கும் நிலைபெறவே, அவ்வியல்பு அரசர்களின் புகழ் பாடுவதால் பு.வெ. மாலையார் அதை, மன்னர்பால் காணலாம் பல்வேறு மாண்புகளையும் பாராட்டிப் பாடுவதே பொருளாக வரும் பாடாண் படலத்துள் வைத்து விளக்கியுள்ளார்.

"பூவை விரியும் புதுமலரில், பூங்கழலோய்!
யாவை விழுமியம்? யாம்உணரேம்;—மேவார்
மறத்தொடு மல்லர் மறம்கடந்த காளை
நிறத்தொடு நேர்தருத லான்."

பு.வெ.மா: 92

இது, பூவை நிலையில் தொல்லியல்பிற்கு எடுத்துக்காட்டு.

இந்திரன் என்னின் இரண்டேகண்; ஏறு ஊர்ந்த
அந்தரத்தான் என்னின் பிறை இல்லை. அந்தரத்தின்
கோழியான் என்னின் முகன்ஒன்றே, கோதையை
ஆழியான் என்று உரைற்பாற்று" —முத்தொள்ளாயிரம், 130

இது, அரசரை அமரராகப் பாடும் பூவை நிலைக்கு எடுத்துக்காட்டு.

முல்லை நிலத்து ஆயர் தம்மையும் தம் பொருளையும் காக்க வல்ல தலைவன் ஒருவன் தேவை என உணர்ந்து தமக்குள்ளே தேர்ந்து கொண்ட அத்தலைவன் கோன் எனப்பட்டான். அவ்வாறு தோன்றிய அரசவழி, பின்னர் ஒன்று பலவாகப் பிரிந்தது. பிரிவு பலவாயினும், தமிழகம் முப்பெரும் பிரிவினை மட்டுமே கொண்டு, அப்பிரிவிற்கு முறையே சேரர்வழி, சோழர் வழி, பாண்டியர் வழி எனப் பெயரிட்டுப் போற்றிற்று. அவ்வழி வந்தவேந்தர்களிடையே வேறுபாடு அறிதற்கு, முறையே பனந்தோடு, ஆத்திப்பூ, வேப்பம் பூ மாலைகளை அவர்க்கு அடையாளமாக்கி அரசியல் மேற்கொண்டது. பகைவர், தம் ஆனிரைகளைக் கவர்ந்து கொண்டக்கால், மக்கள் மன்னனிடம் சென்று முறையிட, அவன் விரைந்து சென்று அவ்வெட்சியாரை வென்று அவ்வானிரையை மீட்டுத் தருவான். தண்டா ரணியம் என்ற வடநாட்டுக் காட்டகத்தாராய கொடியோர் சிலர் கொண்டு சென்ற தன் நாட்டு ஆட்டு மந்தைகளை, அவர்களை அழித்து மீட்டுக் கொண்டு வந்து, தன் தலைநகராம் தொண்டிநகர்வாழ், அவற்றின் உடையவர் பால் ஒப்புவித்து, அதனால் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் என்ற சிறப்புப் பெயர் பூண்ட சேரவேந்தன்

ஒருவனும் உளனாதல் காண்க.* இவ்வாறு ஆனிரை மீட்புப் போரில் அரசர் பங்குபெறும் காலம் வந்துற்றதும், அவ்வாறு வந்து துணை புரியும் அரசரைப் புகழ்வதும், அவர்தம் அடையாளப் பூக்களைப் புகழ்வதும் இயல்பாகவே, "போந்தை", "வேம்பு", "ஆர்" என்ற துறைகளும் கரந்தைத் திணைக்கண் இடம் பெறலாயின. "நிரைகோள் கேட்டவழி நெடுநிலை வேந்தரும் கதும் என எழுவாராதலின் நிரை மீட்டலின் கண் பூப் புகழப்பட்டது" என்ற உரையாசிரியர் கூற்றினையும் நோக்குக.

அரசர்கள் பண்டு மேற்கொண்ட முதற்போர் ஆனிரை மீட்கும் கரந்தைப் போரே யாதலின், அவர் வென்ற துறைகளை, ஆசிரியர் தொல்காப்பியனார், கரந்தைத் திணைக்கண் அடக்கினாராக. பிற்காலத்தில் அவர்கள் மேற்கொண்ட போர் மண் ஆசை, பெண் ஆசை, புகழ் ஆசை எனப் பல்வேறு காரணம் குறித்தும் நிற்கவே, ஆனிரை மீட்பு ஒன்றை மட்டுமே கொண்டு புகழ்வது கைவிடப்பட்டு, அவர்தம் பல்நிலை வெற்றிகளையும் விளங்கப் பாடும் வழக்கம் வந்துற்றமையால், பு.வெ. மாலையார், "போந்தை", "வேம்பு" "ஆர்" என்ற அத்துறைகளைப் பொதுவியலின் கண் அடக்கினார்.

மகளிராயின், அவர் கற்பினைக் காத்தற் பொருட்டும், ஆடவராயின் அவர் ஆண்மையினைக் காத்தற் பொருட்டும் காலணி சூட்டுவது, தமிழகத்தின் தொல்பெரும்

---

"தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுள் தந்து கொடுப்பித்து"

–பதிற்றுப்பத்து 6–ஆம் பத்துப்பதிகம்

வழக்கமாம். அக்காலணிகளும் மகளிர் புனையும் காலணி சிலம்பு எனப்படுமாயின், ஆடவர் புனையும் காலணி கழல் எனப்படும். வென்று பணி கொண்ட வேந்தர்களின் முடிப் பொன்னால் கழல் பண்ணி அணிவதில் பெருமை கண்டார்கள் பழந்தமிழ் அரசர்கள். "அவர் முடிபுனைந்த பசும் பொன்னின் அடிபொலியக் கழல் தைஇய வல்லாளனை" (புறம்: 40) என்ற தொடர்களைக் காண்க. தத்தம் ஆண்மையைப் புலப்படுத்தும் அணியாகக் கழல் புனைவது வீரர் அனைவர்க்கும் பொதுவியல்பாம் எனினும், அறத்தொடுபட்ட முதல் நற்போர் ஆனிரை மீட்சிப் போரே யாதலின், "கழல்நிலைத்" துறையை வெட்சியாரொடுபடுத்தோ, வேறு காஞ்சி, நொச்சி, தும்பை வீரர்களோடு படுத்தோ கூறாமல், ஆயர் அறப்போர் நிகழ்ச்சிகளிடையே வைத்து விதி வகுத்துள்ளார், ஆசிரியர் தொல்காப்பியனார். ஆனால், பிற்காலத்தில் அறம் குறித்து எழும் போர் ஆனிரை மீட்சிப் போர் ஒன்றே என்ற நிலைகெட்டு, அகநாடு காக்கவும், அரணழிவு போக்கவும், ஆண்மை பழிக்கப் பெறுவதை அகற்றவும் மேற்கொண்ட போர்களும் அறத்தொடுபட்ட போர்களே என்ற நிலை பிறக்கவே, பு.வெ. மாலையார் கழல் நிலையைப் பொதுவியல் திணைக்கண் வைத்து விதி வகுத்துள்ளார்.

பெரும் பெரும் காடுகளுக்கு இடையிடையே இடம் பெற்றிருந்த சிறியவும் பெரியவுமாய ஊர்களின் கூட்டமே, பண்டு நாடு எனப்பட்டது. ஆதலின் ஒரு நாட்டைக் கைப்பற்றக் கருதும் அரசன், போரின் முதல் நிகழ்ச்சியாக, அந்நாட்டைச் சூழ உள்ள காடுகளை அழிப்பதும், அதுபோலவே, தன் நர்ட்டைப் பகைப்பயம் இலதாகக் காக்க விரும்பும் அரசன், அந்நாட்டைச் சூழ உள்ள காடு

அழிவிற்கு உள்ளாகாது நிலை பெறுவதில் நாட்டம் செலுத்துவதும், இன்றியமையாதனவாயின. ஆக, நாடு குறித்த போர் ஒன்றில், காட்டைக் காத்து நிற்கும் காவற்படையும் அந்நாட்டைக் கைப்பற்றுவது குறித்து வந்திருக்கும் நாற்படையும் முறையே பெரியவும் சிறியவுமாக அமைவதன் விளைவால் அக்காடு அழிவின்றி நின்று அந்நாட்டு அழிவின்மையினைப் பறைசாற்றுவதும் அதற்கு மாறாக அவ்விரு படைகளும் முறையே சிறியவும் பெரியவுமாக அமைவதன் விளைவால் அக்காடு அழிவுற்று, அந்நாட்டழிவைப் பறைசாற்றுவதும் கண்கூடாம். அந்நிலையில் தன் நாட்டைச் சூழ அமைந்திருந்த காடு அழிவுற்றுத் தன் படைச் சிறுமையினையும் பகைப் படைப் பெருமையினையும் புலப்படுத்தி, பகையொழித்துப் பணிந்து போவதே அறிவுடைமை என அறிவுறுக்கும் நிலை வந்துற்றபோதும், தன் ஆண்மையில் கொண்டுள்ள அழியா நம்பிக்கையால், காடு கூறுவதைக் கருதாது, தன் சிறுபடையொடு, தான் ஒருவனாகவே சென்று, பகைவர் தம் பெரும் படையைப் பாழாக்குவோனே வீரன் எனும் பாராட்டிற்கு உரியவனாவன். அத்தகைய பெருவீரர்கள் பலர் பண்டு வாழ்ந்திருந்தமையால், அவர்கள் அவ்வாறு உன்னம் போலும் பன்மரங்களால் நிறைந்த தம் காடுகள் அழிந்து தம் படைச்சிறுமையினைப் புலப்படுத்திய போதும் அதைப் பொருட்படுத்தாது, போர் மேல் சென்றதைக்கூற எழுந்ததே உன்ன நிலையாம். இவ்வாறு தன் படைப் பெருமையால் தழைத்தே நின்று ஆக்கத்தையும், தன் படைச் சிறுமையால் பகைவர் மூட்டிய தீயிடைப்பட்டுக் கரிந்து நின்று கேட்டையும் உணர்த்திய உன்னத்தின் தொல்லியல் கெட்டுப், பிற்காலத்தில் நிமித்தம் உணர்த்துவதாகக்

கொள்ளத் தக்க இழிநிலை பெற்று விட்டது. ஆசிரியர் தொல்காப்பியனார் உன்னத்தின் தொன்னிலையையே கருத்துட் கொண்டதால், காட்டகத்து நிகழ்ச்சிகளைக் கூறும் கரந்தைக்கண் அதை அடக்கினார். பு.வெ.மாலையார், அதை நிமித்தம் கூறுவதாகவே கொண்டமையால் பொதுவியலின் கண் அடக்கினார்.

பகைவர், தம் ஆனிரையினைக் கொண்டக்கால், அந்நாட்டு ஆயர், அந்நாட்டு அரசனிடம் சென்று முறையிட, அரசன் விரைந்து சென்று, அப்பகை நாட்டு வீரர்களாம் வெட்சியாரை வென்று ஆனிரையை மீட்டுத் தருவன். இவ்வாறு ஆனிரை மீட்புப் போரில் அரசர் பங்கு பெறும் காலம் வரவே, அவ்வாறு துணை புரியும் அரசர்களின் அடையாள மலர்களைப் புகலுவதோடு, அவ்வரசர்களைப் புகழ்வதும், அவ்வரசர் தம் படை வீரர்கள், தம்மை அவ்வானிரை மீட்புப் போருக்குப் போக்குவான் வேண்டித் தத்தம் பெருமை பேராண்மை களை அவ்வரசர் முன் எடுத்துச் சொல்லிப் பெருமை கொள்ளுதலும் ஆகிய நிகழ்ச்சிகளும் கரந்தை நிகழ்ச்சிக் கண் இடம் பெறலாயின; ஆகவே, "சீர்சால் வேந்தன்" சிறப்பு எடுத்து உரைத்தலும், தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும் கரந்தைத் திணைத் துறை களாயின என்கிறார் ஆசிரியர் தொல்காப்பியனார்; இவற்றிற்கு, முறையே, "வேத்தியல் மலிவு", "நெடுமொழி கூறல்" எனும் பெயர்கள் சூட்டியுள்ளார் பு.வெ. மாலையார்.

அவ்வாறு நெடுமொழி கூறிக் களம் புகுந்த கரந்தை வீரர்களுள் சிலர், போரில் புண்பட்டு உயிரிழந்து போக, எஞ்சியோர் புண் பெற்றும், பெறாதும் புறங்காட்டிப்

போந்து விடாது, வந்த பகைவர் படையை வென்று துரத்திவிட்டு, வெற்றிப் புகழோடு வீடு திரும்புவதும் நிகழவே, அவற்றைக் கூறும் "வாள்வாய்த்துக் கவிழ்தல்", "வருதார் தாங்கல்" என்ற துறைகளும் கரந்தைத் திணைக்கண் இடம் பெற்றன; "வாள் வாய்த்துக் கவிழ்தலை"ப் "போர்க்களத்து ஒழிதல்" என ஒரு துறையாகக் கொண்ட பு. வெ. மாலையார், "வருதார் தாங்கும்" நிகழ்ச்சியை நான்கு வகையாக விரித்து, வந்த படையைத் தனித்து நின்று தாங்கிய தறுகண்மையினை யுடையானுக்கு ஆள் எறிபிள்ளை எனும் பெயர் சூட்டிப் பாராட்டும் "ஆள் எறி பிள்ளை" வெற்றி கொண்ட அவ்வீரன் தன் வேற்படைக்கு வீழ்ந்த பகைவர் தம் குடரை மாலையாகச் சூட்டி மகிழ்ந்தாடும் வெற்றித் திருக்கூத்தைக் கூறும் 'பிள்ளை சூட்டு', வீரப் புண்ணோடு வீடு திரும்பும் வீரன் செயல் கூறும் "புண்ணோடு வருதல்", வீரப் புண் பெற்றேன் என்ற பெருமித வுணர்வால் அவ்வீரன் ஆடும் வெற்றித் திருக்கூத்தைக் கூறும் "பிள்ளைத் தெளிவு" என நால்வேறு பெயர் சூட்டி விளக்கியுள்ளார்.

இத்துறைகளெல்லாம், கரந்தை வீரர் கன்று கறவைகளோடு கூடிய ஆனிரையினை மீட்டுத்தந்து, தம் நாட்டிற்குச் செய்த கடமைகளைக் கூறும் துறைகளாம். இனி, இவ்வாறு பணியாற்றிய அப்பெரு வீரர்களுக்கு அந்நாட்டு மக்கள் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவராவர். போர்க்களம் புகுந்தாருள் சிலர் போராடி இறந்தனர்; வெற்றியோடு வீடு திரும்பினாருள் சிலர் புண்ணோடு திரும்பினர்; சிலர் புண்தானும் பெறாதே திரும்பினர் என அறிந்த அந்நாட்டவர், புண் பெறாது மீண்டவனே போர் வன்மை வாய்க்கப் பெற்றவனாவன்; ஆகவே, தம்மையும்

தம் உடைமைகளையும் காக்கவல்ல காவலன் அவனே ஆவன் என அவனுக்கு ஆட்சித் தலைமை அளித்துச் சிறப்பித்தனர். ஆகவே, அதைக் கூறும், "வாள் மலைந்து எழுந்தோனை மகிழ்ந்து, பறை தூங்க நாடு அவனுக்கு அருளிய "பிள்ளையாட்டு" என்ற துறையினைக் கரந்தைத் துறைகளுள் ஒன்றாகக் கோத்துள்ளார் ஆசிரியர் தொல் காப்பியனார். அரசனைக் குறிக்க வழங்கும் பெயர்களுள் "கோன்" என்னும் குறியீடு நனிமிகப் பழமையுடைய தாதலும், தமிழ் நாட்டு முதுபெரும் வேந்தர்க்குடிகளாம் மூவேந்தர் குடிகளுள் ஒன்றாகிய பாண்டியர் குடி, ஆயர் குடியோடு உறவுடையதாம்-"மலிதிரையூர்ந்து தன் மண் கடல் வெளவலின், மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடு இடம்படப் புலியொடு வில் நீக்கிப் புகழ் பொறித்த கிளர் கெண்டை, வலியினான் வணங்கிய வாடாச் சீர்த் தென்னவன். தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய, நல்லினத்து ஆயர்" (முல்லைக்கலி. 4) எனக் கூறப்பெறுதலும், ஆயர், இன்றும் கோனார் என அழைக்கப் பெறுதலும், மக்கள் உடைமைகளைக் காக்க வந்த மக்கட்டலைவனே பண்டு மன்னவனாக்கப் பெற்றான் என்ற உண்மை உலகியலாதலும், மக்களின் உடைமைகளாகப் பண்டு கருதப்பட்டன ஆனிரைச் செல்வங்களே யாதலும், பகைவென்ற நிரைமீட்டுத் தந்தானுக்கு அரச உரிமை அளித்துச் சிறப்பிக்கும் துறைக்கு அரண் செய்கின்றன.

அரசர் இடம் பெறாத அக்காலத்துக் கரந்தை நிகழ்ச்சிகளையே, ஆசிரியர் தொல்காப்பியனார் கூறு வதால், வென்ற வீரனை வேந்தனாக்கும் நிகழ்ச்சியை விளக்கினார்; ஆனால், பு.வெ. மாலையார் மக்கள் தலைவனாக மன்னவன் வந்துற்ற பிற்காலத்தியக் கரந்தை

நிகழ்ச்சியைக் கூறுவதால், மக்களுள் ஒருவனை மன்னவனாக்கும் நிகழ்ச்சியைக் கூறாது, அவ்வாறு வெற்றி கொண்டு வந்த வீரனுக்கு மன்னவன் செய்யும் சிறப்பினைக் கூறத்தொடங்கி, "பிள்ளைப் பெயர்ச்சி" என்ற துறையினைக் கொண்டு, "போர்தாங்கிப் புள் விலங்கியோனைத் தார் வேந்தன் தலையளித்தன்று" என அதற்கு விளக்கமும் தந்துள்ளார்.

களம் நோக்கிச் சென்று வென்று மீண்டாருள் விழுமியோன் ஒருவனுக்கு அரச வாழ்வு அளித்துச் சிறப்பித்த நாட்டு மக்கள், அப்போரில் வீழ்ந்து மடிந்தாரையும் பாராட்டக் கடமைப் பட்டவராவர். அவர்க்கு அவர் செய்த பாராட்டே கல்நாட்டுதல். ஆகவே, அந்நிகழ்ச்சியின் பல்வேறு பகுதிகளையும் விளக்கும் "காட்சி," "கல்கோள்", "நீர்ப்படை", "நடுகல்" "பெரும்படை", "வாழ்த்து" முதலாம் துறைகள் கரந்தைத் திணையின் இறுதிக்கண் நிற்கும் துறைகளாயின. கல்நாட்டு விழா, போரில் வீழ்ந்த வீரர்களுக்கு மட்டுமேயல்லாமல், கற்புடைய மகளிர் போலும் பிறர்க்கும் செய்யும் சிறப்பாகப் பிற்காலத்தில் கொள்ளப்பட்டன வேனும், அது, கரந்தை வீரர்க்குச் செய்யும் சிறப்பாக மட்டுமே பண்டு கொள்ளப்பட்டது. "நாகு முலையன்ன நறும்பூங்கரந்தை விரகறியாளர் மரபிற் சூட்ட நிரை இவண் தந்து நடுகல் ஆகிய வென்வேல் விடலை" (புறம்; 261), "பல்ஆன் கோவலர் படலை சூட்டக் கல் ஆயினையே, கடுமான் தோன்றல்!" (புறம்: 265), "பல் ஆபெயர்த்து நல்வழிப் படந்தோன் கல்", "அன்று கொள் ஆ பெயர்த்து ஆரமரில் வீழ்ந்தோன் கல்" என வரும் தொடர்கள், ஆனிரை மீட்சிப் போரில் வீழ்ந்தானுக்கே கல் நாட்டுவர்; நடுகற்களுக்கு வழிபாடு செய்வார் ஆயரே என்ற

உண்மைகட்கு உறுதுணையாதல் காண்க. ஆகவே, கல் நாட்டு விழா கரந்தை வீரர்க்கே உரித்தாதல் உணர்ந்த ஆசிரியர் தொல்காப்பியனார், அத்தொடர்புடைய துறைகளை, "ஆரமர் ஓட்டல்", "ஆ பெயர்த்துத் தருதல்" போலும் கரந்தை வீரர் செயல்களைத் தொகுத்துக் கூறும் சூத்திரத்தின்கண் கொண்டாராக. அந்நிகழ்ச்சி, வேறு நிலைகளால் விழுமியோராகி விண்ணுலகு புகுந்தார்க்கும் உரிமையாக்கப் பெற்ற பிற்கால நிலையினையே கருத்தில் கொண்ட பு.வெ. மாலையார் "கையறு நிலை" எனப் பொதுவான துறை ஒன்றை மட்டும் ஈண்டுகொண்டு, கல் நாட்டு விழாக் குறித்த துறைகளைப் பொதுவியலின்கண் அடக்கியுள்ளார்.

ஆக, இதுகாறும் கூறியவற்றான், பாலைநிலத்து மறவர், தமக்குப் பொருட் குறைபாடு நேருந்தோறும், முல்லை நிலத்து ஆயர்களின் ஆனிரைகளைக் கைப்பற்றிச் செல்வதே வெட்சி என்பதும், ஆனிரைக்ளே தம் உடைமையாம் எனக் கொண்டு வாழ்ந்த முல்லை நிலத்து ஆயர், அம்மறவர் பின் சென்று, அவரை வென்று, அவ்வானிரைகளை மீட்டுக் கொணர்தலே கரந்தை என்பதும், நிரை கோடலையும், நிரை மீட்டலையும் பண்டு மேற்கொண்டிருந்தவர் முறையே, பாலைநிலத்து மறவரும், முல்லை நிலத்து ஆயருமே ஆவர் என்பதும், ஆக, நிரை கோடலும், நிரை மீட்டலும் குறித்து எழும்போர் பாலை நிலத்தார்க்கும், முல்லை நிலத்தார்க்கும் இடையே நிகழ்ந்த போர் ஆகும் என்பதும் முடிபாயின.

"கல்லென் பேரூர்க் கணநிரை சிறந்தன
வல்வில் எயினர் மன்று பாழ்பட்டன"

—சிலம்பு; 12; 12–13

"காயமீன் எனக் கலந்து கானிரை
மேயவெந்தொழில் வேடர் ஆர்த்து உடன்
பாய மாரி போல் பகழி சிந்தினார்;
ஆயர் மத்து எறி தயிரின் ஆயினார்." —சிந்தாமணி; 421

என வரும் சிலப்பதிகார – சிந்தாமணிச் செய்யுட்களும் இக்கருத்தினையே வலியுறுத்தி நிற்றல் உணர்க.

நிரைகோடலும், நிரை மீட்டலும் பண்டு தோன்றிய முறை இதுவே. ஆனால், காலம் செல்லச் செல்ல, அவற்றிடையே சிலபல மாறுதல்கள் இடம் பெறலாயின. பாலை நிலத்து மறவரே நிரைகொள்வர்; அவ்வாறு அவர் கொள்ளும் ஆனிரை, அப்பாலையை அடுத்துள்ள முல்லை நிலத்து ஆயர்க்குரிய ஆனிரையே; பாலை நிலத்து மறவர் கைப்பற்றிச் சென்ற ஆனிரையை மீட்டுக் கொணர்வார் முல்லை நிலத்து ஆயரே என்ற நிலை மாறிற்று. தனக்குப் பணியாத நாட்டின் மீது போர் தொடுக்கப் போவதை அறிவிக்கும் வாயில்களுள் ஒன்றாகத் தன் படையினை ஏவி, அப்பகை நாட்டு ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொணர் வதும், அவ்வாறு, அவ்வரசன் வீரர் கைப்பற்றிச் சென்றனர் தன் நாட்டு ஆயர்களின் ஆனிரைகளை என அறிந்த அப்பகை நாட்டு அரசன் தன் படை வீரரை ஏவி, அவ்வானிரைகளை மீட்டுக் கொணர்வதும் வழக்கமாகி விட்டன. இவ்வாறு, அரசர் இருவர் பகைத்து நின்று, நிரைகோடலும், நிரை மீட்டலும் மேற்கொண்டதை, முறையே வெட்சி ஒழுக்கம் எனவும், கரந்தை ஒழுக்கம் எனவும் பெயரிட்டுப் பாடல் புனைந்து பாராட்டு வாராயினர் புலவர்களும்.

நிரைகவர்தலும், நிரை மீட்டலும் முறையே சென்று தாக்குவாராலும், நின்று தாக்குவாராலும் தத்தம் போர்

நிகழ்ச்சிகளின் தொடக்க நிகழ்ச்சிகளாக மேற்கொள்ளப் பெறுவனவே என்பதை ஏற்றுக் கொள்வதாயினும், அந்நிகழ்ச்சிகள் அவ்வரசர் பின்னர் மேற்கொள்ளப் போகும் ஏனைய போர்களோடு தொடர்புடையன ஆகா. வெட்சிப் போரிலும், கரந்தைப் போரிலும் தொழிலாற்றும் படைகள், இரு திறத்தாரின் எல்லைக் கண் நிற்கும் சிறுபடைகளே; அவ்வரசர்களின் பெரும் படைகள் அவற்றில் ஈடுபடுவதில்லை.

மேலும், பின்னர்ப் பெரும் போர் செய்ய இருக்கும் அரசர், அதற்கு அறிகுறியாக மேற்கொள்ளப்படுவனவே வெட்சியும், கரந்தையும் எனக் கருதப்படுவது உண்டு என்றாலும், அம்முறையினை அரசர் அனைவருமே பின்பற்றி வந்துள்ளனர் எனக் கூறுவதற்கில்லை. பேரரசர் களும், குறுநில மன்னர்களுமாய்ப் பழந்தமிழ் நாட்டினைப் பண்டு ஆண்டிருந்தாருள், போர் மேற்கொள்வதன் முன்னர், இம்முறையினைப் பின் பற்றினார் ஒருவரும் இலர். அவ்வாறு மேற்கொண்டனர் என்பதை உறுதி செய்ய வல்ல சான்று எதுவும் பழந்தமிழ் நூல்களுள் காணப் பெறவில்லை.

“சில்பரிக் குதிரைப் பல்வேல் எழினி,
கெடலரும் துப்பின் விடுதொழில் முடிமார்,
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து
வீங்குமென் சுரைய ஏற்றினம் தரூஉம்.” —‘அகம்: 105

“மாயிரும் முள்ளூர் மன்னன் மாவூர்ந்து
எல்லித் தரீஇய இனநிரைப்
பல்ஆன் கிழவரின் அழிந்த...” —நற். 291.

என்னும் தொடர்கள், அரசர் சிலர், பகை நாடுகளுள் புகுந்து, அவர் தம் ஆனிரைகளைக் கைப்பற்றிக் கொண்டனர் என்பதையும், ஆடுகோட்பாட்டுச் சேர லாதன், தண்டாரணியம் எனும் காட்டு நாட்டார் கைப்பற்றிச் சென்ற ஆனிரைகளை மீட்டுக் கொணர்ந்தான் எனப் பதிற்றுப்பத்துப் பதிகம் அளிக்கும் நிகழ்ச்சி, பகைவர் கவர்ந்து சென்ற ஆனிரைகளை, அரசர் சிலர் மீட்டுக் கொணர்ந்தனர் என்பதையும் அறிவிக்கின்றனவேனும், அவர்கள், அந்நிகழ்ச்சிகளின் பின்னரும் தொடர்ந்து போரிட்டனர் என அறிவிக்கவில்லை. போர் நிகழ்ச்சி களைக் கூறும் தொல்காப்பியர் முதலாம் பேராசிரியர் களும், போர் இத்தனை வகைப்படும் என்றுதான் கூறினரே யல்லால், போர் நிகழ்வதன் முன், வெட்சியும் கரந்தையும் நிகழ்ந்தே யாதல் வேண்டும் எனக் கூறினாரல்லர். போர் பல காரணங்களை முன்னிட்டு எழும். பொன்னாசையால் எழும் போர், மண்ணாசையால் எழும் போர்; பெண்ணாசையால் எழும் போர்; புகழாசையால் எழும் போர், இவ்வாறு, அது பலவகைப்படும். அவற்றுள் இது, பொன்னாசையின் ஒரு பகுதியாய்ப், பகை நாட்டுப் பொருளெல்லாம் வேண்டும் எனப் பேராசை கொள்ளாது, அவர்தம் ஆனிரைகளை மட்டும் பெற்றால் போதும் என்ற ஆசை காரணமாய் எழுந்த போரும், அதன் பின் விளைவுமாம். இவ்வாறல்லது, வெட்சியும், கரந்தையும் அரசர்கள் பின்னர் நிகழ்த்த இருக்கும் பெரும் போருக்கு அறிகுறியாக, முன் நிகழ்த்தும் நிகழ்ச்சிகளாம் எனக் கொள்வது, அத்துணைப் பொருத்தம் உடைத்தன்று.

மேலும், வெட்சி, கரந்தைப் போர்கள், அரசர் பின்னர்ப் போரிடற்காம் முன்னேற்பாடாயின், வெட்சி, கரந்தை ஆகிய அவ்விரு போர்களிலும் பங்கு கொண்டு மாண்ட இரு திறத்து வீரர்களும் பாராட்டப் பெறுதல்

வேண்டும். ஆனால், அவருள் வெட்சிப் போர்க்கண் வீழ்ந்தார் பாராட்டப் பெறுவதிலர். கரந்தைப் போரில் வீழ்ந்தார் மட்டுமே பாராட்டப் பெறுகின்றனர். கல் நாட்டிச் சிறப்புச் செய்யவும் பெறுகின்றனர். வெட்சிவீரர், பகைவர் பசுக்களைப் பாதுகாவலான ஓரிடத்தே வைத்துப் போற்ற முன் வந்த பெருவீரராயின், அம்முயற்சியில் உயிரிழந்த அவ்வெட்சி வீரரையும் உலகம் பாராட்டி யிருத்தல் வேண்டும். ஆனால், இல்லை; காரணம், அவர்கள் போர் புரிந்தது அது கருதியன்று. தம் வறுமை போகப் பிறர் வளத்தைக் கொள்ளை கொள்ள வந்தவராதலின், அவர் செயல் அறமில் செயலாம். ஆனிரை கவர்ந்து வரும் வெட்சி வீரர் இடைவழியில், அந்நிரையுள் கொழுத்த ஆ ஒன்றைக் கொன்று, அதன் ஊன் உண்டு மகிழ்வர் எனக் கூறும் அகநானூற்றுச் சான்று, அவர் கொடுமையினைக் குன்றிலிட்ட விளக்கென நின்று காட்டுவதாகும். ஆகவே, அவ்வெட்சியார் செயல் அறம் அல்லாச் செயலாம் என்பது உறுதியாம். ஆகவே, அவருள் மாண்டவர் பாராட்டப் பெற்றிலர். ஆனால், கரந்தை வீரரோ என்றால், வெட்சியார் கொண்டு சென்ற நிரைகளை மீட்டுக் கொணரும் அரும்பணி மேற்கொண்டவராவர். ஆகவே, அவர்கள் இறப்பு உயர்ந்தவராகப் பாராட்டப்பெற்று, நடுகல்லாகும் இறவாப் பெருநிலை அளிக்கப் பெற்றுள்ளனர்.

ஆகவே வெட்சியும் கரந்தையும் பகை கொண்டு போரிட விரும்பும் அரசர் இருவர் மேற்கொள்ளும் முதல் நடவடிக்கைகளாகக் கொண்டு பாடப் பெறுகின்றன வேனும், அவை, பற்றாமையால் வருந்திய பாலை நிலத்து மறவராலும், அவரால் தம் நிரை இழந்து வருந்திய முல்லை நிலத்து ஆயராலும் மேற்கொள்ளப்பட்ட பொருள் தேடும் போரும், அப்பொருள் காக்கும் போர்களுமேயாம் என்பது முடிபாம்.

பசித்த பாலை நிலத்து மறவர், தம் பசி போக, ஆயர் ஆனிரையைக் கவர்ந்து கொள்ள, அதை ஆயர் மீட்டு வந்தனர் என்ற நிலை நிலவிய போது, இரு திறத்தவர் தொழில்களில் நிரைமீட்கும் ஆயர் தொழிலே சிறப்புடையதாகவே, வெட்சியாவது, ஆ தந்து (மீட்டுத் தந்து) ஓம்பலாக இருந்தது. அந்நிலைமாறி வேந்தர் தம் போர் நிகழ்ச்சியின் முதல் நடவடிக்கையாகப் பகைநாட்டு ஆனிரைகளைக் காத்தற் பொருட்டு அதைக் கைப்பற்ற, அப்பகையரசர் அதை மீட்டல் என்ற நிலை வந்துற்ற பின்னர், ஓம்பல் கருதி நிரை கவரும் வேந்தர் தொழிலே விழுமியதாகப்படவே, வெட்சியாவது நிரைகவர்தலாக மாறிவிட்டது. இவ்வாறு வெட்சி நிரை கவர்தலுக்கு மட்டுமே பெயராகி விடவே, நிரைமீட்கும் தொழிலைத் தனித்திணையாக்கி, அதற்குச் சூட்டத் தக்க புதுப் பெயர் தேடி அலைந்த ஆசிரியர்கள், நிரைமீட்போர் நிகழ்ச்சிகளைக் கூறும் "வெறியறி சிறப்பின்" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தில் கரந்தை எனும் பெயர் வரக்கண்டு அதையே அதற்குப் பெயராகச் சூட்டி விட்டனர் போலும்.

ஆனிரைக்கு உரிய ஆயர் முல்லை நிலத்தவராவர். அவ்வானிரையைக் களவாடிக் கவர்ந்து செல்லும் மறவர் பாலை நிலத்தவராவர். அவ்வாறாகவும், நிரை கோடலும், நிரை மீட்டலும் ஆகிய இரு நிகழ்ச்சிகளையும் வெட்சி எனவும், கரந்தை எனவும் பெயரிட்டு ஓரிடத்து நிகழ்ச்சிகளாக ஒன்றுபடுத்திக்கூறும் ஆசிரியர் தொல்காப்பியனார், அவ்வொழுக்கம் அவ்விருவர்க்கும் உரியதல்லாத குறிஞ்சி நிலத்தின் புற ஒழுக்கமாம் என்று கூறுகிறார். "வெட்சிதானே குறிஞ்சியது புறனே." (தொல். புறம். 1)

தொல்காப்பியத்திற்கு உரை வகுத்த ஆசிரியர்களுள் நச்சினார்க்கினியர், "களவொழுக்கமும் கங்குற் காலமும்

காதலர் கடுகினும் தான் கருதிய பொருளை இரவின் கண் முடித்து மீடலும் போல்வன ஒத்தலின், வெட்சி குறிஞ்சிக்குப் புறன் ஆயிற்று'' என்று காரணம் காட்டி யுள்ளார். உரையாசிரியர் எனச் சிறப்பிக்கப் பெறுவோ ராகிய இளம்பூரணர், "வெட்சி, குறிஞ்சிக்குப் புறனாயது எவ்வாறு எனின், நிரைகோடல் குறிஞ்சிக்கு உரிய மலை சார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயின், பிறநாட்டு ஆன் நிரையைக் களவிற்கோடல் ஒருபுடை குறிஞ்சிக் குரித்தாகிய களவோடு ஒத்தலானும், அதற்கு அது புறனாயிற்று என்க,'' எனக் காரணம் காட்டியுள்ளார். வெட்சியாவது நிரை கவர்தல் என்று கொண்டமையால், நச்சினார்க்கினியர் அவ்வாறு கூறினார். உரையாசிரியர்க்கும் அதுவே கருத்து ஆதலின், நிரை கோடல் குறிஞ்சிக்குரிய மலை சார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும் என்ற நேரிய காரணத்திற்கு மேலும் களவுத்தன்மையாம் ஒருமைப்பாட்டினையும் காரணம் காட்டியுள்ளார்.

ஆசிரியர் தொல்காப்பியனார், தொடக்க நிலை வெட்சியினையே விளக்க முன் வந்தவராவர். ஆகவே, வெட்சி ஒழுக்கம் பற்றிய அவர் கருத்து வெட்சியாவது நிரை கவர்தல் ஒழுக்கத்தை மட்டும் உணர்த்துவதன்று; கவரப்பட்ட நிரையை மீட்டுத் தரும் ஒழுக்கத்தை உணர்த்துவதாகும் என்பதே. ஆகவே "வேந்து விடு முனைஞர் வேற்றுப் புலக்களவின் ஆதந்து ஓம்பல்...மேவற்று ஆகும்'' என்ற சூத்திரத்திற்கு. "வேந்தனால் விடப்பட்ட முனை, ஊரகத்து உள்ளார், வேற்று நாட்டின்கண் களவினானே ஆவைக் கொண்டு, பெயர்ந்து பாதுகாக்கும் மேவலை உடைத்த'' என உரையாசிரியரும் வேந்தனால் விடப்பட்டு முனைப்புலம் காத்திருந்த தண்டத் தலைவர்

பகை நிலத்தே சென்று களவினாலே ஆனிரையைக் கொண்டு போந்து பாதுகாத்தலைப் பொருந்துதலை யுடைத்து" என நச்சினார்க்கினியரும் பொருள் கூறி யுள்ளனர் என்றாலும், "களவின் ஆதந்து ஓம்பல்" என்ற தொடரில் உள்ள "களவின்" என்பதை வினையடை யாக்கிக், களவினால் எனப் பொருள் கொண்டு, தந்து, என்ற வினையொடு கூட்டி, நிரைகவர்வார் தொழில் உணர்த்து வதாகக் கொள்ளாது. அதைப் பெயரெச்ச அடையாக்கி, ஆ என்பதோடு கூட்டித் திருடப்பட்ட பொருளைத், திருடர் தொழிலை, அவரால் திருடப்பட்ட பொருள் மீது ஏற்றித் திருட்டுப் பொருள் என வழங்கும் வழக்குப்போல், களவின் ஆ என்பதற்குக் களவாடப்பட்ட ஆ எனப் பொருள் கொண்டு, தந்து ஓம்பல் நிரைமீட்பார் தொழில் உணர்த்துவதாகக் கொள்வதே, இயல்பான பொருள் கோள் நெறியாகும். ஆகவே, வெட்சியைக் குறிஞ்சிப் புறம் என்பதற்குக் குறிஞ்சித் திணையின் அகவொழுக்கமாகிய களவொழுக்க ஒருமைப்பாட்டினைக் காரணம் காட்டுவது பொருந்தாது.

ஆனிரைக்கு உரிய ஆயர் முல்லை நிலத்தவரே யாயினும், அவர் அந்நிலத்திலேயே வாழ்ந்திருப்பாரல்லர். தம் ஆனிரைகள், தாம் வேண்டும் தழை உணவினை வேண்டுமளவு உண்டு மகிழுமாறு, அவற்றை அத்தழை யுணவு பெருமளவில் கிடைக்கும் குறிஞ்சி நிலத்தே கொண்டு சென்று மேய்த்து அவ்வானிரைகளோடு ஆண்டே வாழ்வாராவார். பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென ஆர்கலிமுனைஇய கொடுங்கோல் கோவலர் ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பிப் புலம்பெயர் புலம்பொடு கலங்கி" (நெடுநல் வாடை: 2-5) என்ற தொடர் பொருளினையும் காண்க. ஆகவே, ஆனிரைகளைக்

களவாடிக் கொள்வான் செல்லும் பாலை நிலத்து மறவர், அக்குறிஞ்சி நிலத்துப் புகுந்தே, அவ்வானிரைகளைக் களவாடிக் கைப்பற்றுவர். அதை விடுத்து ஆயர் வாழும் ஊருட் புகுந்து ஆனிரைகளைக் கைக்கோடல் பாலை நிலத்து எயினர்க்கு இயலாது. ஆயர் பாடி புகும் ஆனிரை. ஒருங்கு கூடி இரா; உரியார் வீடுதோறும் புகுந்து அடங்கிவிடும். மேலும், ஆண்டு ஊர்க்காவலும் அதிகமாம். அவ்வாறே, எயினர் ஊர் புகும் ஆனிரைகளும் ஒருங்கு கூடி நில்லா. அவற்றை அவ்வெயினர் தமக்குள்ளே பகுத்துக் கொண்டு விடுவர். மேலும், ஆண்டு அவர் ஆற்றலும் அதிகமாம். ஆகவே, தம் ஆனிரைகளை மீட்கத் துணியும் ஆயர்களும், ஆனிரைகளோடு பாலை நிலத்து மறவர், குறிஞ்சி நிலத்தைக் கடந்து விடா முன்னரே, போரிட்டு மீட்க முன் வருவர். ஆகவே, நிரை கோடலும், அந்நிரையினை மீட்டலும் ஆகிய இரு நிகழ்ச்சிகளும், அவ்விருவர்க்கும் உரிய நிலமல்லாத குறிஞ்சி நிலத்திலேயே நிகழும். "நிரை கோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும்" என்ற உரையாசிரியரின் தலையாய காரணத்தையும் காண்க. ஆகவே, "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" என்றார் ஆசிரியர் எனக் கொள்க.

வெட்சி வீரராவர் பாலை நிலத்து மறவராவர். பாலை எனப் பெயருடையதொரு தனி நிலம் இல்லை. குறிஞ்சி நிலமே கோடையின் கொடுமையாலும், மழை பெறா வறுமையாலும், வளமும் வனப்பும் இழந்து, வேனிற் காலத்தில் பாலை எனும் பெயருடையதாகிவிடும். (சிலம்பு: 11:62-67). ஆகவே, வாழும் வகையற்றுப் போகும் குறிஞ்சி நிலத்து மக்களே,-அவ்வேனிற் காலத்தில், பாலை நிலத்து மறவர் என்னும் பெயருடையராகிவிடுவர். கோடையின்

கொடுமை, குறவனை மறவனாக மாற்றிற்று. வளமார் காலத்தில் வேட்டையாடி வாழ்ந்தவன், வறுமைக் காலத்தில், ஆறலைத்தும், ஆனிரை கவர்ந்தும் வாழத் தலைப்பட்டான். ஆக, வெட்சியான் செயலாகக் கூறப் படுவன எல்லாம், கோடைகாலத்துக் குறிஞ்சி நிலத்தான் செயலேயாதலின், வெட்சியைக் குறிஞ்சிப் புறன் என்று கொண்டார் எனக் கூறுவதும் பொருந்தும்.

புணர்தல் குறிஞ்சி நிலத்தின் அகவொழுக்கம் எனப் பெயர் பெற்றது. அதுபோல், வெட்சி குறிஞ்சி நிலத்தின் புறவொழுக்கமாம். வெட்சியாவது. களவாடப்பட்ட ஆனிரைகளை மீட்டுக் கொண்டு வந்து, அவற்றின் கன்று களோடு ஒன்றுபடுத்துதல். ஆகவே, அன்பால் ஒன்று பட்டிருக்கும் உயிர்கள், பிரிக்கப்பட்ட நிலையினைக் கெடுத்து ஒன்றுபடுத்தும் வெட்சி ஒழுக்கம், குறிஞ்சியின் புறன் ஆயிற்று என்ற காரணமும் ஒரு வகையில் ஏற்புடையதே ஆகும்.

## வெட்சித் திணைச் சூத்திரங்கள்

"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்,
வெட்சிதானே குறிஞ்சியது புறனே,
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே'."

"வேந்து விடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்."

"படை இயங்கு அரவம், பாக்கத்து விரிச்சி,
புடைகெடப் போகியசெலவே, புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்துஇறை, முற்றிய
ஊர்கொலை, ஆகோள் பூசல்மாற்றே,

நோயின்று உய்த்தல், நுவலுழித் தோற்றம்,
தந்துநிரை, 'பாதீடு, உண்டாட்டுக், கொடை என
வந்த ஈரேழ் வகையிற்று ஆகும்."

"மறம் கடைகூட்டிய குடிநிலை (துடிநிலை) , சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே."

"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட்டு அயர்ந்த காந்தளும், உறுபகை
வேந்திடை தெரிதல்வேண்டி, ஏந்துபுகழ்ப்
போந்தை, வேம்பே, ஆர் என வரூஉம்
மாபெரும் தானையர் மலைந்த பூவும்,
வாடா வள்ளி, வயவர் ஏத்திய
ஓடாக் கழல்நிலை, உளப்பட ஓடா
உடல்வேந்து அடுக்கிய உன்னநிலையும்
மாயோன் மேய மன்பெரும் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்
ஆரமர் ஓட்டலும், ஆபெயர்த்துத் தருதலும்,
சீர்சால்வேந்தன் சிறப்பு எடுத்து உரைத்தலும்,
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்,
மனைக்குரி மரபினது கரந்தை அன்றியும்,
வருதார்தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தல் என்று
இருவகைப் பட்ட பிள்ளை நிலையும்,
வாள்மலைந்து எழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க,
நாடு அவற்கு அருளிய பிள்ளை யாட்டும்,
காட்சி கால்கோள், நீர்ப்படை, நடுகல்
சீர்த்தமரபில் பெரும்படை வாழ்த்தல் என்று
இருமூன்று மரபின் கல்லோடு புணரச்
சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே."

—தொல்: புறத்திணை: 1.5.

2

# வஞ்சியும் காஞ்சியும்

மக்கள் நாகரிக வாழ்வில் முன்னேற, அவர்களுடைய தேவைகளும், அதற்கேற்பப் பல்வேறு வகையில் பெருகத் தலைப்பட்டன. பருமரக் காடு செறிந்த மலை நாட்டில் வாழ்ந்திருந்த போது, அம்மலை நாட்டு மண், மனிதனின் உழைப்பை எதிர் நோக்காமலே வாரி வழங்கிய காய்களையும், கனிகளையும், காட்டு விலங்குகளின் இறைச்சியையும் உண்டு உடலோம்பி உயிர் வாழ்ந்திருந்த மனிதனுக்கு, அவை அருகிய காலத்தில் தேவைப்பட்டது, முல்லை நிலத்து ஆயர்களின் ஆனிரைகள் மட்டுமே. ஆகவே, ஆதி மனிதன் மேற்கொண்ட முதற் போர், ஆனிரை கவரும் போரும், அதை மீட்கும் போரும் ஆகிய வெட்சிப் போராய் அமைந்தது.

மனிதன் வளர்ந்தான்; அவன் தேவைகளும் வளர்ந்தன. பண்டு காயையும், கனியையும், கிழங்கையும், கீரையையும், காட்டு உயிர்களின் ஊனையும் உண்டு பசியொழிந்து வாழ்ந்திருந்த மக்கள், வயிற்றுப் பசியைப் போக்க உதவுவதே உணவு; ஆகவே, அது போக்கும் எதையும் உண்ணலாம் என்று எண்ணி, அக்காய் கனி, கிழங்கு கீரைகளையே இன்னும் உண்ணுவதில்லை; நெய்விரவு கறிச்சோற்றினையே முப்போதும் உண்ணவும்,

அறுசுவைகளையும் கூட்டும் வகையால் ஊட்டி உண்ணவும் வேண்டும் நிலைக்கு அவன் உயர்ந்து விட்டான்; உணவுக் குறைபாடு தீர்ந்ததும், மனித மனம் உறையுளை நாடிற்று; காட்டு வாழ்வினராய் வாழ்ந்திருந்த காலை, மலைக் குகைகளும், மரச் செறிவுகளும் போதும், மழையும் வெயிலும் போலும் இயற்கை தரும் துன்பங்களிலிருந்தும், காட்டு வாழ் கொடுவிலங்குகளின் கேடுகளிலிருந்தும் தம்மைக் காத்துக் கொள்ள என்று எண்ணி, அவற்றிலே நிறைவுகண்ட மக்கள், இன்று வேனிற் காலத்தில் வெப்பம் நீங்கிக் குளிர் ஊட்டவும், பனிக்காலத்தில் குளிர்போக்கி வெப்பம் ஊட்டவும் வல்ல வேறு வேறு அறைகளும் நிலைகளும், உண்ண ஓர் அறை, உறங்க ஓர் அறை, உரையாட ஓர் உறை, விருந்தினரை வரவேற்க ஓர் அறை, விழாக் காண ஓர் அறை என எண்ணிலா அறைகளும் நிலைகளும் கொண்ட எழுநிலை மாட வாழ்வினையே விரும்புவராயினர். உலாவிலும், உறையுளிலும் ஒரு குறையும் இல்லை என்ற நிலை பிறந்த பின்னர், மனிதன் உடையில் நாட்டம் செலுத்தினான்; நாகரிகம் அறியாது நாடோடிகளாய்க் காட்டில் அலைந் திருந்த போது, உடலை மறைத்து மானத்தைக் காக்க யாதேனும் ஒன்று தேவை என்ற உணர்வே முன்னின்றமை யால், அது செய்யும், காட்டு மரஞ் செடி கொடிகளின் இலைகள், அவற்றின் பட்டைகள், காட்டு விலங்குகளின் தோல்கள் ஆகிய இவற்றுள் எதையேனும் ஒன்று கொண்டு உள்ள நிறைவு கண்ட மக்கள், இன்று, அம்மரஞ் செடி கொடிகளின் இலைகளையும் மரவுரிகளையும், மாவின் தோல்களையும் தொடுவதிலர்; மாறாகப் பார்க்கப் பார்க்கப் பரவசம் ஊட்டும் பன்னிறம் ஊட்டப் பெற்ற

பட்டாலும், மயிராலும், பருத்தி நூலாலும் ஆன மெல்லிய ஆடைகளைப் பல்வேறு வடிவங்களில் உடுக்கத் தலைப்பட்டு விட்டனர். அகங்களிக்கும் ஆடை அடையப் பெற்றதும், அம்மக்கள் உள்ளம் அணிகள்பால் அவாக் கொண்டது. காட்டில் வாழ்ந்திருந்த காலை, நரிப்பல்லும், புலிப்பல்லும், மயிர்ப்பினையும், அன்னத்தின் வெண்ணிறத் தூவியும் போதும் தம்மை அணி செய்து கொள்ள என்று எண்ணி அமைதி கண்ட அம்மக்கள் மனம், இன்று மாற்றுக் குறையாப் பசும் பொன்னிடையே நவமணிகள் இழைத்துப் பண்ணப் பெற்றுத் தலைக்குச் சுட்டி, காதிற்குக் குழை, கழுத்திற்கு ஆரம், இடைக்கு மேகலை, கைக்கு வளை, காலுக்குச் சிலம்பு எனப் பல்வேறு உருவமும் பெயரும் கொண்ட எண்ணிலாப் பொன்னணிகள்பால் அவாக் கொண்டு அலைகிறது. இவ்வாறு உணவும், உடையும் ஆடையும் அணியும் வகை வகையாக அமைத்தல் வேண்டும் என்ற அவா பெருகவே, அவை தேடிக் கொணர்வான் வேண்டி, வாழிடம் விட்டு வேறிடம் சென்று வரவேண்டிய இன்றியமையாமை வந்துற்றது. அதனால், காட்டையும், மலையையும் கால்களால் நடந்தே கடந்தான்; ஆற்றையும், கடலையும் நீந்தியே கடந்தான். ஆனால், அவ்வாறு கடந்த நிலையைக் கடந்து, மனிதன் இன்று, எங்கோ சென்று விட்டான். கட்டை வண்டிகளையும் கட்டு மரங்களையும் கருதுவதில்லை; மாடு, குதிரை பூட்டிய வண்டிகளையும் பாய் விரித்த பாய் மரக் கப்பலையும் மனத்திற் கொண்டிலன். நீராவி இயக்க, நில எல்லையை நினைத்த அளவில் கடக்கும் நீண்ட வண்டித் தொடர்களையும், நீரைப் பிளந்து செல்லும் நாவாய் களையும் நினைத்துப் பார்ப்பதில்லை. தன் தேவைகளை

நிறைவேற்றிக் கொள்ளத் துடிக்கும் தன் உள்ள விரைவிற்கு அவை துணைபுரியா என எண்ணி, அவற்றைக் கைவிட்டு நிலத்தையும் நீரையும் ஒருங்கே கடக்க வல்லதும், இந்நிலவுலகையே விட்டு வேறு உலகிற்குக் கொண்டு செல்ல வல்லதுமாகிய வான்வெளிக் கப்பல்களை விரைந்து கட்டத் தொடங்கி விட்டான். இவ்வாறு நாகரிகம் வளர வளர, நாட்டு மக்கள் அறிவு பெருகப் பெருக, உண்ணும் உணவு, இருக்கும் உறையுள், உடுக்கும் உடை, அணியும் அணி, ஊர் செல்ல உதவும் ஊர்தி ஆகிய இவை, பண்டிருந்த பழிநிலையின் நீங்கிப் பாராட்டத்தக்க புதிய நிலையினவாதல் வேண்டும் என்ற வேட்கை, மக்கள் உள்ளத்தில் வேர் ஊன்றிக் கொண்டது.

இவ்வாறு, மக்களின் வாழ்க்கைத் தரம் உயர உயர, அம்மக்கள் கொள்ளும் ஆசைகளும் பல்வேறு வகையின ஆதல் உலகியற்கை ஆகும். ஆசைகள் பல்வேறு வகையின ஆகும் எனினும், அவற்றைப் பொதுவாகப் பொன் ஆசை, மண் ஆசை என்ற இரு பெரும் பிரிவினுள் அடக்கி விடலாம். பசித்த பாலை நிலத்து மறவர், முல்லை நிலத்து ஆயர்களின் ஆனிரைகளைக் கவர்ந்து வர, அது காரணமாக நிகழ்ந்த வெட்சிப் போர், பொன் ஆசையை அடிப்படை யாகக் கொண்டு எழும் போரில் முதற் ப்டியாகும்; செல்வமாவது ஆனிரைகள் மட்டுமே என மதிக்கப்பட்ட காலத்தில், அப்போர் ஒன்றே பொன்னாசை காரணமான போராக இருந்தது; அந்நிலை மாறிச் செந்நெல்லும், பொன் அணிகளுமே நிறை செல்வங்களாம் என்ற நிலை பிறந்த காலத்தில், அவையற்ற நாடுடையான், அவை பெற்ற நாட்டுள் புகுந்து கொள்ளையிடல் காரணமாக எழுந்த போர், பொன் ஆசை காரணமான போரின் முடிந்த

நிலையாகும். பிற நாட்டுப் பொன் வளம் குறித்துப் போருக்கு எழுவான் செயல், ஆற்றலைக் கள்வரின் செயலி லிருந்து சிறிதளவே வேறுபட்டதாகும். ஆறலைக் கள்வன் ஓரிடத்தில் இருந்தவாறே, அவ்வழியில் வருவோரை வருத்தி அவர் கொணரும் பொருள்களைக் கொள்ளையிடுவன்; பொன் ஆசை கொண்டு போருக்கு எழுவோன், அப் பொருள் இருக்கும் இடம் தேடிச் சென்று கொள்ளையாடி வருவன்; இச்சிறு வேறுபாடு தவிர்த்துப் பொன்வளம் உடையாரின் மண்ணின் மீது காதல் கொள்ளாது, அம்மண்ணில் மண்டிக் கிடக்கும் பொன்னின் மீது மட்டுமே காதல் உடையராதலில் இருவருமே ஒருமைப் பாடு உடையவராவர்.

"பெரும் பொருளால் பெட்டகத்து ஆகி, அருங் கேட்டால் ஆற்ற விளைவது நாடு" என்றார் வள்ளுவர். தன்னைச் சூழ்ந்திருக்கும் நாடுகளில் காணமாட்டாப் பல்வேறு வளங்களையும் பெற்றிருப்பதே நாட்டிற்குப் பெருமையாகும். ஆனால், அந்நாடு பெற்றிருக்கும் அப்பெருமையால் அந்நாட்டிற்குக் கேடு வருதலும் இயல்பாகி விடும்; அந்நாடு பெற்றிருக்கும் பெருவளத்தைத் தங்கள் நாடுகள் பெறவில்லையே என்ற பொறாமைத் தீயால் வேகும் பிறநாட்டு வேந்தர்கள் அந்நாட்டின் மீது படை தொடுத்து அந்நாட்டுச் செல்வங்களைக் கொள்ளை யிட்டுப் போவதிலேயே குறியாய் இருப்பர். தமிழகம் பண்டு அத்தகைய தன்னேரில்லாப் பெருவளம் பொருந்திய நாடாய் விளங்கியதனால்தான் தமிழகத்தின் மீது ஆரியர் படையெடுத்து வந்தனர்; கோசர் படையெடுத்து வந்தனர். வடுகர் வந்தனர்; வம்ப மோரியர் வந்தனர்; களப்பிரர் வந்தனர். அவ்வாறு படையெடுத்து வந்த அவர்கள்

அனைவரும் தமிழ்நாட்டின் செல்வங்களைக் கொள்ளை யிட்டுச் செல்வதில் குறியாய் இருந்தனரேயல்லது, தமிழக ஆட்சியைக் கைப்பற்றி ஆள்வதில் குறியாய் இருந்தாரல்லர். இந்திய வரலாற்று நிகழ்ச்சிகளும், ஒரு நாட்டின் பொருள் வளம் கருதிப் போரிடுவதே போரின் முதற்படியாகும்; அந்நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றக் கருதிப் போரிடுவது அதற்கு அடுத்தபடியானதே என்ற உண்மையையே உறுதி செய்கிறது. இந்திய நாட்டிற்கு அப்பாலிருந்து இந்நாட்டின் மீது படையெடுத்து வந்தவருள் தலைசிறந்தோனாகிய கஜினி முகம்மது, இந்தியாவின் மீது பன்னிரண்டு முறை படையெடுத்து வந்தும், இந்திய நாட்டில் தன் அரசை நிலை நாட்ட எண்ணினானல்லன்; படையெடுத்து வந்த ஒவ்வொரு முறையும் இந்நாட்டு விலை மதிக்கவொண்ணா மாநிதிகளைக் கொள்ளை கொண்டு போவது ஒன்றே அவன் குறியாய் இருந்தது, அதைப் போலவே, பின்னர்ப் பேரரசு அமைத்து இருநூறு ஆண்டுகள் அரசோச்சிய ஆங்கிலேயரும், முதற்கண், இந்நாட்டின் வளத்தின் மீது காதல் கொண்டு, அதை வாள் முறையால் அல்லாமல் வாணிக முறையால் கொள்ளை யிட்டுச் செல்வதில் கருத்தைச் செலுத்தினரேயல்லது, நாடு பற்றி ஆள நினைத்தாரல்லர்.

“பிணிக் கதிர் நெல்லின் செம்மல் மூதூர், நுமக்கு உரித்தாகல் வேண்டின், சென்று அவற்கு இறுக்கல் வேண்டும் திறையே” என அதியமான் நெடுமான் அஞ்சியின் புகழ்பாடும் ஔவையார் கூற்றிலும், “கொண்டி வேண்டுவனாயின், கொள்க எனக் கொடுத்த மன்னர் நடுக்கு அற்றனரே” எனப், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியின் புகழ்பாடும் ஐயூர் முடவனார்

பாராட்டுரையிலும் "பலிகொண்டு பெயரும் பாசம் போலத் திறை கொண்டு பெயர்தி" எனத் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் புகழ் பாடும் அரிசில் கிழார் உரையிலும், பண்டைத் தமிழ் மன்னர் பலரும், பகை நாட்டு மண்ணின் மீது காதல் கொள்ளாது, அந்நாட்டுப் பொன்னின் மீது காதல் கொண்டே போருக்கு எழுந்தனர்; அப்பொன் கிடைத்த வழி, அம் மண்ணை மதியாதே மீண்டனர் என்ற உண்மை வெளிப்பட்டு, போரின் தொடக்க நிலை பகைநாட்டின் ஆடும், மாடும், பொன்னும் மணியும் போலும் பொருள் நாட்டம் குறித்ததே ஆம் என்ற கூற்றிற்கு அரணளித்து நிற்பது காண்க.

பசியால் வருந்திய பாலை நிலத்து மறவன், அது போக்கிக் கொள்ள முல்லை நிலத்து ஆயரின் ஆனிரை களைக் களவாடிச் செல்லத், தம் உடைமைகளாம் அவ்வானிரைகளை மீட்கும் அவ்வாயர் முயற்சியில் தொடங்கி, வளங்குறைந்த நாடுடையான் ஓர் அரசன், அது நிறைந்த நாட்டின் வளத்தைக் கொள்ளை கொள்ளப் படைதொடுக்க, வளநாடுடையான் தன் நாட்டு வளத்தைக் காப்பான் வேண்டி வந்தானை வென்று ஓட்டப் படை எடுத்த நிகழ்ச்சியாக உருப்பெற்ற வெட்சிப் போர் நிலையோடு தமிழகப் போர் வளர்ச்சி அடங்கி விடவில்லை. வாழ்க்கைத் தரத்தின் உயர்விற்கேற்ப, பகை நாட்டுப் பசுநிரைகளை மட்டுமே கவர்ந்து வரக் கருதியதைக் கைவிட்டுப் பகை நாட்டுச் செல்வங்கள் அனைத்தையுமே கவர்ந்து வரும் வழக்கம் மேற்கொண்டு வாழ்ந்த மன்னன், தன் நாட்டில் பொருட் குறைவுண்டாகுந் தோறும் படையெடுத்துப் போவதால் நேரும் இடையூறு களை எண்ணி, அவ்வாறு பல முறையும் படையெடுத்துச்

சென்று அந்நாட்டுச் செல்வங்களைக் கொள்ளை கொண்டு வருவதைக் காட்டிலும், அவ்வளமிக்க நாட்டையே தன்னாடாக ஆக்கிக் கொண்டால் தொல்லைகள் தீரும் என எண்ணலாயினான். அவ்வெண்ணத்தில் முகிழ்த்த மண்ணாசை காரணமான போர், பொன்னாசை காரணமாக உருவங் கொண்ட போர், மண்ணாசை காரணமான போராக உருமாறிவிட்டது.

மன்னர்கள், தங்கள் நாட்டு எல்லைகளை விரிவாக்க எண்ணுவது தவறுடையதாகாது. அஃது அவர்கள் கடமையும் ஆகும். தன் நாட்டு மக்கள் தொகை பெருகி அவர்க்கு வாழிடக் குறைபாடு உண்டாதல் காணும் நாடாளும் மன்னவன் தன் நாட்டைச் சூழ இருக்கும் காடுகளை அழித்து நாடாக்கும் நல்ல முயற்சியினை மேற்கொள்வன்; அவ்வாறு, பண்டு பாராண்டிருந்த பேரரசர்களின் முயற்சியின் பயனே, இன்று பரந்து காணும் நம் பைந்தமிழ் நாடு; அவ்வாறு நாடு காணும் முயற்சியின் நலன் கண்ட மகிழ்ச்சியாலும், அம்முயற்சி இடையே மங்கி விடாது மேலும் மேலும் உரம் பெற்றுச் செயல் படற்காம் ஊக்கம் அம்மன்னர்க்கு உண்டாதல் வேண்டும் என்ற உள்ளுணர்வாலும், அது செய்யும் மன்னர்களைப் புகழ்ந்து பாடும் தம் பாக்கள் இடையே காடழித்து நாடு காணும் அவர் செயலைப் பெருமையாகக் கூறிச் சென்றார்கள் பண்டைத் தமிழ்ப் புலவர்கள். பட்டினப்பாலை பாடிக் கரிகாற் பெருவளத்தானைப் பாராட்டும் கடியலூர் உருத்திரங் கண்ணனார், அப்பெரும் பாட்டிடையே, “காடு கொன்று நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கி” என்ற தொடரையும் வைத்துப் பாராட்டியுள்ளமை காண்க.

சென்று அந்நாட்டுச் செல்வங்களைக் கொள்ளை கொண்டு வருவதைக் காட்டிலும், அவ்வளமிக்க நாட்டையே தன்னாடாக ஆக்கிக் கொண்டால் தொல்லை கள் தீரும் என எண்ணலாயினான். அவ்வெண்ணத்தில் முகிழ்த்த மண்ணாசை காரணமான போர், பொன்னாசை காரணமாக உருவங் கொண்ட போர், மண்ணாசை காரணமான போராக உருமாறிவிட்டது.

மன்னர்கள், தங்கள் நாட்டு எல்லைகளை விரிவாக்க எண்ணுவது தவறுடையதாகாது. அஃது அவர்கள் கடமையும் ஆகும். தன் நாட்டு மக்கள் தொகை பெருகி அவர்க்கு வாழிடக் குறைபாடு உண்டாதல் காணும் நாடாளும் மன்னவன் தன் நாட்டைச் சூழ இருக்கும் காடுகளை அழித்து நாடாக்கும் நல்ல முயற்சியினை மேற்கொள்வன்; அவ்வாறு, பண்டு பாராண்டிருந்த பேரரசர்களின் முயற்சியின் பயனே, இன்று பரந்து காணும் நம் பைந்தமிழ் நாடு; அவ்வாறு நாடு காணும் முயற்சியின் நலன் கண்ட மகிழ்ச்சியாலும், அம்முயற்சி இடையே மங்கி விடாது மேலும் மேலும் உரம் பெற்றுச் செயல் படற்காம் ஊக்கம் அம்மன்னர்க்கு உண்டாதல் வேண்டும் என்ற உள்ளுணர்வாலும், அது செய்யும் மன்னர்களைப் புகழ்ந்து பாடும் தம் பாக்கள் இடையே காடழித்து நாடு காணும் அவர் செயலைப் பெருமையாகக் கூறிச் சென்றார்கள் பண்டைத் தமிழ்ப் புலவர்கள். பட்டினப்பாலை பாடிக் கரிகாற் பெருவளத்தானைப் பாராட்டும் கடியலூர் உருத்திரங் கண்ணனார், அப்பெரும் பாட்டிடையே, "காடு கொன்று நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கி" என்ற தொடரையும் வைத்துப் பாராட்டியுள்ளமை காண்க.

மன்னர்க்கு மண்ணாசை இன்றியமையாதது; ஆனால் அம்மண்ணாசை அளவோடு நிற்றல் வேண்டும். அதை விடுத்து, "ஆசைக்கோர் அளவில்லை, அகிலமெலாம் கட்டி ஆளினும், கடல் மீதிலும் ஆணை செலவே நினைப்பர்" என்பது போல், அவ்வாசை பேராசையாக மாறிவிடுவது கூடாது. அவ்வாசை அழிக்கப்பட வேண்டிய தொன்றாம். ஆனால், அவ்வாசையுடையான்தானே, அவ்வாசையை அடக்கிக் கொள்வது என்பது இயலாது. அஃது அவனால் இயலாதாயின், பிறர் அதை அடக்கித் தீர்தல் வேண்டும். மண் மீது கொண்ட ஆசை, பேராசையாகிக் காடுகளை அழித்து, நாட்டெல்லைகளை விரிவாக்குவதோடு நில்லாது, அந்நிலையையும் கடந்து, தன்னைப் போலவே அரும்பாடு பட்டதன் பயனாய் அரசோச்சி வாழும் பிற அரசர்க்குரிய நாடுகளையும் தனதாக்கிக் கொள்ள நினைவானை வென்று அடக்குதல் வேண்டும். அவ்வாறு வென்று அடக்கும் அரசனை ஊரும் உலகமும் ஒருங்கே போற்றும். அவன் செயல் பாராட்டற்குரியதாகும். அத்தகையான் செயலுக்கே வஞ்சி ஒழுக்கம் என்னும் வளமார் பெயர் சூட்டித் தன் முதற் பெரும் பாராட்டை அளித்துள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார். மேலும் மேலும் பெருகி வளரும் மண்ணாசை யுடையான் ஒரு மன்னனைப் பிறிதொரு மன்னன் அவன் அஞ்ச அமர் மேற்கொண்டு சென்று அழிப்பதே வஞ்சி ஒழுக்கமாம் என்னும் பொருள்படவே விதி வகுக்கும் தொல்காப்பியர் வாக்கில், அவர் அம்மன்னனுக்கு வழங்கும் வாழ்த்தும் பாராட்டும் விளங்கி நிற்றல் காண்க.

"வஞ்சிதானே முல்லையது புறனே;
எஞ்சா மண்நசை வேந்தனை, வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தன்று

வஞ்சித் திணையின் விளக்கம் கூறும் இச்சூத்திரத்தில் "வேந்தன்", "வேந்தனை", "அடல் குறித்தன்று" என்ற மூன்று சொற்களும் முறையே எழுவாய், செயப்படுபொருள், பயனிலைகளாக, "தலைச்சென்று" என்பது அடல் குறிக்கும் வேந்தன், அவ்வடல் புரிவதன் முன் நிகழ்த்தும் அவன் வினையுணர்த்தும் வினையெச்சமாக, "அஞ்சுதக" என்பது செல்லும் அச்செயலின் இயல்பு உணர்த்தித் "தலைச் சென்று" அவ்வினையெச்சத்திற்குச் சிறப்பளிக்கும் வினை யடையாக, "நசை" என்பது நசையை உடைய எனப் பொருள்பட்டு, அஃதுடைய வேந்தனைச் சிறப்பிக்கும் பெயரடையாக, "மண்" என்பது, நசை பலவாதலின், அவற்றுள் இந்நசை மண்பற்றியது என அந்நசையின் இயல்பு உணர்த்தும் பெயரடையாக, "எஞ்சா" என்பது, அளவிறந்த எனப் பொருள்பட்டு அந்நசையின் அளவு உணர்த்தும் பெயரடையாக, "மண் நசை", "எஞ்சாநசை", "எஞ்சா மண்நசை" எனக் கொண்டு கூட்டப்படுவதாக, அளவிறந்த மண் ஆசை உடைய வேந்தனை என, மண் ஆசையை அவ்வேந்தன் ஒருவனுக்கு மட்டுமே ஏற்றி, அவ்வேந்தனை அவ்வேந்தனால் நச்சப்படும் மண்ணுக்கு உரிய வேந்தன் அடல் குறித்தன்று என, அவனுடைய ஆசை அழிய அவனை அட்டான் என, அளவிற்கு மீறிய ஆசையின்மையோடு, அவ்வாசையுடையானை அடக்கும் பெருமையும் என்ற இரண்டையும் மண்ணுக்கு உரிய மன்னனுக்கு ஏற்றித் தனக்குரிய மண் மீது ஆசைகொண்டு வருவானை வென்று துரத்தித் தன் மண் காப்பதே

வஞ்சியாம் என்னும் உண்மைப் பொருள்பட நிற்பதாகவும், ஆசிரியரின் உள்ளத்தை உணரமாட்டாமையால், "எஞ்சா மண்ணாசை அஞ்சு தகத்தலைச் சென்று, வேந்தனை வேந்தன் அடல் குறித்தன்று" எனத் தம் மனம் போனபடி யெல்லாம் கண்ணழித்துக் கொண்டு "நசை" என்பது பெயரடையாகவும், அதை நசையுடைமையான் எனும் காரணப் பொருள் உணர்த்தும் வினையடையாக்கியும், 'எஞ்சா' என்பது, அளவிறந்த எனும் பொருளுடையதாகி, "நசை" என்பதைச் சிறப்பிக்கும் பெயரடையாகவும், அதற்கு இடையீடு ஆகிய எனும் பொருள் கொண்டு இடையீடாகிய எனவே, எவற்றிற்கு இடையீடு எனும் வினா எழல்கண்டு, "இருபெரு வேந்தர்க்கும் இடையீடாகிய" என மூலத்தில் இல்லாததை உரையில் வருவித்துக் கொண்டு "எஞ்சா மண்" என, மண் என்பதைச் சிறப்பிக்கும் பெயரடையாகக் கொண்டு இடையீடாகிய மண் எனப் பொருள் கூறியும், மண் ஆசை கொண்டு வந்த வேந்தன் அஞ்சச் செல்வதே இயல்புடையதாகவும், அதை விடுத்து, "ஆண்டு வாழ்வார்" என ஆசிரியர் அறியாத மக்களை வலியப் பிடித்து இழுத்து வந்து நிறுத்தி, அவர்க்கு அஞ்சுதல் உண்டாகச் சென்று எனப் பொருள் கூறி, மண் ஆசை கொண்டு வந்தானை, மண்ணுக்கு உரியான் அடல் குறித்தன்று என அட்டவன் இன்னான், அடப்பட்டவன் இன்னான் என்பது தெளிவுறப் புலனாகவும், அவ்வாறு கொள்வதை விடுத்து, அட்டவன் யாவன் அடப்பட்டவன் யாவன் என்பதை அறிய மாட்டாது மயங்கத் தக்கவகையில், "ஒரு வேந்தனை ஒரு வேந்தன் கொற்றங்கோடல் மாத்திரைத்து" எனப் பொருள் கூறியும், பிழைபடுவாராயினர் ஆசிரியர் நச்சினார்க் கினியர்.

மண்ணாசை கொண்டு வந்தானை, மண்ணுக்கு உரியவன் வென்று ஓட்டும் நிகழ்ச்சியில், மண் ஆசை கொண்டு வந்தான் செயல் பழியுடையதாக, அவனை வென்று ஓட்டிய மண்ணுக்கு உரியான் செயல் ஒன்றே பாராட்டற்கு உரியதாகவே, பாராட்டிற்கு உரிய அவன் செயலே, வஞ்சி ஒழுக்கம் என்னும் பெயர் பெற்றுப் பாராட்டப்பெறும் என்பதே ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தாகவும், அவர் உள்ளம் உணராது, அச்சூத்திரத்திற்கு அவ்வாறு பிழை பொருள் கொண்டமையால், "ஒருவன் மண் ஆசையால் மேற்சென்றால், அவனும் அம்மண் அழியாமல் காத்தற்கு எதிரே வருதலின், அவ்விருவரும் மண் நசையான் மேற் சேறல் உளதாதலின் அவ்விருவரும் வஞ்சி வேந்தர் ஆவர் என உணர்க," என வேண்டா விளக்கமும் கூற வேண்டியதாகி, தன் மண் காக்கும் கடப்பாடு கொண்டு சென்றானுக்கும் மண் ஆசையாம் மாசு கற்பித்து மேலும் மேலும் பிழை நெறியே சென்று விட்டார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

ஆசிரியர் உள்ளம் உணரமாட்டா அதே பிழையால் அச்சூத்திரத்திற்குப் பொருள் கூறுங்கால், "ஒழியாத மண்ணை நச்சுதலை யுடைய வேந்தனை மற்றொரு வேந்தன் அஞ்சுதகத்தலைச் சென்று அடல் குறித்தது" என்று ஆசிரியர் கொள்கைக்கு ஒத்த பொருளே கூறிய உரையாசிரியர் இளம்பூரணர், விளக்கங் கூறுங்கால், "ஒழியாத மண்ணை நச்சுதலாவது வேண்டிய அரசர்க்குக் கொடாமை" எனக் கூறி, மண் நசைக் குற்றத்தை மண்ணுக்கு உரியானுக்கும் ஏற்றிப் பிழைபட்டுவிட்டார்.

தொல்காப்பியத்திற்கு, உரையாசிரியர் இளம்பூரணர், உச்சிமேல் புலவர்கொல் நச்சினார்க்கினியர் ஆகிய இருவர்

கூறிய உரைகளுமே உண்மையொடுபட்ட உரைகளாகா; அத் தொல்காப்பியத்தின் வழி நூல்களாக, அது கூறும் பொருள்களை விரித்துக் கூறி விளங்க வைக்கப் பிற்காலத்தே எழுதப்பட்ட பன்னிரு படலம், புறத்திணை வெண்பாமாலை ஆகிய நூல்களும் ஆசிரியர் கருத்தறிந்து எழுதப்பட்டன ஆகா என்ற உணர்வினால், தொல் காப்பியத்திற்கு இக்காலத்தில் எழுதப்பட்ட புத்துரைகள் பலப்பல.

அழிவுப் போர் மேற்கொண்டு அடாது புரிவாரை அடக்க, ஆக்கப் போர் மேற்கொண்டு அறம் காக்கும் காவலர் தம் அறவொழுக்கங்களைப் பாராட்டுவதே தொல்காப்பியர் நோக்கமாகும். பிற நாட்டு ஆனிரை கவர்தலும், பிற நாட்டு மண்ணைக் கைப்பற்றுதலும், பிறர்க்குரிய அரணை வளைத்துக் கோடலும், தன் ஆற்றலை நிலை நாட்ட அமர் மேற்கோடலும் அறமில் செயல்களாம்; அழிவுப் போர்களாம். ஆகவே, அப்போர் விரும்புவாரை அழித்து ஒழிப்பது அறத்தொடு பட்டதாம். அறவழி ஆட்சி நடாத்தும் அரசர்க்கு உரிய கடனாம். ஆகவே, இது குறித்து மேற்கொள்ளும் போர்கள் ஆக்கப் போர்களாம். ஆகவே அவ்வழிப் போர்களுக்கு எதிராக முறையே தன் நாட்டு ஆனிரைகளை மீட்டுக் காக்கவும், தன் நாட்டு மண்ணைக் காத்துக் கொள்ளவும், தன் உடைமையாம் அரண் அழிவைப் போக்கவும், ஆற்றல் காட்ட அமர் மேற்கொண்டு வந்தானின் செருக்கைச் சீரழிக்கவும் மேற்கொள்ளும் போர்களையும், அப்போர் மேற்கொண்ட மன்னர்களையும் பாராட்டுவான் வேண்டியே வெட்சி. வஞ்சி, உழிஞை, தும்பை ஆகிய திணைகளை வகுத்துக் கொண்டார் ஆசிரியர்

தொல்காப்பியனார். அவ்வாக்கப் போர்களைப் பாராட்டி அப்போர் நிகழ்ச்சிகளை விளக்கி விரித்து உரைப்பதே அவர் கருத்தாம் என்றாலும், அவ்வழிவுப் போர்கள் இல்லாதபோது, அவ்வாக்கப் போர்கள் இல்லை; அவை நிகழாமல் இவை நிகழா; ஆகவே, அவ்வாக்கப் போர்களைக் கூறுவதன் முன்னர் அவ்வழிவுப் போர் களையும் கூறியுள்ளார். இந்த உண்மையை உணர மாட்டாமையால் புத்துரை காணும் இக்கால ஆராய்ச்சி யாளர்களும் "மண் ஆசையால் பிறரது சோர்வு நோக்கி யிருக்கும் வேந்தன் ஒருவன், தன் மேல் படையெடுத்து வருவதற்கு முன்பே, தான் அவனை வெல்லுவதற்கேற்ற காலம், இடம், வலி முதலியவற்றை எண்ணி, அவனது நாட்டின் மேல் போர் கருதிப் புறப்பட்டுச் சேறல் நாடாள் வேந்தனது கடமையாகும்; இக்கடமையினை உளத்துட் கொண்டு ஒழியாத மண்ணாசையுடைய பகை வேந்தனைப் பொருது அழித்தல் கருதி, அவன் அஞ்சும்படி படையுடன் மேற்சேறல் வஞ்சித் திணையாகும்" எனவும், "வஞ்சித் திணைக்கு ஆசிரியர் கூறிய இலக்கணத்தினை நோக்குங் கால் இருபெரு வேந்தருள் ஒருவனே மேற்சேறற்கு உரியான் என்பது நன்கு விளங்கும்" எனவும் விரிவுரைகள் வழங்கி யுள்ளார்கள்.

மண்ணாசை யுடையான் படையெடுத்து வரா முன்பே அவன் குறிப்பறிந்து படையெடுத்துப் போவதே வஞ்சி ஆகும் என்றால், அதற்கேற்ப ஆனிரை கவரும் குறிப்பு அண்டை நட்டானுக்கு உளது என அறிந்து, அவன் கவர வருவதன் முன்பே, அவன் மீது படையெடுத்துப் போவதே வெட்சி; அரணைக் கைப்பற்றி அழிக்கும் கருத்து பகைவன் உள்ளத்தில் உருப்பெறுகிறது என்பதை உணர்ந்து,

அவன் அது குறித்துப் படையெடா முன்பே அவன் மீது படையெடுத்துப் போய் அழித்துத் தன் அரண் அழிவைக் காப்பதே உழிஞை; தன் ஆற்றல் காட்ட அமர் மேற்கொண்டுவரும் ஆசை ஒருவனுக்கு உளது என அறிந்து அவன் தன்மீது வாராமுன்பே அவனைத் தாக்கி அழிப்பதே தும்பை என்றும் கூறியிருத்தல் வேண்டும். ஆனால், ஆண்டெல்லாம் அவ்வாறு கொள்ளாது, "தனது நாட்டில் உள்ள பசுக்களைப் பகைவேந்தன் படை மறவர் களவில் கவர்ந்து சென்றதை அறிந்த மன்னன், தன் படைவீரர்களை யனுப்பி அப்பசுக்களை மீட்டு வருவதற்குரிய செயல் முறைகள் வெட்சித் திணையின் இடையே நிகழ்வன வாதலின், அவற்றை வேறு திணை ஆக்காமல் வெட்சித் திணைக்குரிய துறைகளாகவே கொண்டார் தொல் காப்பியனார்" என்றும், படையெடுத்து வந்த வேந்தன், பகைவனது அரணைச் சுற்றி வளைத்துக் கொள்ளுதலும், உள்ளே யிருந்த வேந்தன் அவ்வரணை நெகிழ விடாது பாதுகாத்தலுமாகிய அவ்வியல்பினை உடையது உழிஞைத் திணையாம்" என்றும், தனது வலியினை உலகம் உயர்த்துப் புகழ்தலைப் பொருளாகக் கருதிப் போர்மேற் கொண்டு வந்த வேந்தனை மாற்று வேந்தன் எதிர்த்துச் சென்று அவனது தலைமையினைச் சிதைக்கும் நிலையில் அவ்விரு பெருவேந்தரும் ஒரு களத்துப் போர் செய்தல் தும்பைத் திணை எனப்படும்" என்றும் கூறி, ஆக்கப்போர் புரிவதன் முன்னர், அழிவுப் போர் நிகழ்ச்சி யுண்மையினை ஏற்றுக் கொண்டுள்ளார்கள். அவ்வாறு ஆண்டெல்லாம் அம் முறையினை ஏற்றுக் கொண்டு, ஈண்டு மட்டும் இவ்வாறு கூறுவது ஒன்றே, அவர் கூற்று ஆசிரியர் கருத்தொடு பட்டதன்று என்பதற்குச் சான்றாகும். இவ்வாறு தாம்

கொண்டதே பிழைபடு பொருளாகவும், "முல்லைப்புறம் மண்ணாசை வேட்கையால் எடுத்துச் செலவு புரிந்த வேந்தன்மேல் அடல் குறித்துச் செலவு புரிதலான். அவ்விரு பெருவேந்தரும் ஒரு வினையாகிய செலவு புரிதலின், வஞ்சி என ஒரு குறிபெறும், என இளம்பூரணர் கூறும் கொள்கை தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்புடையதாகத் தோன்ற வில்லை," என உரையாசிரியர் உரையில் பிழைகாணப் புகுந்து விடுகின்றனர்.

பாலைநிலம் ஒன்றும் விளையா வன்னிலமாதலின், அந்நிலத்து மக்களாம் மறவர் பசியால் வருந்தினர்; அதனால் அவர்கள் பசி தீர்க்கும் உணவினைத் தேடி அலைந்தனர்; அலையுங்கால், முல்லை நிலத்து ஆநிரைகளைக் கண்டனர். கவர்ந்து சென்றனர்; அஃது அறிந்த அம்முல்லை நிலத்து ஆயர், அந்நிரையினை மீட்க அம்மறவரோடு போரிட்டனர்; வெட்சிப் போர் உருப்பெற்றது; அவ்வகையால், பற்றாமையே வெட்சிப் போர்க்குக் காரணம் ஆனதைப் போலவே, வஞ்சிப் போர்க்கும் அப்பற்றாமையே காரணமாம். நாட்டின் இயல்பு கூற வந்த வள்ளுவர், "தள்ளா விளையுளும் தக்காரும், தாழ்விலாச் செல்வரும் சேர்வது நாடு" என, எடுத்த எடுப்பிலேயே குறைவு அறியா நிறை விளை வினையே கூறியுள்ளார். அம்மட்டோ! பிற நாட்டு மக்கள் எல்லாம் கண்டு வியக்கத்தக்க பெருவளம் உடையதாதல் வேண்டும். வளக்கேட்டினை அறியாததாதல் வேண்டும். உள்ள வளத்தோடு, மேலும் பல வளங்கள் பெருகிக் கொண்டே யிருத்தல் வேண்டும். 'பெரும் பொருளால் பெட்டகத்து ஆகி, அருங்கேட்டால், ஆற்ற விளைவது நாடு" என வற்றா வளமுடைமையினையே மேலும் மேலும்

வற்புறுத்திச் சென்றுள்ளார். ஒரு நாட்டில் இருக்க வேண்டுவனவற்றுள் தலையாயது தள்ளா விளையுள் ஆகும் எனக் கூறியதற்கு ஏற்ப, ஒரு நாட்டில் இருக்கக் கூடாதன வற்றுள் தலையாயது பசித்துன்பம் என்று கூறியுள்ளார்; பசி வந்திடின் பகை வந்திடும். பகைக்குக் காரணம் பசியே; ஆதலின், நாடு பகைப்பயம் அற்று வாழ வேண்டுமாயின் பசிநோய் அற்று வாழ வேண்டும்; ஆகவே, முதற்கண் அகற்றப்பட வேண்டுவது பசிப் பேயே; ஆகவேதான், "உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேராது இயல்வது நாடு" என நாட்டிற்கு நலிவு தரும் நோய்களுள் பசி நோயை முதற்கண் கூறியுள்ளார் வள்ளுவர். "பசியும், பிணியும், பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி" என வாழ்த்துக் கூறும் போதும், பசி நீங்கி வாழும் வாழ்வினையே முதற்கண் வைத்து வாழ்த்தியுள்ளார்கள் சிலம்பாசிரியர் அடிகளாரும், மேகலை ஆசிரியர் சாத்தனாரும். ஆகவே, பகை வளரக் காரணமாவது பசியே; பற்றாமையால் வந்துற்ற பசித் துன்பத்தைப் போக்கவே, பண்டு பாலைநிலத்து மறவர், முல்லை நிலத்து ஆயர்களின் ஆனிரைகளைக் கவர்ந்து சென்றனர். அதைப் போலவே தன் நாட்டில் மக்கள் செல்வம் பெருகியதற்கு ஏற்பப் பொருட்செல்வம் பெருகாமையினால் நேர்ந்த குறை பாட்டினைப் போக்கவே, வளம் அற்ற நாடுடையான், வளம் மிகுந்த தன் அண்டை நாட்டைக் கைப்பற்றிக் கொள்ளப் படை யெடுத்தான்; வஞ்சிப் போரின் அடிப்படைக் காரணம் இதுவே யாதல் வேண்டும்.

தன் நாட்டைக் காட்டிலும் தன் அண்டை நாடுவளம் மிகுந்துள்ளது; தன் நாட்டைக் காட்டிலும் தன் அண்டை நாடு இடம் அகன்றுளது என்ற காழ்ப்புணர்வு காரணமாக

அவ்வண்டை நாட்டின் மீது படையெடுத்துப் போனதை, உலக வரலாற்றில் காண்கின்றோமே யல்லது, வளம் மிக்க நாட்டவர், வளம் இழந்த நாட்டின் மீது படையெடுத்துப் போனதை எக்காலத்தும் கண்டிலோம். ஆகவே, தன் நாடு வளம் குறைந்துளது என்ற காரணத்தால், தன் அண்டை நாட்டின் வளத்தினைத் தனதாக்கிக் கொள்ள விரும்பிய ஒருவன், அங்ஙனம் வேண்டும்போதெல்லாம், அந்நாட்டின் மீது போர் தொடுத்து வெற்றி கொள்வதைக் காட்டிலும், அந்நாட்டையே தனதாக்கிக் கொள்வதே நன்று எனும் நினைவால், அந்நாட்டின் மீது படையெடுத்துச் செல்ல, அந்நாட்டு மன்னன், அவனை வென்று ஓட்டித் தன் நாட்டைக் காத்துக் கொள்ளும் நிகழ்ச்சியே வஞ்சி ஒழுக்கமாகும். இவ்வாறு வஞ்சி ஒழுக்கமாவது யாது என்பதை விளக்கிய பின்னர், அவ்வொழுக்கத்தோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளைப் பின்வரும் சூத்திரத்தில் வரிசையாக கூறியுள்ளார்:

"இயங்கு படை அரவம், எரிபரந்து எடுத்தல்,
வயங்கல் எய்திய பெருமை யானும்,
கொடுத்தல் எய்திய கொடைமை யானும்,
அடுத்து ஊர்ந்து அட்ட கொற்றத் தானும்,
மாராயம் பெற்ற நெடு மொழியானும்,
பொருள் இன்று உய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமை யானும்,
பிண்டம் மேய பெருஞ் சோற்று நிலையும்,
வென்றோர் விளக்கமும், தோற்றோர் தேய்வும்
குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும்,
அழிபடை நட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெரும் சிறப்பின் துறை பதின்மூன்றே."

இச்சூத்திரத்திற்கு உரைகாணப் புகுந்தவருள் ஆசிரியர் இளம்பூரணனார், இச்சூத்திரத்துள் வந்துள்ள துறைகள் பதின்மூன்றனுள், "வென்றோர் விளக்கம் முதலிய மூன்றும் (வென்றோர் விளக்கம், தோற்றோர் தேய்வு, கொற்ற வள்ளை) ஒழிந்த ஏனையவெல்லாம் இரு திறத்தினர்க்கும், (மண் ஆசை கொண்டு வந்தவன், அவனை வென்று ஓட்டியவன்) பொதுவாக நிற்றலின், கழிபெரும் சிறப்பெனக் கூறினார்" என்று கூறியுள்ளார். நச்சினார்க் கினியர், "இருவரும் வஞ்சி வேந்தர் எனவே, மேற்கூறும் துறை பதின்மூன்றும் இருவர்க்கும் ஒப்பக் கூறலாம் என்று உணர்க" என்று கூறியுள்ளார். ஆனால், வஞ்சியாவது மண் ஆசை கொண்டு வருவானை வென்று ஓட்டும் வேந்தன் செயலாம் என்ற உண்மைப் பொருளை உள்ளத்தில் கொண்டு, முந்திய திணையாகிய வெட்சித் திணை பற்றிய விளக்கங்களை ஆசிரியர் விளக்கியிருக்கும் முறையோடு ஒப்பு நோக்கி இச்சூத்திரத்திற்குப் பொருள் காணப் புகுந்தால், இதில் கூறப்பட்டிருக்கும் துறைகள் பதின் மூன்றனுள் முற்பட வரும் சில துறைகள், மண்ணாசை அவை ஒழியப் பிற்படவரும் துறைகள், அவனை வென்று ஓட்டித் தன் மண்காத்துக் கொண்டானின் செயல்களைக் குறிப்பனவாதலும் புலப்படும். கவர்ந்து செல்லப்பட்ட ஆனிரையை மீட்பதே வெட்சியாம் எனினும், கவர்ந்தவன் செயல்களைக் கூறாது, மீட்டவன் செயலை மட்டும் கூறினால் பொருள் விளங்காது ஆதலின், "வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக்களவின் ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்" என்ற சூத்திரத்தால், வெட்சித் திணையாமாறு யாது என்பதைக் கூறி, "படை இங்கு அரவம்," "மறங்கடை கூட்டிய" என்ற இரு சூத்திரங்களாலும், ஆனிரை கவர்வார்

தொழில்களைக் கூறி, "வெறியறி சிறப்பின்" என்ற சூத்திரத்தால் அது மீட்பார் தொழில்களைக் கூறி யிருப்பதைப் போலவே, ஈண்டும், மண் ஆசைகொண்டு வருவான் செயல் கூறாது, அவனை ஓட்டித் தன் மண் காப்பான் செயலை மட்டும் கூறினால் பொருள் சிறவாது ஆதலின், வஞ்சிதானே என்ற சூத்திரத்தால், வஞ்சித் திணையாமாறு யாது என்பதைக் கூறி, "இயங்கு படை அரவம்" என்று இச்சூத்திரத்தின் முற்பாதியில் மண்மேல் வருவான் செயல்களைக் கூறும் துறைகளையும், பிற்பாதியில் அவனை வென்று ஓட்டி மண் காப்பான் செயல்களைக் கூறும் துறைகளையும் அமைத்துள்ளார் ஆசிரியர். ஆசிரியர் சூத்திரங்களை அமைத்திருக்கும் இவ்வொருமைப்பாட்டின் உட்பொருளை உணர மாட்டாது, "வெறியறி சிறப்பின்" என்ற சூத்திரத்தின் தோற்றுவாயில், "வேலன் முதலாக வெட்சித் திணைக்கு உரிய துறை கூறினார்; இனி, அதற்கு மாறாகிய கரந்தைத் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று; அதுவும் ஆநிரை மீட்டல் காரணமாக, அந்நிலத்தின்கண் நிகழ்வதாகலின், "வெட்சிப் பாற்பட்டுக் குறிஞ்சிக்குப் புலனாயிற்று" என உரையாசிரியர் கூறுவதையும் உட்கொள்ளாது, "படை இயங்கு அரவம்", "மறங்கடை கூட்டிய" என்ற இரு சூத்திரங்களும், நிரை கொள்வோர், நிரை மீட்போர் இரு திறத்தவர்க்கும் உரிய துறைகளைக் கூறுவனவாம். "வெறியறி சிறப்பின்" என்றது புறத்திணைக்கு எல்லாம் பொதுவாகிய வழு உணர்த்துதல் நுதலிற்று எனக் கூறிப்பிழைபடு பொருள் கண்டதைப் போலவே, ஈண்டும் 'இயங்கு படை அரவம்" என்பது இரு வேந்தர்க்கும் உரிய

துறைகளைக் கூறுகிறது எனக் கூறிப் பிழை புரிந்துள்ளார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

**இயங்கு படை அரவம்:** வளம் குறைந்த நாடாளும் தன் ஆட்சிக் கீழ், வளம் மிக்க தன் அண்டை நாடும் வந்துறுமாயின், நாட்டு மக்கள் வறுமைத் துயர் ஒழிந்து வாழ்வர்; நாட்டில் அமைதி நிலவும் என்ற உணர்வு, உள்ளத்தில் உருப்பெற்ற அன்று தொட்டே, அவ்வரசன், அவ்வண்டை நாட்டைத் தனதாக்கிக் கொள்வதற்கான வழி வகைகளை மேற்கொண்டிருப்பன்; அதற்கேற்ற வகையில் தன் நாற்படையைப் பெருக்கிப் பயிற்சி அளித்திருப்பன்; அதற்கு வேண்டும் துணைப் படைகளையும் தேடிப் பெற்றிருப்பன்; அப்பகை நாட்டின் எந்தப் பகுதியை எந்தக் காலத்தில் தாக்கினால் வெற்றி எளிதாகும் என்பதையெல்லாம் எண்ணிப் பார்த்திருப்பன்; இவ்வாறு தன் வலி, மாற்றான் வலி, தனக்கும் அவனுக்கும் துணையாவார் வலி, அவனுக்கு ஆம் காலம், தனக்கு ஆம் காலம், அவனுக்கு ஏற்புடைய இடம், தனக்கு ஏற்புடைய இடம் ஆகிய இவை அனைத்தையும் அவ்வண்டை நாட்டான் அறியா வகையில் ஆராய்ந்து பார்த்து, அவனினும் மிக்க ஆற்றல் உடையனாகித் தனக்கு ஏற்புடைய காலத்தில், தனக்கு வாய்ப்புடைய இடத்தில் அந்நாட்டின் மீது போர் தொடுத்துப் புகுவன்; இந்நிகழ்ச்சிகளைக் கூறுவதே "வஞ்சி அரவம்." இவ்வாறு ஒரு குறிபெறும் வஞ்சி அரவத்தையே, வஞ்சி அரவம், குடைநிலை, வாள் நிலை, கொற்றவை நிலை எனப் பல வகையாகப் பிரித்து உரைத்தார்கள், பு.வெ. மாலையார் போலும் பிற்காலப் புதுப்பொருள் ஆசிரியர்கள். ஒரு நாட்டின் மீது ஆசை கொண்டு, அதைக் கைப்பற்றக் கருதிய

ஒருவனாலேயே, அந்நாட்டின் மீது போர் தொடுப்பதன் முன், இவற்றையெல்லாம் செய்ய இயலும். தன் நாட்டின் மீது பகை நாட்டான் போர் தொடுத்து வந்துளான் என்ற செய்தி கேட்ட அந்நாட்டிற்கு உரிய மன்னன், அச்செய்தி கேட்ட அக்கணமே, தன்பால் உள்ள படையோடு, போர்க்கோலம் பூண்டு போய், அப்பகைவனை வென்று தன் நாட்டின் எல்லைக்கு அப்பால் துரத்தத் துடிப்பனே யல்லது, பகைவன் எல்லைக்குள் புகுந்து தொல்லை தரும் போதில், அவனை வெல்லற்காம் காலம் வரட்டும், அவனை வெற்றி கொள்ளும் அளவு தன் படை வளரட்டும் என எண்ணி வாளா இருந்து விடுவானல்லன்; தனித்து நின்றேனும் தடுத்து நிறுத்தவே துணிவன்; ஆகவே, நாளும் கோளும், இடமும் படையும் எதிர்நோக்கி ஏற்பன செய்யும் நிகழ்ச்சிகளைக் கூறும் இத்துறை. மண்ணாசை கொண்டு வந்தானின் செயல் குறிப்பதே அல்லது அம்மண் காக்கக் களம் புகுவான் செயல் குறிப்பது அன்று. இயங்குபடை அரவத்திற்கு எடுத்துக்காட்டாக ஆசிரியர் இளம்பூரணார் தரும் "சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்" என்ற புறநானூற்றுச் செய்யுளில், "நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப் பாசறை அல்லது நீ ஒல்லாய்", "போர் எனின் புகலும் புனைகழல் மறவர், காடு இடைக்கிடந்த நாடு தனி சேய செல்வேம் அவ்வேம் என்னார், கல்லென் விழவுடை யாங்கண் வேற்றுப் புலத்து இறுத்து" என்ற தொடர்கள், அப்பாட்டுடைத் தலைவன் மண்ணாசையால், வளம்மிக்க பிற நாட்டின் மீது போர் தொடுத்துப் போனவனே ஆவன் என்பதை உறுதி செய்து நிற்றல் உணர்க.

**எரி பரந்து எடுத்தல்:** ஒரு நாட்டைக் கைப்பற்றக் கருதி, அந்நாட்டின் மீது படையெடுத்துப் போவார், அந்நாட்டு

நாற்படையை வெற்றி கொண்ட பின்னரே, அந்நாட்டை அடைதல் இயலும் என எண்ணி விடுவது கூடாது; போர் நுணுக்கம் அறிந்த பெரும் படைத் தலைவர்கள், போர்க் களம் புகுந்து, போரிடாமல் பெறலாகும் வெற்றிகளையே விரும்புவர். அவ்வாறு பெறும்வெற்றியே, தம்மையொத்த பெரும் படைத் தலைவர்கள் பெறற்குரியதாகும்; அவ்வா றின்றிப் போர்க்களம் புகுந்து, போராடிப் பகைவர் படை களையும் அழித்துத் தம் படையின் ஒரு பகுதியையும் பலி கொடுத்துப் பெறும் வெற்றியை வெற்றியாக மதியார். பாம்பு உறையும் புற்றைக் கண்டே அஞ்சுதல் போலவும், கொல்லேறு உலாவுதல் அறிந்தே ஊர் மன்றை அடைய அஞ்சுதல் போலவும், தன் வருகை கண்டே பகைநாடு பணிந்து விடுதல் வேண்டும் என்றே பெரும் படைத் தலைவர்கள் விரும்புவார்கள். அவ்வாறு போர்க்களம் புகாமலே வெற்றி காண விரும்பும் படைத் தலைவர்கள், அதற்காக மேற்கொள்ளும் செயல் முறைகள் சில உள. நாட்டு மக்கள், நாடாளும் காவலனுக்குத் துணையாக நிற்கும் வரை அந்நாட்டைக் கைப்பற்றுவது எவ்வளவு பெரிய படைக்கும் இயலாது; ஆகவே தங்கள் நாட்டைக் காக்கும் ஆற்றல் தங்கள் நாட்டுக் காவலனுக்கு இல்லை; ஆகவே, தங்களையும், தங்கள் உடைமைகளையும் காத்துக் கொள்ள, அவனை எதிர்நோக்கி நிற்பதில் பயன் இல்லை. ஆகவே, பாய்ந்து வரும் பகைவர் படைக்குப் பணிந்து போலது நன்று என்ற நினைப்பு, அந்நாட்டவர் உள்ளத்தில் உண்டாதற்காம் வழி வகைகளைப் படை கொண்டு வருவார் மேற்கோடல் வேண்டும். அது, அந்நாட்டவர் உடைமைகளாம் விளை வயல்களுக்கும் வாழிடங்களுக்கும் தீ மூட்டுவதாலும், உண்ணு நீர் நிலைகளில் தன் போர்க்

களிறுகளைப் போக்கிச் செருக்கிப் பாழாக்குவதாலும், அந்நாட்டுக் காவலனின் காவல் மரத்தைத் தன் களிறுகளைக் கொண்டு வேரோடு பறித்துச் சாய்ப்பதாலும், நீர் நிலைகளின் கரைகளை அழித்து, வெள்ளப் பெருக் கோடச் செய்வதாலும் அந்நாட்டு மக்கள் உள்ளத்தில் அச்சம் எழப் பண்ணுவர். அவ்வகையால், வீடு இழந்தும், வாழ்விழந்தும், உண்பொருள் இழந்தும், உண்ணுநீர் இழந்தும் அழத் தொடங்கிய மக்கள், தம் வாட்டத்தை நாடாளும் வேந்தனால் மாற்ற இயலாது என அறிந்து, வந்த படையாளர் வேண்டுவ கொடுத்து அவர் வழி நின்று விடுவர்; நாட்டு மக்கள் செயல் அதுவாகிய பின்னர், நாடாள்வோன் மட்டும் பணியாதிருப்பது இயலாது; அவன் தானே வந்து பகைவன் தாள் பணிந்து போவான்; தங்கள் காவலனாம் கழுவுள் என்பான், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும் பொறையால் தமக்கும், தம் உடைமை களாம் தம் ஆனிரைகளுக்கும் நேர்ந்த கேட்டினைப் போக்க மாட்டாமை கண்ட ஆயர் குலத்தவர், அவ்விரும் பொறையின் படைத் தலைவரைத் தாமே அணுகி, அவர் விரும்பும் ஏறுகளோடும், கன்றுகளோடும் கூடிய கறவைகள் சிலவற்றைத் தந்துவிட்டுத் தம் ஆனிரைகளை மீட்டும் பெற்றுக் கொண்டனராக, அஃதறிந்த கழுவுள், மறுநாள், பொழுதுபுலரா முன்பே, ஊரில் தயிர் கடையும் மத்தொலி எழா முன்பே, தலை மறைவாக வந்து, பெருஞ்சேர லாதனைப் பணிந்தான் என்ற பதிற்றுப்பத்துச் செய்தியால், எரி பரந்து எடுத்தல் என்ற துறைக்கு விளக்கம் உண்டாதல் அறிக.

"ஏறொடு, கன்றுடைஆயம் தரீஇப் புகல் சிறந்து
புலவுவில் இளையர் அங்கை விடுப்பு,

மத்துக் கயிறு ஆடா வைகற்பொழுது நினையூஉ
ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்க..."

–பதிற்றுப்பத்து: 71.

இந்நிகழ்ச்சிகளை யெல்லாம் ஆசிரியர் தொல் காப்பியனார், "எரி பரந்து எடுத்தல்" என ஒரு தலைப்பில் கொண்டாராக, பு.வெ. மாலை ஆசிரியர், "உழபுல வஞ்சி", "மழபுல வஞ்சி", "பெரு வஞ்சி" எனப் பல தலைப்புகளில் கொண்டுள்ளார். இவ்வாறு பகை நாட்டு மக்கள் உள்ளத்தில் அச்சமும் மருட்சியும் உண்டாக்கி வெற்றி காணச் செய்யும் இக்கொடுஞ் செயல்களை, ஒரு நாட்டின் மீது ஆசை கொண்டு படையெடுத்து வருவான் செய்வனே அல்லது, அந்நாட்டிற்கு உரியவனே செய்யான் ஆதலின், இவ் "வெரி பரந்து எடுத்தல்" என்ற துறையும் மண்ணாசை கொண்டு வரும் மன்னன் செயல் குறிப்பதே ஆகும். தன் நாட்டில் வந்து தங்கியிருக்கும் பகை நாட்டுப் படை களுக்குப் பயன்படாது ஒழிக எனத் தன் நாட்டு வளங்களைத் தானே அழித்து விடுவதை அந்நாட்டு அரசன் ஓரோர் வழிச் செய்வதும் உண்டாம் எனினும், இந்நிகழ்ச்சி அந்நிகழ்ச்சியைக் குறியாது. மேலும் புறநானூறு போலும் புறப்பொருள் கூறும் நூல்கள் எல்லாம் படையெடுத்துப் போவான் பகை நாட்டில் செய்யும் பாழ்களுக்குச் சான்று பகர்கின்றனவே அல்லது, தன் நாட்டு வளத்தை அந்நாட்டு அரசனே அழித்தமைக்கான சான்று ஒன்றையும் அளித்தில. "எரி பரந்து எடுத்தல்" என்ற துறைக்கு எடுத்துக் காட்டாகும் "வினைமாட்சிய விரைபுரவியொடு" (புறம்:16) என்ற புறநானூற்றுச் செய்யுட்கண் காணப்படும் முனை முருங்கத் தலைச் சென்று, அவர், விளைவயல் கவர்பூட்டி, மனைமரம் விறகாகக் கடிதுறை நீர்க்களிறு படீஇ, எல்லுப் படவிட்ட

நடுதீ விளக்கம் செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரில் தோன்றப் புலம்கெட இறுக்கும் வரம்பில்தானை” என்ற தொடர், அச்செயல் மன்னன் ஒருவன், மாற்றான் நாட்டில் விளைத்த கேடுகளே என்பதை உணர்த்தி, எரிபரந்து எடுத்தலுக்கு நாம் கொள்ளும் பொருளுக்கு அரணாதல் அறிக.

**வயங்கல் எய்திய பெருமை:** வயங்கல் எய்திய பெருமை என்பதற்குத், தொல்காப்பியத்திற்கு உரைகண்ட இரு ஆசிரியர்கள் கூறுவனவும் தெளிவுடையவாகத் தோன்ற வில்லை. “விளக்கம் எய்திய பெருமை” என்கிறார் இளம்பூரணார். அவ்வாறு பொருள் கூறி, அதற்கு எடுத்துக்காட்டாக, “இருங்கண் யானையொடு அரும்கலம் தெறுத்து” என்ற செய்யுளைக் கொடுத்துள்ளார். அதில், ஓர் அரசனின் படைப் பெருமையினையும், அது செல்லும் விரைவினையும் கண்ட ஒரு புலவர், “இத்தகைய பெரும் படையுடையோனாகிய உனக்கு, மலைநிகர் யானை களோடு கூடிய மாநிதிகளைத் திறையாகத் தந்து உன்தாள் பணிந்து போவது செய்யாது, வணங்காது, எதிர் நிற்றல் உன் பகைவர்க்கு இயலுமோ? அவ்வாறு நிற்பானும் ஒரு பகைவன் உளனாயின், அவன் நிலைதான் யாதாமோ?” என வியந்து பாராட்டியுள்ளார். ஆக இப்பொருளமைய வந்த பாட்டு அத்துறைக்கு எடுத்துக்காட்டாகவே, அது, படை கொண்டு போவான், போகும் இடத்தில் பிழை யாமல் வெற்றி பெறவல்ல பெரும் படை அமைத்து விட்டதைக் குறிப்பதாதல் வேண்டும். அதற்கு, உரையாசிரியர் கண்ட பொருள் அதுவாக, நச்சினார்க் கினியர், “ஒருவர் ஒருவர் மேல் செல்லுங்கால், பிறவேந்தர் தத்தம் தானையோடு அவர்க்குத் துணையாயவழி அவர்

விளக்கமுற்ற பெருமை" என, ஒருவாறு ஒத்த பொருளே கூறியுள்ளார். அதற்கு எடுத்துக்காட்டாகக் காட்டும்,

"மேற்செல்லுங்காலைத் துணைவந்த வேந்தர்தம்
பாற்செல்லச் செல்லும் பசியினால்–நாற்கடல்சூழ்
மண்மகிழும் காட்சியான், மீன்பூத்த வானத்து
வெண்மதிபோல் மேம்பட்டான் வேந்து"

என்ற வெண்பாப் பொருளும், அவன் படைப் பெருமை யினையே பாராட்டுவதும் நோக்கின், "வயங்கல் எய்திய பெருமை"யாவது, நாற்படை பகைவர் அஞ்சுமளவு பெருத்துவிட்ட பெருமையினைக் கூறுவதாகும் என்றே கொள்ள வேண்டியுளது. இதுவே அதன் பொருள். ஆகவே, போர் தொடுப்பதன் முன்னர்த் தன் நாற்படையைப் பெருமளவில் பெருக்குவதும், எளிதில் வெற்றி பெறுவதற்கு வேண்டும் பயிற்சிகளை அளிப்பதும், நட்புடைய பிற அரசர்களின் துணையினை வேண்டிப் பெறுவதும் ஆகிய செயல் முறைகளை மேற்கொள்வது, ஒரு நாட்டின் மீது ஆசை கொண்டு, அதைக் கைப்பற்றுதற்கேற்ற படை பலமும், காலமும், இடமும் வாய்க்குமளவும் காத்திருக்கும் அரசனுக்குப் பொருந்துமே யல்லது, பகைவன் தன் நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றிக் கொண்டான் என்ற செய்தி கேட்ட அளவே, எல்லைக்கு விரையும் வேந்த னுக்குப் பொருந்தாது. ஆகவே, வயங்கல் எய்திய பெருமை என்ற இத்துறையும் மண்ணாசை கொண்ட மன்னன் செயலே அல்லது, மண்ணுக்கு உரியான் செயலாகாது என அறிக.

தான் கைப்பற்றிக் கொள்ளக் கருதிய பகை நாட்டின் அணித்தாகப் பாசறை அமைத்துக் கொண்டு, அப்பகை நாட்டின் மீது போர் தொடுப்பதற்காம் காலத்தை எதிர்

நோக்கிக் காத்திருப்பதும் உண்டு. தன் நாட்டிற்கும் பகை நாட்டிற்கும் இடைப்பட்ட எல்லையாகிய முல்லை நிலமாம் குறுங்காட்டில், காட்டாற்றங் கரையில், பிடவம் முதலாம் புதல்களை வெட்டியும் எரித்தும் அகற்றிவிட்டு, முள்வேலி மரங்களை மதில்களாகக் கொண்டு, கடல்போல் பரந்த பாசறை அமைக்கப்பட்டதை முல்லைப் பாட்டு கூறுவதும் காண்க.

"கான்யாறு தழீஇய அகல்நெடும் புறவில்
சேண்நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி
வேட்டுப்புழை அருப்பம் மாட்டிக் காட்ட
இடுமுள் புரிசை ஏமுற வளைஇப்
படுநீர்ப் புணரியின் பரந்த பாடி" —முல்லைப் பாட்டு: 24–28

இவ்வாறு, காட்டகத்தே, பாசறைகட்டி, அரசன் படையோடு தங்கியிருக்கும் நிகழ்ச்சியைக் கூறும் துறை ஒன்று பு.வெ. மாலையில் வந்துளது. "குறுவஞ்சி" என்ற துறைப் பெயரையே தன் பெயராகவும் கொண்டிருக்கும் அத்துறை நிகழ்ச்சியால் கூறப்பெறும் செய்தியும் ஓரளவு, மண்ணாசை கொள்வான் படைப்பெருமையுணர்த்துவதாகவே, அதையும் "வயங்கல் எய்திய பெருமையாகவே" கொள்ளலாம்.

"அவிழ்மலர்க் கோதையர்ஆட, ஒருபால்
இமிழ் முழவம் யாழோடு இயம்பக்–கமிழ்மணிய
காய்கடா யானை ஒருபால் களித்து அதிரும்
ஆய் கழலான் கட்டூர் அகத்து." பு.வெ. மாலை 53.

**கொடுத்தல் எய்திய கொடைமை:** இத்துறைக்குக் "கொடுத்தலைப் பொருந்திய கொடைமையும்" எனப் பொதுவாகவே பொருள் கூறியுள்ளார் இளம்பூரணர். "மேற்செல்லும் வேந்தர், தத்தம் படையாளருக்குப் படைக் கலம் முதலியன கொடுத்தலும், பரிசிலர்க்கு அளித்தலும்

ஆகிய கொடுத்தலைப் பொருந்திய கொடைத் தொழில்" எனப் பொருள் கூறியுள்ளார் நச்சினார்க்கினியர். மண்ணாசை கொண்டு மாற்றான் மீது போர்தொடுக்கத் துணியும் மன்னன், தன் வேட்கை குறைவறா நிறைவேற வேண்டுமாயின், தன் படை வீரர்க்கும் தன் முயற்சியில் வேட்கையுண்டாதல் வேண்டும்; அவர்கள் அப்போரில் உண்மையான வேட்கையோடு பங்கு கொண்டாலொழிய, வெற்றி வாய்ப்பது அரிதாகி விடும்; ஆகவே அவர்க்கு வேட்கையை உண்டாக்குதல் அரசனின் நீங்காக் கடமை யாகும். தன் படையாளரை இயல்பாகவே, வறுமையறியா வளமார் வாழ்வில் வாழ வைத்திருப்பன் என்றாலும், அப்போர் நிகழ்ச்சியின் முன்னர்த், தன் பால் அவர்க்குள்ள பற்றும் பாசமும், மேலும் பன்மடங்கு பெருகுவான் வேண்டி, அவர்க்கு, அந்நிலையில் மேலும் பல பரிசுகள் வழங்குதல் வேண்டும். படைத்தலைவனுக்குத் தன்னுடைய விலைமதிக்கவொண்ணாத மணிமாலையைக் கொடுத்து விட்டு, அவனுடைய ஒற்றை மணிவடத்தைத் தான் அணிந்து கொள்வதும், தனக்கென வடித்து வைத்திருக்கும் விலையரிய கட்தெளிவை அவனுக்கு அளிப்பதும் ஆகிய சிறப்புக்களைப் பழந்தமிழ் அரசர்கள் பண்டே மேற் கொண்டிருந்தனர். "தன்தலை மணிமருள் மாலைசூட்டி, அவன் தலை ஒரு காழ் மாலைதான் மலைந்தனனே" (புறம்: 291) என்பது காண்க. இவ்வாறு சிறப்புப் பல செய்வதோடு, அவ்வீரர்களுக்குப் புதிய புதிய படைக்கலங்களை வழங்குவதும் உண்டு. இவ்வகையால், களம் புகுந்து போராடி வெற்றி காணும் வீரர்களுக்கு அவர் விரும்புவன வழங்குவதால் ஓர் அரசனுக்குக் கிடைக்கும் பயனைக் காட்டினும் மிக்கதொரு பயன், பிறிதொரு வகையாலும்

கிடைக்கும். நாடு நாடாகச் சென்றும், ஊர் ஊராகச் சென்றும், ஆடியும் பாடியும் பரிசில் பெற்று வாழ்வோ ராகிய பாணர், பொருநர், கூத்தர், புலவர் போலும் இரவலர்க்கு வாரி வாரி வழங்குவனாயின், அவன் புகழை அவ்விரவலர் செல்லும் இடந்தோறும் சிறப்புறக் கூறிப் பாராட்டுவர்; அவ்வாறு அவர் செல்லும் நாடு அம் மன்னன் விரும்பும் நாடாகவும் அமைய, ஆங்கு அவ் விரவலர் அவன் புகழ்பாட, அது கேட்டு, அந்நாட்டவர் அவன் ஆட்சியை விரும்புதலும் செய்வர்; அவ்விருப்பம் அவன் படை வீரர் ஆற்றலினும் நிறைபயன் நல்கும்; ஒரோவழி, அவன் படை களம்புக வேண்டாதே, அவன் கருதியது நிறைவேறவும் துணை நிற்கும். அரசர்கள் இதை அறிவர் ஆதலின், படையெடுத்துப் போவதன் முன்னர்ப் படைவீரர்க்குப் பரிசும் படைக்கலமும் வழங்குவதோடு, இரவலர்க்குப் பரிசு அளிப்பதும் செய்வர். ஆகவே, அக்கொடையும் ஈண்டு வேண்டியதொன்றே.

"வேத்தமர் செய்தற்கு மேற் செல்வான் மீண்டு வந்து
ஏத்துநர்க்கு ஈதும் என்று எண்ணுமோ?—பாத்தி
யுடைக் கலிமான் தேர்உடன் ஈந்தான், ஈந்த
படைக்கலத்தின் சாலப்பல"

—என்பதன் பொருளைக் காண்க.

"கொடுத்தல் எய்திய கொடைமை" என்ற இத்துறை, படைவீரர்க்குக் கொடுத்தல், பரிசிலர்க்குக் கொடுத்தல் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைக் குறிப்பதே ஆயினும், அல்லது இரண்டையுமே குறிப்பதே ஆயினும், அந்நிகழ்ச்சிகள், மண்ணாசை கொண்டு, அதற்கானவற்றை முன்கூட்டியே எண்ணி முடித்துக் கொண்டு, போர் தொடுக்க வாய்ப்புடையான் செய்யக் கூடியனவே அல்லது,

பகைவன் படை பாய்ந்து விட்டது என்றதுமே, வென்று துரத்த விரைய வேண்டியவன் செய்யக் கூடியன அல்ல. ஆகவே, இதுவும், மண்ணாசை உடையான் செயல்களைக் கூறும் துறையே ஆகும்.

பு.வெ. மாலையார், வேந்தனால் சிறப்புச் செய்யப் பெற்ற வீரன் பெருமை பாராட்டும் 'மாராய வஞ்சி' பாடிப் புகழ் பரப்பும் பரிசிலர்க்குப் பொருள் வழங்குவது கூறும் "கொடை வஞ்சி" தொல்லூழிக் காலம் தொட்டே, வாட்போர் வல்ல குடியில் வந்த வீரனின் புகழ்பாடும் "முதுமொழி வஞ்சி" முதலாயின, கொடுத்தல் எய்திய கொடைமைத் துறையின் விரிவுகளே ஆகும் எனக் கொள்க.

**அடுத்து ஊர்ந்த அட்ட கொற்றம்:** இதற்குப் "பகைவர் பலரையும் அடுத்து மேலிட்டுக் கொன்ற கொற்றம்" என இளம்பூரணரும், "எடுத்துச் சென்ற இரு பெரு வேந்தர் படையாளர் வரவு அறியாமல், இரவும் பகலும் பலகாலும் தாம் ஏறி, அந்நாட்டைக் காவல் புரிந்தோரைக் கொன்ற கொற்றம்" என நச்சினார்க்கினியரும் பொருள் கூறி யுள்ளனர். அடுத்து ஊர்தல் என்ற இரு சொற்களின் இணைப்பினை ஊன்றி நோக்கும் போது, இத்துறையால் குறிக்கப் பெறும் நிகழ்ச்சியும் மண்ணாசை கொண்டு மேற்செல்லும் மன்னன் செயலாகவே தோன்றுகிறது; பகை நாடு நோக்கிச் செல்லும் படை, அந்நாட்டு எல்லையைக் கடந்து அக நாட்டுள் புகுந்து போரிடத் தொடங்கும் வரை, தன் நடமாட்டத்தை அக நாட்டு எல்லைக் காவற்படை அறியாதிருக்கும் வகையில் மறைக்கவே நினைப்பர்; அதனால், தலைநகரை விட்டுப் புறப்பட்டது தொடங்கியே விரைந்து வழி கடப்பார் அல்லர்; ஆங்காங்கு அமைத் திருக்கும் பகை நாட்டுக் காவல் நிலையங்கள்

ஒவ்வொன்றையும் மெல்லச் சூழ்ந்து, அழித்துக் கொண்டே முன்னேற வேண்டியிருத்தலின், ஓரிடத்தை மெல்ல அடைதலும், மெல்ல மெல்ல மேலேறிப் போதலும் இன்றியமையாதனவாம். அவ்வாறு சென்று எல்லைக் காவல் நிலையங்களை இல்லாமல் பண்ணினால் ஒழிய, அந்நாட்டில் வெற்றி கிட்டாது. ஆகவே, பெரும் படைச் செலவு அத்தகையது ஆதலே வேண்டும். அதை விளக்கு வதே இத்துறை.

தன் அண்டை நாட்டு மன்னன், தன் நாட்டின் மீது ஆசை கொண்டுள்ளான் என்பதை அந்நாடாள்வான் அறியான் ஆதலின், அவன் அம்மாற்றான் படையை எதிர்நோக்கியிருத்தல் இயலாது; ஆகவே, அவன் காவற் படை அறியா வகையில் கரந்து செல்வது மண்ணாசை யுடையான் படைக்கு இயலும்; ஆனால், நாட்டின் ஒரு பகுதியைத் தன் படை வளைத்துக் கொண்டது என்றதுமே, அந்நாட்டு மன்னன் தன் மீது நாற்படையை நனிமிக விரைவில் ஏவுவன் என்பதை மண்ணாசை கொண்டு அம்மாற்றான் நாட்டில் வந்து பாடி கொண்டிருப்பவன் அறிந்து, அவன் படை வரவை எந்த நாழிகையிலும் எதிர்நோக்கியிருப்பன் ஆதலின், அவன் படையாளர் அறியாவாறு, தன் படையினை அனுப்புவது மண்ணுக்கு உரியானுக்கு இயலாது. மேலும் நாடு பறிபோகிறது என்ற நினைவே முனைந்து நிற்கும் அவன் நெஞ்சில் அப்பகைப் படையை வென்று ஓட்ட வேண்டும் என்ற விரைவு தோன்றுமேயல்லது, பையச் செல்வோம் என்ற தயக்கம் இடம் பெறாது ஆதலின், அவன் நாற்படை அவ்வாறு பகைப் படை அறியாவாறு கரந்து கரந்து பையப் பையச் செல்லாது. ஆகவே, அடுத்து ஊர்ந்து அட்ட கொற்றம் என்ற

இத்துறையும் மண்ணாசை கொள்வான் செயலைக் குறிப்பதே ஆகும்.

**மாராயம் பெற்ற நெடுமொழி:** "மாராயமாகிய உவகை பெற்ற நெடிய மொழி" என இளம்பூரணரும், "வேந்தனால் சிறப்பு எய்தியவதனால், தானேயாயினும், பிறரேயாயினும் கூறும் மீக்கூற்றுச் சொல்; சிறப்பாவன, "ஏனாதி, காவிதி" முதலிய பட்டங்களும் நாடும் ஊரும் முதலியனவும் பெறுதலாம்" என நச்சினார்க்கினியரும் பொருள் கூறியுள்ளனர். படையில் பணிபுரிவார் பலரேயாயினும், அவர்களுக்கு அளிக்காத பெருமையை, அரசன் தனக்கு அளிக்கவே, அது அளிக்கப் பெற்ற படை வீரனுக்கு அவ்வரசன்பால் உண்மையான பேரன்பு உண்டாயிற்று. அதனால், தன் உயிரைக் கொடுத்தாயினும், அவ்வரச னுக்கும், அவன் நாட்டிற்கும் வந்திருக்கும் கேட்டினைப் போக்கத் துணிந்தான்; அவன் உள்ளத்தில் எழுந்த அத்துணிவு அவன் வாய் வழியாக வெளிப்பட்டது. காவலனைக் கண்டு களம்புக விடை வேண்டி நிற்கும் போதும், களம் புகுந்து, பகைவர் படைத் தலைவனை எதிர்ப்படும் போதும், தன் ஆண்மை ஆற்றல்களைப் பல்லாற்றானும் புகழ்ந்து கூறி, கூறியதற்கேற்பப் போர்க் களம் புக்க பலரினும் தானே சிறந்து விளங்கற்காம் வினைகளை விரும்பிச் செய்வன்.

"இன்னர் எனவேண்டா, என்னோடு எதிர்சீறி
முன்னர் வருக முரண்அகலும்;—மன்னர்
பருந்துஆர் படைஅமருள் பல்லார் புகழ
விருந்தாய் அடைகுறுவார் விண்."

—பு.வெ.மா. 47

வேந்தனால் சிறப்புச் செய்யப் பெற்றவர் செய்யும் செயல் இதுவாதலின், செய்யுளில் அடுத்து ஊர்ந்து அட்ட

கொற்றத்தின் பின்னர்க் கூறப் பெற்றிருப்பினும், அதற்கு முன்னும் கொடுத்தல் எய்திய கொடைமைக்குப் பின்னும் நிகழ்வதாகவே இதைக் கோடல் வேண்டும்.

படையில் பணிபுரிவார் பலராயினும், அவருள், அப்போருக்குத் தலைமை தாங்கிச் சென்று வெற்றி பெறத் தக்கவர் யாவர் என்பதை ஆராய்ந்து, நல்ல ஓர் உழவன் தன்பால் உழுவெருதுகள் பலவுள என்றாலும், அவற்றுள் நல்ல எருதுகளையே தேர்ந்து எடுத்துப் பணிகொள்வது போல், தேர்ந்து கொள்வதும், அவனுக்கு ஏனாதிப் பட்டமும் மோதிரமும் சூட்டிப் படைத் தலைவன் ஆக்குவதும், அவ்வாறு சிறப்புப் பெற்ற பெருமகிழ்ச்சியால் அப்படைத் தலைவன், தன் பெருமையைப் பாராட்டலும் ஆகிய இந்நிகழ்ச்சிகள் எல்லாம் ஒரு வினையைப் பலகாலம் எண்ணித் தொடங்குவானுக்கு இயலுமே யல்லாது, திடுமெனக் களம் புகுவானுக்கு இயலாது. பகைப்படை எல்லைக்குள் புகுந்துவிட்ட நிலையில், அரசன் இவை போலும் நிகழ்ச்சிகளால் காலம் கடத்துவானாயின், அவன் நாட்டின் பெரும் பகுதியை இழக்க நேரிடும்; ஆகவே, இவற்றை அவன்பால் எதிர்நோக்குதல் இயலாது; ஆகவே, மாராயம் பெற்ற நெடுமொழியும் மண்ணாசை கொள்வான் வினையே அல்லது மண்ணுக்கு உரியான் வினையன்று என்றே கொள்க.

'கொடுத்தல் எய்திய கொடைமை' என, ஆசிரியர் தொல்காப்பியனார் பெயர் சூட்டிய துறைக்குப் பு.வெ. மாலையார், "மாராய வஞ்சி" எனும் பெயர் சூட்டி விட்டமையால், "மாராயம் பெற்ற நெடு மொழி" என்ற இத்துறைக்கு, வாளா, "நெடுமொழி வஞ்சி" என்பதையே பெயராகச் சூட்டியுள்ளார்.

**பொருள் இன்று உய்த்த பேராண் பக்கம்:** இதற்குப் "பகைவரைப் பொருளாக மதியாது செலுத்தின பேர் ஆண் பக்கம்" என்பது இளம்பூரணர் கூறும் பொருள். "பகை வேந்தரை ஒரு பொருளாக மதியாது, படையினைச் செலுத்தின பேராண்மை செய்யும் பகுதி" என்பது நச்சினார்க்கினியர் கூறும் பொருள். கொள்ளக் கருதி வந்திருக்கும் நாடு, வயல் வளமும், வற்றாப் பெருநிதியும் பொருந்திய நாடு ஆதலின், அந்நாட்டில் வன்மை மிக்க பெரும் படை இருக்கும் என்பதை அறிந்திருந்தும், தங்கள் நாட்டு இல்லாமையும், தங்கள் உடலிலும் உள்ளத்திலும் இடங் கொண்டிருக்கும் உரமும், பகை நாட்டுப் பெருங் காவல் நிலையை ஒரு பொருளாக மதியாவாயின; பசித்த நிலையில் பூனையும் புலியாக மாறிவிடும்; துன்பம் மிக மிகப் புல்லும் வில்லாகிவிடும்; பசித்த மக்கள், மலையென நிலை கலங்கா மன்னனையும் மண்ணாக்கத் துணிந்து விடுவர். இதுவே உலகியல். ஆகவே, வளம் இல்லை வாழ்வு இல்லை என்பதே காரணமாக, வளம் மிக்க வாழ்வு தரவல்ல நாட்டின் மீது படை யெடுத்து வந்துள்ளமையால், மண்ணாசை கொண்ட மன்னன் படை, அந்நாட்டு அரசனையும், அவன் பெரும் படையையும் கண்டு அஞ்சிப் புறங் காட்டிப் போய்விடாது. அவனையும் அப்படையை யும் ஒரு பொருளாக மதியாது, வெறி கொண்டு போராடி வெற்றி பெறத் துணிந்தது. அதைக் கூறுவதே இத்துறை. மண்ணாசை கொண்டு படையெடுத்தவனின் வேட்கை செயல்பட்ட நிகழ்ச்சியைக் கூறுவதே இத்துறை ஆதலின், இதுவும் மண்ணாசை உடையானுக்கு உரியது என்றே கோடல் வேண்டும். ஆக, "இயங்கு படை அரவம் முதலாக"ப் "பொருள் இன்று உய்த்த பேராண் பக்கம்"

ஈறாகக் கூறப்பட்ட ஏழு துறைகளும், மண்ணாசை கொண்டு மாற்றான் நாட்டின் மீது போர் தொடுப்போன் செயல்களை, அச்செயல்கள் இயல்பாகச் செயல்படும் வரிசைக் கண் வைத்து விளக்குவன என்பது புலனாயிற்று. இனிமேல் வரும் துறைகளின் இயல்பினைக் காண்போமாக:

**ஒருவன் தாங்கிய பெருமை:** "விசை கொண்டு வரும் புனலைக் கற்சிறை தாங்கினாற் போல ஒருவன் தாங்கிய பெருமை" என்பது இளம்பூரணம். "தன் படை நிலையாற்றாது பெயர்ந்த வழி, விசையோடும் வரும் பெருநீரைக் கல்லணை தாங்கினாற் போலத் தன் மேல் வரும் படையினைத் தானே தடுத்த பெருமை" என்பது நச்சினார்க்கினியம். "பொருபடையுள் கற்சிறை போல் ஒருவன் தாங்கிய நிலை உரைத்தன்று" என்பது பு.வெ.மாலை. பெருகி வரும் வெள்ளம், கரை புரண்டு கட்டுக்கு அடங்காது, வயலும் வாழிடமும் மிக்க ஊர்களுள் புகுந்து பாழ்செய்து விடாதபடி, அவ்வெள்ளத்தின் குறுக்காகக் கட்டப்பெற்று அதன் விரைவைத் தணித்து அதைக் கட்டுப்படுத்தப் பயன் பெறுவதே கல்லணை. ஆகவே, அக்கல்லணை போல் நின்று வெள்ளம் போல் பெருகி வந்த பகைப் படையைத் தான் ஒருவனாகவே நின்று தாங்கி, அது எல்லை கடந்து போகாதவாறு பண்ணினான் எனவே, இது, மண்ணாசை கொண்டு வந்தவன் வினையைக் குறிக்காது, அவ்வாறு மண்ணாசை கொண்டு வந்தவன் வேட்கை நிறைவேறாதவாறு, அவனைத் தடுத்து நிறுத்திய அம்மண்ணுக்கு உரியவன் வினையையே குறிக்கும். சென்று தாக்கிப் பிறர் உடைமைகளைக் கைப்பற்றக் கருதுவார் வினைகளைக் கூறுங்கால் பாய்ந்து

தாக்கினர் எனவும், தம் எல்லைக் கண் இருந்து தம் உடைமைகளைக் காப்பவர் வினைகளைக் கூறுங்கால் நின்று தாங்கினர் எனவும் கூறுவதே பொருந்தும். அதை விடுத்து முன்னவர் வினையைத் தாங்குதல் என்றும், பின்னவர் வினையைத் தாக்குதல் என்றும் கூறுவது பொருந்தாது. இவ்விருவினைகளின் இயல்பு உணர்ந்தே, ஆசிரியர் தொல்காப்பியனார், முன்னவன் வினையைக் கூறுங்கால், அடுத்து, ஊர்ந்து, அட்ட என்ற வினை களாலும், பின்னவன் வினையைக் கூறுங்கால் தாங்கிய என்ற வினையாலும் குறிப்பிட்டுள்ளார்: தாக்குதல் வருவோன் வினை; தாங்குதல் இருப்போன் வினை. ஒருவன் தாங்கிய பெருமைக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டுள்ள,

"வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
ஏந்துவாள் வலத்தன் ஒருவன் ஆகித்
தன் இறந்து வாராமை விலக்கலின், பெருங்கடற்கு
ஆழி அனையன் மாதோ"

என்ற புறநானூற்றுச் செய்யுட் பொருளும், "ஒரு தனி நிலை"க்கு எடுத்துக்காட்டாக வரும்,

"வீடு உணர்ந்தாக்கும் வியப்பாமால்; இந்நின்ற
வாடல் முதியாள் வயிற்றிடம் – கூடார்
பெரும்படை வெள்ளம் நெரிதரவும், பேரா,
இரும்புலி சேர்த்த இடம்"

என்ற, பு.வெ. மாலைப் பாடற் பொருளும் நின்று தாங்கிய வினை, மண்காக்கும் மண்ணுக்கு உரியான் வினை ஆகும் என்பதற்கே அரண் அளித்தல் காண்க. அத்துறையின் இயல்பு இத்தகையது என்பது தெளிவாகப் புலனாகவும், இவை மண்ணாசை கொண்டு வருவானுக்கும் உரியதாகப்

பொருள் கொள்ளும் நச்சினார்க்கினியர் உரை, பொருந்தும் உரையாகாது என அறிக.

**பிண்டம் மேயப் பெருஞ் சோற்று நிலை:** மண்ணாசை கொண்டு தங்கள் நாட்டின் மீது போர் தொடுத்து வந்து, தங்கள் நாட்டின் ஒரு பகுதியைத் தீயிட்டுக் கொளுத்தியும், ஆங்குள்ள தங்கள் நாட்டு அருநிதிகளைக் கொள்ளை கொண்டும், அப்பகுதியைத் தனதாக்கிக் கொண்டு தருக்கிய மாற்றரசன் படை மீது பாய்ந்து, போராடி வென்று துரத்தித் தங்கள் நாட்டிற்கு வந்துற்ற கேட்டினைப் போக்கிய அம்மண்ணுக்குரிய மன்னன், அம்மகிழ்ச்சி மிகுதியால், அவ் வெற்றியை எளிதில் தேடித் தந்தவர், தன் நாற்படையாளருக்குக், கறிவிரவு நெய்ச் சோறும், கள்ளும் கொண்டு பெருவிருந்தாற்றி மகிழ்வன். அண்டை நாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து வந்த காவலன், அக்களிப்பு மிகுதியால் அது கவரப் பணிபுரிந்த படை வீரரும் தானுமாக உண்டும் தின்றும் உவந்து கூத்தாடியும் மகிழ்ந்த நிகழ்ச்சியினைக் கூறும் “உண்டாட்டு” என்ற துறைவெட்சிக் கண் இடம் பெற்றிருப்பதை ஈண்டு நினைவுட் கொள்க.

இத்துறைக்குத், “திரட்சி பொருந்தின பெருஞ்சோற்று நிலை” என உரையாசிரியரும், “வேந்தன், போர்தலைக் கொண்ட பிற்றை ஞான்று போர் குறித்த படையாளரும் தானும் உடன் உண்பான் போல்வதோர் முகமன் செய்தற்குப் பிண்டித்து வைத்த உண்டியைக் கொடுத்தல் மேயின பெருஞ் சோற்று நிலை” என நச்சினார்க்கினியரும் கூறும் பொருள்நிலையை நோக்க, வீரர்க்கு விருந்தளித்தல் என்ற பொருள் வகையில் ஒருமைப்பாடு உடையராகக் காணப்படினும், நச்சினார்க்கினியர், இச்சூத்திரம், மண்ணாசை கொண்டு வந்தவன், அதுகாக்க முனைந்த

அம் மண்ணுக்கு உரியவன் ஆகிய இருவரின் செயல் முறைகளையுமே விளக்குகிறது என்ற தம் உட்கோளுக்கு ஏற்ப, இதை, வினைமேற் செல்வதன் முன் நிகழ்ச்சியாகக் கூறியுள்ளார். நாட்டின் எல்லை கடந்து அக நாட்டுள் புகுந்து விட்டது பகைப்படை என்ற செய்தி கேட்ட அளவே, எல்லை காக்க ஒல்லை செல்வது வேண்டு மாதலின், மண்ணுக்கு உரியான் அதற்கிடையில் விருந்து ஓம்புதல் போலும் விழாக்களை மேற்கொள்ளான்; மேற்கொள்வது முறையாகாது ஆதலின், இதைப் போர் மேற்செல்வதன் முன் நிகழ்ச்சியாகக் கொண்டால், இது மண்ணுக்கு உரியான் வினையாதல் இயலாது. மண்ணாசை கொண்டு, மாற்றான் நாட்டின் மீது போர் தொடுப்பவ னாயின், அது செய்வதன் முன்னர், அவ்வினைக்குப் பெருந் துணை புரிய வேண்டியவராகிய தன் படையாளர்க்கு விருந்து செய்து விழாக் காணல் போலும் நிகழ்ச்சிகளை மேற்கொண்டு அவர்க்கு ஊக்கம் ஊட்டுவது பொருந்து மாதலின், அம்மன்னனுக்காயின், இது, போர் முன் வினையாதல் கூடும். மண்ணாசை கொண்டு வருவானின் படையாளர்க்கு, அவர்கள் போராற்றிக் கைப்பற்றக் கருதும் நாடு பிறந்த தாய் நாடு ஆகாது, பிறர் நாடு ஆதலின், அவர்க்கு அந்நாட்டின் மீது இயல்பான பற்றும் பாசமும் இருத்தற்கு இடம் இராது. ஆகவே, அந்நாட்டைக் கைப்பற்றும் அவாவும் வேட்கையும், அவர்க்கு ஊட்ட வேண்டுவது, அந்நாட்டின் மீது ஆசை கொண்ட அரசனுக்கு நீங்காக் கடமையாகி விடுதலின், அவன் அது குறித்துப் போர் மேற்செல்வதன் முன்னர்ப் பெருஞ்சோறு அளித்தல் போலும் விழா மேற்கொள்வது பொருந்தும் நிகழ்ச்சியாம். ஆனால், அம்மண் காக்க விரையும் வேந்தன்

படையாவர்க்கு ஆயின், அந்நாடு, அவர் பிறந்த நாடு; ஆகவே, அந்நாட்டின்மீது இயல்பாகவே பற்றும் பாசமும் உடையவராகிய அவர்கள், அப்படை புகுந்ததன் செய்தி கேட்ட அக்கணமே அது காக்க விரைந்து விடுவர் ஆதலின், அவர்கள் அது குறித்த அரச ஆணையை எதிர் நோக்கி நிற்பதோ, அவன் அளிக்கும் பெருஞ்சோறு உண்ட பின்னரே, போர் நினைப்பு உற்று, அச்சோற்றுக் கடன் கழிக்க என்றே களம் புகுவதோ செய்யார் ஆதலின், அவர்க்கு அந்நிலையில் பெருஞ்சோறு அளிப்பது என்பது இயலாத காரியமாம். ஆக, இந்நிலை கொண்டு நோக்கிய போது, போர்க்களம் புகுவதன் முன்னர்ப் படையாளர்க்குப் பெருஞ்சோறு அளிப்பது, மண்ணாசை உடைய மன்னனுக்குப் பொருந்தாது. அவ்வாறே, மண் ஆசை கொண்ட மன்னவன், தன் படையாளர்க்குப் பெருஞ் சோறு அளிப்பது, ஏனாதி முதலாம் பட்டங்கள் வழங்குவது போலும் நிகழ்ச்சிகளை மேற்கொள்ளும் செயல் முறைகளின் இன்றியமையாமையினை உணர்ந்த ஆசிரியர் தொல்காப்பியனார் அம்மண்ணாசைக்குரியான் செயல் முறைகளைத் தொகுத்துக் கூறும் முற்பகுதியில் "கொடுத்தல் எய்திய கொடைமை" என்ற தலைப்பில் அதைக் கூறியுள்ளார். ஆகவே, ஈண்டுக் கூறப்பெறும், "இப்பெருஞ் சோற்று நிலையும்" அவன் செய்யும் அவ்வினையையே குறிப்பவாகும் எனல் கூறியது கூறலாகிக் குற்றம்படும். ஆசிரியர் அக்குற்றம்படச் சூத்திரம் ஆக்கார் ஆதலின், இப்பெருஞ் சோற்று நிலை, அவன் தன் படையாளர்க்குப் போர் தொடுத்துப் போவதன் முன்னர் வழங்கும் குறிப்பினைக் குறிக்காது. மண் காக்க விரைந்து, அவ்வினையில் வெற்றி கண்ட வேந்தன், அது வெற்றி

வாய்ந்த பின்னர், அது வாய்க்க வெஞ்சமர் புரிந்த தன் வீரர்க்கு எடுத்த விருந்து விழாவினையே குறிக்கும் என்பதே பொருந்தும் பொருளாகும்.

நிற்க. பண்டைத் தமிழகத்துப் பெரு வீரர்கள் போர்க்களம் புகுவதன் முன்னர்ப் போரில் தங்களுக்கு வெற்றி தருமாறு, வெற்றித் திருமகளாம் கொற்றவையை வேண்டி வழிபாடாற்றிச் செல்வதும், வெற்றி கொண்டு மீண்டபின்னர், அவ்வெற்றித் திருமகள் கோயில் புகுந்து, தம் விழுப்புண் சோரும் குருதி கலந்த செஞ்சோற்றுப் படையல் இட்டு வழிபாடாற்றி வணங்குவதும் செய்வர். அவ்வாறு, வெற்றி கொண்ட வீரர்கள் கொற்றவை கோயிலில் பலியாகப் படையல் இடும் பெருஞ் சோற்றுத் திரளையே இது குறிப்பதாகக் கொள்வதும் உண்டு. இத்துறைக்கு எடுத்துக்காட்டாக.

"முழங்கும் மந்திரத்து
அருந்திறல் மரபின் கடவுள் பேணியர்
உயர்ந்தோன் ஏந்திய அரும் பெறல் பிண்டம்
கருங்கண் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகிழ் இரும்பலி
எறும்பு மூசா இறும்பூது மரபின்
கருங்கண் காக்கையொடு பருந்து இருந்து ஆர
ஓடாப் பூட்கை ஒண்பொறிக் கழற்கால்
பெரும்சமம் ததைந்த செருப்புகல் மறவர்
உருமுநிலன் அதிர்க்கும் குரலொடு கொளை புணர்ந்து
பெருஞ்சோறு உகுத்தற்கு எறியும்
கடுஞ்சின வேந்தே! நின் தழங்கு குரல் முரசே."

பதிற்றுப்பத்து: 30

எனக், கொற்றவைக்கு வெற்றி வீரர் மேற்கொள்ளும் பலி தரு விழா விளக்கும் பதிற்றுப் பத்துச் செய்யுளினையே இரு உரையாசிரியர்களும் தந்துள்ளமையும் உணர்க. இத்துறை அந்நிகழ்ச்சியையே குறிப்பதாகக் கொண்டாலும், அந் நிகழ்ச்சியும் வெற்றிக்குப் பின் நிகழ்ச்சியே ஆதலின், இத்துறை, மண்ணுக்கு உரிய மன்னவன் செயலைக் குறிப்பதே அல்லது, மண்ணாசை கொண்ட மன்னவன் செயலைக் குறிப்பதாகாது என்றே கொள்க.

இப்பொருளமைதி நிலையுணராது ஈண்டுக் கூறிய எல்லாத் துறைகளுமே இருவரசர்க்கும் உரியவாம் எனக் கொண்டு பொருள்கூறும் நச்சினார்க்கினியர் வழியினைப் பின்பற்றி, இதை வெற்றிக்கு முன்னான வினையாகவே கொண்டுள்ளார் பு.வெ. மாலையாரும்.

நிற்க. நாடு காக்கும் போரில், சிலர் உயிரிழந்து போவதும் உண்டு ஆதலின், வெற்றியோடு வீடு திரும்பும் வேந்தனும், வீரர்களும் அவ்வீழ்ந்த வீரர்கள் நாட்டிற்கு ஆற்றிய தொண்டினைப் பாராட்டியும், அவர்கள் இறவாப் பெருநிலை பெறுவான் வேண்டியும், பிண்டம் இட்டு அவர்தம் நினைவு விழாவினைக் கொண்டாடுவதை, முதற்கண் மேற்கொள்வர்.

"துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியம் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
கூளிச்சுற்றம் குழீஇ இருந்தாங்கு" அகம்:233.

என்ற பாட்டில் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் செய்த வீரர் வழிபாட்டுச் சிறப்பினை, மாமூலனார் பாராட்டி யிருப்பது காண்க. அத்தகைய வீரர் வழிபாட்டினைக் குறிப்பதாகக் கோடலும் உண்டு.

**வென்றோர் விளக்கம்:** *"வென்றோர் மாட்டு உளதாகிய விளக்கம்" என்பது இளம்பூரணம். "அங்ஙனம் பிண்டமேய இருபெரு வேந்தருள் ஒருவர் ஒருவர் மிகை கண்டு-அஞ்சிக் கருமச் சூழ்ச்சியால் திறை கொடுப்ப அதனை வாங்கினார்க்கு உளதாகிய விளக்கம்" என்பது நச்சினார்க்கினியம். உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியின் மறைவு, அவனுக்குப் பின் சோணாட்டு அரசுகட்டில் ஏறிய கரிகாற் பெருவளத்தான் இளமை, அந்நாட்டு ஆட்சியைத் தாம் கைப்பற்றிக் கொள்ளத் தாயத்தார் அவனுக்கு எதிராக மூட்டிய உள்நாட்டுக் குழப்பம், கரிகாலன் தனிமை ஆகிய இவற்றைப் பயன்கொண்டு சேர, பாண்டிய இருபேரரசர்களும், வேளிர் என வழங்கப்படும் குறுநில மன்னர் பதினொருவருமாகக் கூடிச் சோணாட்டை வென்று தமதாக்கிக் கொள்ள அந்நாட்டின் மீது போர் தொடுத்து வந்தாராக, அவர்களை வெண்ணி வாயில் எனும் இடத்தில் தடுத்து நிறுத்திப் போரிட்டு வென்ற கரிகாலனின் கன்னிப் போர் வெற்றி கண்டு,*

"பெரும் பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணிவாயில்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத்து ஒழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி அறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே"

*என்ற பரணர் பாராட்டும் (அகம்: 246),*

"ஆளிநன்மான் அணங்குடைக் குருளை
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்

தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு
இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிரும் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவ!"

*என்ற முடத்தாமக் கண்ணியார் பாராட்டும் (பொருந ராற்றுப் படை: 139-148), "பாண்டிநாடு பொதிய மலைப் பெருவளங்களாம் அகிலும் ஆரமும், கொற்கைத் துறை வழங்கும் வெண்முத்தும் போலும் அரும்பெரும் பொருள் களை ஆரக் கொண்டது: அஃது ஆளும் செழியனோ நனி இளையன்: நாமோ மிகப் பேரரசரும் மிகப் பலருமாவர்!" என்ற நினைவால், பாண்டி நாட்டின் மீது போர்தொடுத்து வந்த சேர, சோழராம் இரு பேரரசர்களையும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்ற சிற்றரசர் ஐவர்களையும், தன் தலைநகரப் புறத்தே தாக்கி வென்று ஓட்டியதோடு அமையாது, அவர்க்கு உரிய சோணாட்டுத் தலையாலங்கானம் வரையும் துரத்திச் சென்று வென்று, அவர்தம் வெற்றிமுரசு, வெண்கொற்றக் குடை முதலாயினவற்றையும் தனதாக்கிக் கொண்டு, அவ்வெற்றிச் சிறப்பால் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்ற சீர்மிகு பெயர் பெற்ற செழியனை,*

"விழுமியம், பெரியம் யாமே; நம்மில்
பொருநனும் இளையன், கொண்டியும் பெரிது என
எள்ளிவந்த வம்பமள்ளர்
புல்லென் கண்ணர் புறத்திற் பெயர

ஈண்டுஅவர் அடுதலும் ஒல்லான், ஆண்டுஅவர்
மாண்இழை மகளிர் நாணினர் கழியத்
தந்தை தம்மூர் ஆங்கண்
தெண்கிணை கறங்கச் சென்று ஆண்டு அட்டனனே!

*என்ற இடைக்குன்றூர்க் கிழார் பாராட்டும் (புறம்:78)*

"கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன்தலை சிவப்பச்
சேரல், செம்பியன், சினங்கெழு திதியன்,
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி,
நார்அரி நறவின் எருமையூரன்,
தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்,
இருங்கோ வேண்மான் இயல்தேர்ப் பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து, உரைசெலக்
கொன்று களம்வேட்ட ஞான்றை
வென்றி கொள்வீரர் ஆர்ப்பினும் பெரிதே!

*என்ற நக்கீரர் பாராட்டும் (அகம்: 36) வென்றோர் விளக்கத்தின் பாற்பட்டனவே.*

*பகைவரை வென்று அறவே அழித்து மீளும் இந் நிகழ்ச்சியோடு, மண்காக்க விரையும் மன்னன் படைப் பெருமை கண்டு அஞ்சி, மண்ணாசை கொண்டு வந்தவர், தம் நினைவை மாற்றிக் கொண்டு, அவனைப் பணிந்து, தம் பிழை பொறுப்பான் வேண்டி அரிய பெரிய பொருள் களைத் திறையாக அளிக்க, அது பெற்று, அவரை அழிக்காதே விடுத்து மீளலும், அப்போது வந்த வேந்தர் களை வென்று ஓட்டிய வேந்தன், மேலும் சிலர் வருதலும் கூடும் என்ற கருத்தால், எல்லைக்கண் உள்ள பாசறை வாழ்க்கையினை மேலும் சிலநாள் மேற்கோடலும்*

வென்றோர் விளக்கத்தின் பாற்பட்டனவே. இவ்விரு நிகழ்ச்சிகளையும், "அருந் திறை அளப்ப ஆறிய சினத்தொடு பெரும்பூண் மன்னவன் பெயர்தலும் அதுவே", "மதிக் குடைக்கீழ் வழிமொழிந்து மன்னரெல்லாம் மறம் துறப்பவும், பதிப்பெயரான் மறவேந்தன் பாசறை இருந் தன்று" என விளக்கமும், "பேராண் வஞ்சி", "பாசறை நிலை" எனப் பெயரும் அளித்து முறையே மேற்கொண்டுள்ளார் பு.வெ. மாலையார்.

**தோற்றோர் தேய்வு:** வென்று ஓட்டிய மண்ணுக்கு உரியான் வெற்றியைத் தனித்தும் தோற்று ஓடிய மண்ணாசை கொண்டு வந்தவனின் கேட்டினை இணைத்தும் பாராட்டிய வழியே, அவ்வெற்றியின் முழு உருவம் வெளிப்படும் ஆகவே, வென்றோன் விளக்கத்தைக் கூறுவதை அடுத்துத் தோற்றோன் தேய் வினையும் கூறியுள்ளார் ஆசிரியர்.

**குன்றாச் சிறப்பின் கொற்றவள்ளை:** "குறைவுறுதலைச் செய்யாத வென்றிச் சிறப்பினையுடையது கொற்றவள்ளை. கொற்ற வள்ளையாவது, தோற்ற கொற்றவன் அளிக்கும் திறை" என்பது இளம்பூரணர் தரும் விளக்கம். "வேந்தனது குறையாத வெற்றிச் சிறப்பினால் பகைவர் நாடு அழிதற்கு இரங்கித் தோற்றோனை விளங்கக் கூறும் வள்ளைப் பாட்டு. வள்ளை: உரற்பாட்டு: தோற்ற கொற்றவன் கொடுக்கும் திறை என்று சொல்வாரும் உளர்," என்பது நச்சினார்க் கினியர் தரும் விளக்கம். மண்ணாசை கொண்டு வந்தவனின் மறத்தைக் கெடுத்துத் தன் மண்ணைக் காத்துக் கொண்ட மன்னவன் வெற்றிச் சிறப்போடு, தோற்ற அம்மண்ணாசை உடையானின் இழிவையும் ஒருசேரப் பாடவே, அம்மண்ணுக்கு உரியான் புகழ் பாராட்டப்

பெற்றதாக, மீண்டும், அவன் தன் பகைவர்பால் திறை கொண்டதைப் பாராட்ட வேண்டுவது தேவையற்ற தாகவே, இது அவன் திறை கொள்வதைக் கூறுவதாகாது. தங்கள் நாடாளும் மன்னவன், தங்கள் நாட்டிற்கு வர இருந்த கேட்டினைப் போக்கிக் காத்தமை கண்ட அந்நாட்டு மகளிர், அவன் வெற்றிப் புகழைப் பாராட்டக் கடமைப் பட்டவராவர். அக்கடப்பாடுடைய அம்சங்கள் அவரவர்தம் நிலைக்கு ஏற்ப, அவன் புகழ்பாடும் ஆடல் பாடல்களை மேற்கொள்வர். ஆகவே, இது, வெற்றி கொண்ட வேந்தன் செயல் குறிப்பதன்று. அவ்வேந்தன் ஆட்சிக்கீழ் வாழும் மக்கள் தங்கள் புகழ்பாடும் நிகழ்ச்சியைக் குறிப்பதே ஆகும். மக்கள் மேற்கொள்ளும் ஆடல் பாடல்களில் கொற்ற வள்ளை என்பதும் ஒன்று; உலக்கைப் பாட்டு எனப் பொதுவாக அழைக்கப் பெறும் அது இளம் மகளிர் இருவர் எதிர் எதிராக நின்று உரலில் இட்ட நெல் முதலாம் பொருள்களைத் தம் கையில் பிடித்திருக்கும் உலக்கைகளால் மாறி மாறிக் குற்றுங்கால், ஒருத்தி, அப்பாட்டுடைத் தலைவனின் புகழை இகழ்வாள் புகழ, மற்றொருத்தி அவ் விகழ்ச்சியை மறுத்துப் புகழ்ந்த வாய்ப்பாட்டினாலேயே புகழ்வதாகிய அப்பாடலை மாறி மாறிப் பாடுவதாகும்.

"பாடல்சால் முத்தம் பவழ உலக்கையால்
மாடமதுரை மகளிர் குறுவரே:
வானவர்கோன் ஆரம் வயங்கியதோள் பஞ்சவன்தன்
மீனக்கொடி பாடும் பாடலே பாடல்:
வேப்பந்தார் நெஞ்சு உணக்கும் பாடலே பாடல்!"

"வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பின், இனவண்டு இமிர்பு ஊதும்

சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெண்ணெல் அறைஉரலுள் பெய்து இருவாம்
ஐயனை ஏத்துவாம் போல, அணிபெற்ற
மைபடுசென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவாம் நாம்!"

என்ற சிலப்பதிகாரக் கலித்தொகைப் பாக்களால் வள்ளைப் பாட்டின் இயல்பினை ஒருவாறு உணர்க.

கொற்ற வள்ளைத் துறையின் பொருள் இதுவே என்பது "கொற்றவள்ளையாவது, மன்னவன் புகழ் கிளத்து ஒன்னார் நாடு அழிய இரங்கின்று" எனக் கூறும் பு.வெ. மாலை விளக்கத்தாலும் உறுதியாதல் காண்க.

**அழிபடைதட்டோர் தழிஞ்சி:** "மாற்றார் விடு படைக் கலன் முதலியனவற்றைத் தம்மாட்டுத் தடுத்து உளன் அழிந்தோர்ப் பேணித் தழுவிக்கோடல்" என்று இளம் பூரணரும், "அங்ஙனம் வென்றும் தோற்றும் மீண்ட வேந்தர் தம் படையாளர் முன்பு போர் செய்துழிக் கணையும் வேலும் முதலிய படைகளைத் தம்மிடத்தே தடுத்துக் கொண்டு அழிந்தவர்களைத் தாம் சென்றும், பொருள் கொடுத்தும், வினாவியும் தழுவிக் கோடல்" என்று நச்சினார்க்கினியரும், இத்தொடர்க்குப் பொருள் கூறி யுள்ளனர். போர்க்களம் புகுந்து போராடி வெற்றிபெற்ற வீரர்க்கு விருந்தளித்துச் சிறப்புச் செய்த வேந்தன், வெற்றி, வீடு திரும்பிய அவ்வீரர்களால் மட்டும் வந்துற்றது அன்று; அக்காலத்தில் பகைவரின் படைக்கலம் பாய்ந்து ஆண்டே மாய்ந்து போனவரும், அப்படைக் கலங்களால் கண்ணும், கையும், காலும் போலும் உறுப்புகளை இழந்து எழுந்து நடமாட மாட்டாது, மலைகளிலும் மருத்துவ நிலையங் களிலும் வீழ்ந்து கிடப்பவரும் ஆகிய அவ் வீரர்க்கும்

அவ்வெற்றியில் பெரும் பங்கு உண்டு என்பதை உணர்ந்து, மாண்டவரின் மனைவியும் மக்களும் வாழவும், உறுப்பு நலன் அழிந்தவர் அது தீர்ந்து ஓய்வு கொண்டு இருந்து வாழவும் பெரும் பொருள் வழங்குவதும் செய்வன். அஃது அவன் கடமையும் ஆகும். ஆகவே, மன்னவன் கொற்றம் கண்டு கூத்தும் பாட்டும் மேற்கொண்டு மக்கள் ஒருபால் மகிழ, மன்னவன் அம்மக்கள் நலம் பேணும் பெரும் பணியை மேற்கொள்வது இன்றியமையாததாகவே, அந்நிகழ்ச்சியைக் கூறும் துறையும் ஈண்டு வேண்டப் படுவ தாயிற்று.

முல்லைப் பாட்டின் பாட்டுடைத் தலைவனாகிய ஒரு மன்னன், அன்றைய போர் நிகழ்ச்சிகளே நினைவில் நிற்க, உறக்கம் பெற மாட்டாது, தம் காதற் பிடியானைகள் வருந்த, பகைவர் எறிந்த வேல் ஏறுண்டு வீழ்ந்து படிந்த வேழங்களை நினைந்தும், பகைப் படையைச் சேர்ந்த களிறுகளின் தொங்கும் கைகள் மலைப் பாம்புகள் போல் மண்ணில் புரளுமாறு அவற்றை வெட்டி வீழ்த்தித் தம் செஞ்சோற்றுக் கடன் கழித்து விண்ணுலகு புகுந்த வீரர்களை நினைந்தும், களத்தில் பகைவர் ஏவிய கணைகள் குளித்து ஆக்கிய புண்கள் தரும் நோயால் வருந்தி, உடல் குன்றி, உணவு வெறுத்துச் சோர்ந்து தலைதாழ்த்திக் கிடக்கும் குதிரைகளை நினைந்தும், வருத்தம் மிகுந்து, ஒரு கை, பள்ளியில் ஊன்றிக் கிடக்க, ஒரு கை, முடி விளங்கும் தலையைத் தாங்கி நிற்கச் செயலற்றுச் சிந்தை நோகும் காட்சியும்,

"கண் படை பெறாஅது
எடுத்துஎறி எஃகம் பாய்தலின், புண்கூர்ந்து
பிடிக்கணம் மறந்த வேழம், வேழத்துப்

பாம்பு பதைப்பு அன்ன பரூஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலம் திருத்திச்
சோறு வாய்த்து ஒழிந்தோர் உள்ளியும் தோல்துமிபு.
வைந்நுனை பகழி மூழ்கலின், செவிசாய்த்து
உண்ணாது உயங்கும் மா சிந்தித்தும்,
ஒரு கை பள்ளி ஒற்றி, ஒருகை
முடியொடு கடகம் சேர்த்தி, நெடிது நினைந்து
அரசு இருந்து பணிக்கும் முரசு முழங்கு பாசறை..."

பாண்டியர் பேரரசைத் தமதாக்கிக் கோடல் வேண்டும் என்ற பேராசை உந்தப் படையெடுத்து வந்த பல பேரரசர்களின் கூட்டணியை முறியடித்து வெற்றி கொண்ட தலையாலங்கானப் போர்க் களத்தில் பகைவரின் வேழப் படையினை வீழ்த்திய நிகழ்ச்சியில், புண்பட்டு வீழ்ந்து கிடக்கும் வீரர்களைக் கண்டு ஆறுதல் உரைத்து, அன்புரை வழங்கிவர வேண்டும் என்ற அவா முந்துற, வாடைக்காற்று வீசுவதால், தலை தெற்கே சாய்ந்து எரியும் பெரிய பாண்டில் விளக்கேந்திப் பலர் முன் நடந்து வழிகாட்ட, வேப்பந்தார்க் கண்ணியும், வேற்படையும் உடைய படைத் தலைவன் முன்னே நடக்க, பெய்யும் மழைநீர் மன்னன்மீது விழாமை குறித்து விரித்த வெண் கொற்றக் குடை ஏந்தி ஒரு வீரன் பின்னே வர, காற்றில் அலைப்புண்டு சரியும் மேலாடையை ஒரு கையில் பற்றிக் கொண்டு, வலக்கையில் வாள் ஏந்தி, செல்லும் வழியில் இருமருங்கும் நிற்கும் குதிரைகள் குளிரில் உடல் சிலிர்க்குந் தோறும், அவற்றின் மீது வீழ்ந்து வழியும் மழைத் துளிகள் சிதறித் தன்மீது விழுவதையும் பொருட்படுத்தாமல், மழையால் சேறுபட்ட மண்ணில் நடந்து சென்று வீழ்ந்து கிடக்கும் வீரர்களின் ஒவ்வொருவரின் பீடும் பெருமையும்,

*அவர் பெற்ற புண்ணின் பெருமையும் கொடுமையும் படைத் தலைவன் கூறிவர, அவர் உள்ளம் மகிழும் உரைகளை அள்ளி அள்ளிச் சொரிந்தவாறே, அம்மருத்துவ நிலையத்தைச் சுற்றிவரும் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனின் பாசறை நிலைக்காட்சியும், இத்தழிஞ்சித் துறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாதல் அறிக.*

"ஓடையொடு பொலிந்த வினைநவில் யானை
நீள்திரள் தடக்கை நிலமிசைப் புரளக்
களிறு களம்படுத்த பெருஞ்செய் ஆடவர்
ஒளிறுவாள் விழுப்புண் காணிய புறம் போந்து
வடந்தைத் தண்வளி எறிதொறும் நுடங்கித்
தெற்கு ஏர்பு இறைஞ்சிய தலைய நன்பல்
பாண்டில் விளக்கின் பருஉச்சுடர் அழல,
வேம்புதலையாத்த நோன்காழ் எஃகமொடு
முன்னோன் முறை முறை காட்டப் பின்னர்
மணிப்புறத் திட்ட மாத்தாள் பிடியொடு
பருமம் களையாப் பாய்பரிக் கலிமா
இருஞ்சேற்றுத் தெருவின் எறிதுளி விதிர்ப்பப்
புடைவீழ் அந்துகில் இடவயின் தழீஇ
வாள்தோள் கோத்த வன்கண் காளை
சுவல்மிசை அமைத்த கையன், முகன் அமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை,
தவ்வென்று அசைஇத் தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே"

நெடுநல்வாடை: 169–188,

இனி, இத்தழிஞ்சி என்னும் துறை தன்னோடு போரிடும் வீரர் கைப்படை இழந்து நிற்கும் நிலையினையும், போரிட மாட்டாது தோற்றுப் புறமுதுகு காட்டி ஓடும் நிலையினையும் பயன் கொண்டு, அவர் மீது படைக்கலம் ஏவி அவரை அழிப்பது சிறந்த வீரர்க்கு இயல்பாகாது என்பதை உணர்ந்து, அந்நிலையில் அம்பு ஏவ எண்ணா ஆண்மையினைக் குறிப்பதாகும் என்று கூறுகிறார் பு.வெ. மாலையார். "அழியுநர் புறக்கொடை அயில்வேல் ஓச்சாக் கழிதறுகண்மை காதலித்து உரைத்தன்று" என்று அவர் கூறும் துறை விளக்கம் காண்க. களம் புகுந்து போராடும் நிலையில் பகைவர் மாட்டு ஒரு சிறு கண்ணோட்டம் தானும் காட்டாது அருஞ்சமர் ஆற்றுவதும், அவ்வாறு போர் புரியும் போது, பகைவனுக்குப் பிறிதொரு வகையால் போராடமாட்டாத் தளர்ச்சி வந்துறின், அவன் படையைச் சார்ந்த அவன் நண்பரினும் விரைந்து ஓடித் துணை புரிவதும், ஒரு வீரனுக்கு இருக்க வேண்டிய சிறந்த பண்புகளாம் எனினும், "பேராண்மை என்ப தறுகண்: ஒன்று உற்றக்கால் ஊராண்மை மற்று அதன் எஃகு", அது போர்க்களத்தில் ஒரு வீரன் காட்டும் பேராண்மையைப் புலப்படுத்தி, "ஒருவன் தாங்கிய தனி நிலை" என்னும் துறையின் பாற்பட்டு விடுமாதலின், அந்நிகழ்ச்சியைத் "தழிஞ்சி"யாகக் கொள்வது பொருந்தாது. நச்சினார்க்கினியரும் இதுவே கூறுவர்.

மண் ஆசை கொண்டு வருவான் செய்யும் போர், அவன் ஆசை கெட அவனை வென்று தன் மண் காக்கச் செல்வான் செய்யும் போர், ஆகிய இரு போர்களிலும், முன்னையப் போர் அறத்தொடு படா அழிவுப் போராக, பின்னதே, அறத்தொடுபட்ட ஆக்கப் போர் ஆதலின்,

புலவர்கள் பாராட்டைப் பெறும் உரிமையுடையது, அப்பின்னோன் மேற்கொண்ட போரே ஆகும். அப்போர் நிகழ்ச்சிகளில், அழிவுப் போர் மேற்கொண்டு வந்த முன்னவன் வெற்றி கொள்ள, ஆக்கப் போர் மேற்கொண்டு சென்ற பின்னவன் தோற்க. அவன் நாடு மாற்றான் கைப்பட்டுப் போனதும் ஒரோ வழி உண்டு எனினும், அவ்வெற்றி பாராட்டுதற்கு உரியதாகாது. "அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும், செவ்வியான் கேடும் நினைக்கப் படும்" என்பது போல், ஆன்றோர், அப்போர் முடிவு கண்டு கலங்கிக் கண்ணீர் சொரிவரே அல்லது, முன்னவன் வெற்றியைப் பரணி பாடிப் பாராட்டார். ஆகவே,

"முதியோள் சிறுவன் படை அழிந்து மாறினன்" என்று பலர் கூறக் கேட்ட ஒரு வீரத் தாய், 'என் மகன் மண்டமர்க்கு உடைந்தனனாயின், உண்ட என் முலை அறுத்திடுவேன்!' என வஞ்சினம் கூறி, வாள் எடுத்துக் களம் புகுந்து, ஆங்கு வீழ்ந்திருந்த வீரர் உடல்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்து வருங்காலை, அப்பிணங்களுள், உருவு தெரியாதவாறு சிதைந்துபோன தன் மகன் பிணமும் ஒன்றாதல் கண்டு, அவனைப் பெற்ற ஞான்று கொண்ட பேரின்பத்திலும் பெரிய பேரின்பம் கொண்டாள் என்ற பாராட்டில், அத்தாயின் மகன் ஆற்றிய போர், அவள் தனித்து நடந்து சென்று காணலாம், அண்மையிடத்ததாகத் தோன்றவே, அது தன் மண் காக்க, தன் நாட்டு எல்லையில் நடந்த போரே ஆதல் வேண்டும் என்பதும், மேனாள் போரில், தன்னை யானை எறிந்து களத்து ஒழிய, நெருதல் உற்ற செருவில் கொழுநன் பெருநிரை விலங்கிப்பட்டு ஒழிய, இன்றும் செருப்பறை கேட்டு, ஒரு மகன் அல்லது உற்ற துணையாகப் பிறர் எவரும் இலராகவும், அவ்விள

மகனுக்கு வெள்ளாடை உடுத்து, வாரிமுடித்து, வேலைக் கையில் கொடுத்துச் 'செருமுகம் செல்க' என விடை கொடுத்தாள் ஒரு வீரத்தாய் என்ற பாராட்டிலும், அப்போர்க்களத்தில் முழங்கும் போர்ப்பறை ஒலியினை, மனைக்கண் உறையும் மடந்தையரும் கேட்கும் அண்மையில் நடந்ததே அப்போர் என்றாகி, அதுவும் தன் மண்காக்கத் தன் நாட்டு எல்லையில் நடந்த போரே ஆதல் வேண்டும் என்பதும் உறுதியாதல் உணர்க.

ஆகவே, இவ்வாறு பாராட்டற்குரிய பெருவீரர்கள் மேற்கொண்ட போர்கள் எல்லாம், மண்ணாசை கொண்டு வந்தானை வென்று ஓட்டித் தன் மண் காக்க மேற்கொண்ட போர்களே ஆகும் என அறிக. ஆகவே, "ஒருவன் தாங்கிய பெருமை" முதலாக, "தழிஞ்சி" ஈறாக உள்ள துறைகள் எல்லாம், மண் காக்கும் மண்ணுக்கு உரியான் வினைகளைக் குறிப்பனவே எனக் கொள்க.

பசியான் வருந்திய பாலை நிலத்து மறவர் பசி போகக் களவாடிச் சென்ற ஆனிரையை, அவ்வானிரைக்கு உரிய முல்லை நிலத்து ஆயர் மீட்டு வந்து காத்தலே வெட்சி யாகும் எனத் தொல்காப்பியர் கூறுவதே, வெட்சித் திணையின் தொன்மை நிலையாதல் போலவே, மண்ணாசை கொண்ட மன்னவன் வந்து கைப்பற்றிக் கொண்ட தன் நாட்டின் ஒரு பகுதியை, அந்நாட்டுக்குரிய மன்னவன் வென்று மீட்டுக் காப்பதே வஞ்சி என்பதே வஞ்சித் திணையின் தொன்மை நிலையாகும்.

ஆனால், காலம் செல்லச் செல்ல, ஆனிரை கவர்தல் ஒரு திணை, அதை மீட்டல் ஒரு திணை என்றும், பண்டு பழிக்கப் பெற்றதே ஆயினும், இன்று ஆனிரை கவர்வதும் பாராட்டற்கு உரியதாயிற்று என்றும், வெட்சித் திணை

இலக்கணம் பிற்காலத்தில் வேறுபட்டதைப் போலவே, மண்கவர்தலும் ஒரு திணை; அதை மீட்டலும் ஒரு திணை; பழிப்பிற்கு உரியதாகப் பண்டு கருதப்பட்ட மண்கவர் ஒழுக்கமும் இன்று பாராட்டற்கு உரியதாயிற்று. எனவே, வஞ்சித் திணை இலக்கணமும் வேறுபட்டு விட்டது.

ஆனிரை கவர்ந்து செல்வது வெட்சியாகவும், அதை மீட்டல் கரந்தையாகவும், ஆனிரை குறித்த போர், பிற்காலத்தில் இரண்டாகப் பிரிந்து நிகழினும், ஆனிரை கவர்ந்து சென்று அடாது புரிந்த பாலை நிலத்து மறவரை வென்று துரத்தி அவ்வானிரையை மீட்டுக் கொணரும் பயன்மிகு போர் புரிந்த ஆயர் செயலையே, ஆசிரியர் தொல்காப்பியனார் வெட்சி என வழங்கியது போலவே, ஈண்டும், மண்ணை நச்சிப் போர் மேற் செல்லுவது வஞ்சியாகவும், அது நச்சி வந்தானுக்கு அது தராது போரிடுதல் காஞ்சியாகவும், இரண்டாகப் பிரிந்து பிற்காலத்தில் வழங்கப் பெறுகிறது என்றாலும், மண்ணாசை மிக்க மன்னனின் மறம் கடிந்து, அறம் நாட்டலாம் நற்பணியினையே வஞ்சி என்று கொண்டார். ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்து இதுவே என்பது, மண் ஆசை கொண்ட வேந்தன் ஆசையை, வெறும் மண்ணாசை என்று மட்டும் கூறாமல், "எஞ்சா மண்ணாசை" அதாவது, அளவின்றிப் பெருகிய ஆசை, அதாவது பேராசை எனக் கூறி அவனைப் பழிக்கும் நிலையிலும், வஞ்சியாவது அடல் குறித்தன்று, என வஞ்சியையும் அடல் குறித்தலையும், முறையே எழுவாயும், பயனிலையாகவும் கூறிப் பேராசை பிடித்தானை வென்று அழிப்போன் வினையினையே பயனிலையாக்கி, அப்பயனைத் தொழிற்படுத்துவதே வஞ்சியாம் என, அது

செய்யும் அம்மண்ணுக்குரிய மன்னனைப் புகழும் நிலையிலும் சூத்திரம் அமைத்து இருப்பதால் நன்கு புலனாதல் காண்க.

மண்ணாசை கொண்டு படையெடுத்து வருவானை அம்மண்ணுக்கு உரியான் வென்று ஓட்டித் தன் மண் காத்தலைக் கூறுவதே வஞ்சித் திணையின் தொல்லியல் பாம் எனினும், தன் நாட்டு எல்லையை விரிவாக்குவதும் வேந்தன் கடனாம் என்ற நிலை பிறக்கவே, பிறர் மண் கொள்வதும் பழிக்கப்படும் நிலை இழந்து பாராட்டிற்கு உரியதாகி விட்டது. தன் நாட்டின் மக்கட் பெருக்கத்திற்கு ஏற்பத் தன் நாட்டின் பரப்பினைப் பெருக்க வேண்டுவது தன் கடன் என உணர்ந்த அரசன், தன் நாட்டைச் சூழ இருந்த காடுகளை அழித்து நாடு கண்ட பின்னரும், இடம் போதாமை கண்ட போது, தான் செய்யக் கூடியது தன் அண்டை நாட்டின் ஒரு பகுதியைத் தன் நாட்டோடு இணைத்துக் கொள்வதே எனத் துணிந்து, அதை மேற்கொள்வன் ஆதலின், அச்செயலும் பாராட்டினுக்கு உரியதாகி விட்டது. உலகனைத்தும் தம் ஒரு குடைக் கீழ் வைத்து ஆள வேண்டும் என்ற பேராசையுடைய வேந்தர்களைத் "தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி, வெண்குடை நிழற்றிய ஒருமையோர்" (புறம்: 189) என்றும், "பொது மொழி பிறர்க்கு இன்றி முழுதாளும் செல்வர்", (மருதக்கலி: 3) என்றும் பொது வகையால் பாராட்டிய புலவர் ஒரு சிலராக, தலைச் சங்கப் புலவர் என்ற பாராட்டினுக்கு உரியவராகிய முரஞ்சியூர் முடிநாகராயர், பெருஞ்சோற்று உதியன் சேரலாதனை, "சேர நாட்டைப் போலவே, சோணாடும் உன் உடைமை ஆகிவிடவே, அச் சோணாட்டை அடுத்த கீழ்க் கடலில் தோன்றிச் சேர

நாட்டை அடுத்த மேலைக் கடலில் மறையும் ஞாயிறு, சேரலாதனுக்கு உரித்தாய கடலில் தோன்றும் ஞாயிறு, அவனுக்கு உரிய கடலிலேயே மறையும் மாண்புடைய தாகும் என்று பாராட்டப் பெறுமாறு பரந்து அகன்ற பேரரசு உடையவன் நீ!" எனச் சிறப்பு வகையால் பாராட்டியுள்ளார்.

"நின்கடல் பிறந்த ஞாயிறு, பெயர்த்தும் நின்
வெண்தலைப் புணரிக் குடகடல் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருக!" —புறம்: 2

கடைச் சங்கப் பெரும் புலவராகிய கபிலர், செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாராட்டுங்கால், "உலக அரசர் அனைவரும் வந்து தாள் பணியும் பேரின்ப வாழ்வினைப் பெற விரும்பியதனால் இவ்வுலகம் அனைவர்க்கும் பொதுவாகும் என்ற பொதுவுடைமைப் பேச்சினைக் கேட்கப் பொறாது, இருந்து ஆளும் நாடு, நனி மிகச் சிறிது, நனி மிகச் சிறிது என்ற நினைப்பு உள் இருந்து ஊக்கம் ஊட்டித் துரத்த, மடங்கா உள்ளம் உடைமையாய், மாற்றார்க்குரிய மண்ணை யெல்லாம் வென்று உரிமை யாக்க வல்ல பெரும் படை உடையாய்!" எனப் பெயர் கூறிப் பாராட்டியுள்ளார்.

"வையங் காவலர் வழி மொழிந்து ஒழுகப்
போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது
இடம் சிறிது என்னும் ஊக்கம் துரப்ப
ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்து அடுதானைச் சேரலாதன்!" —புறம்: 8.

பாலைக் கௌதமனார் பாடிய பதிற்றுப்பத்தின் பதிகம், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாராட்டுங்கால், தன் போர் யானைகள், மேற்குக் கடலும் கிழக்குக்

கடலுமாகிய அவ்விரு கடல்களுக்கும் ஒரே காலத்தில் சென்று கொணரும் அவ்விரு கடல் நீரிலேயே ஒவ்வொரு நாளும் படிந்தாடும் பெருமை வாய்க்கும் வகையில், தன் பேரரசை அவ்விரு கடல்வரையும் பெருக்கியிருந்தான் என அம்மண்ணாசையினையே பாராட்டியுளது.

"கண்ணகன் வைப்பின் மண் வகுத்து ஈத்துக்
கருங்களிற்று யானைப் புணர் நிரை நீட்டி
இருகடல் நீரும் ஒரு பகல் ஆடி..." –பதிற்றுப்பத்து: பதிகம்: 3

இவ்வகையால், பண்டு பழித்தற்கு உரியதாகத் தோன்றிய மண்ணாசை, பிற்காலத்தில் பாராட்டற்குரிய தாகி விடவே, சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தருள், சோழ குலத்தோனாகிய தான் ஒருவன் மட்டுமே கோலேந்துதல் வேண்டும்; ஏனையோர் இருவரும் தன் தாள் பணிந்து கிடத்தல் வேண்டும்; தன் குடை ஒன்றே, அவ்விரு குடைகளிலும் உயர்ந்து முன் செல்லுதல் வேண்டும் என்ற பேராசையுடையனாகி, அது நிறைவேறும் வண்ணம் வாழ்நாள் முழுவதும் பாசறை வாழ்க்கை யினையே மேற்கொண்டிருந்த நலங்கிள்ளி செயலும், அவன் ஆசைக்குத் துணை செய்யும் வகையில், அவன் கைப்பற்றக் கருதிய நாடு, காடுகளுக்கு அப்பாற்பட்டு நனி மிகச் சேய்மைக்கண் உளதாகவும், அச்சேய்மை கண்டு ஆங்குச் செல்ல மறுப்பதற்கு மாறாக, மனம் மகிழ்ந்து அவனுக்கு முன்னே விரையும் அவன் நாற்படைச் செலவும் பழித்தற்கு உரியவாகவும், புலவர் கோவூர்க் கிழார், பழித்தற்குரிய அவையே, அவன் பெருமையைப் புலப் படுத்தும் பாராட்டிற்குரிய பண்புகளாம் எனக் கொண்டு அவை கூறி அவனைப் பாராட்டியுள்ளார். இவ்வகையால் வஞ்சி ஒழுக்கம் உடைய வேந்தன் செயலோடு முற்றிலும்

முரண்பட்டு அது நிகழக் காரணமாய் இருந்த மண்ணாசைப் போரே, வஞ்சிப் போராக மாறி வழங்கும் நிலை பிறந்துவிட்டது.

"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப் படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய ஒரு குடை
உருகெழு மதியின் நிவந்து சேண் விளங்க:
நல்லிசை வேட்டம் வேண்டி வெல் போர்ப்
பாசறை அல்லது நீ ஒல்லாயே!
நுதிமுகம் மழுங்க மண்டி ஒன்னார்
கடிமதில் பாயும் நின் களிறு அடங்கலவே;
போர் எனில்புகலும் புனைகழல் மறவர்,
'காடு இடைக் கிடந்த நாடு நனி சேய
செல்வேம் அல்லேம்' என்னார்: கல்லென்
விழவுடை ஆங்கண், வேற்றுப் புலத்து இறுத்துக்
குணகடல் பின்னதாகக், குடகடல்
வெண்தலைப் புணரி நின் மான்குளம்பு அலைப்ப
வலமுறை வருதலும் உண்டு என்று அலமந்து
நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத்து அரசே..." —புறம்: 31.

இவ்வாறு, மண்ணாசை கொண்டு வருவானை வென்று ஓட்டி மண் காக்கும் காவலன் செயலே பாராட்டற்குரியது என்ற நிலை போய், மண்ணாசை கொண்டு மாற்றானை வெல்லும் மன்னவன் செயலும் பாராட்டற்கு உரியதாகும் என்ற நிலை பிறந்துவிடவே, அவ்விருவர் செயலுக்கும் வேறு வேறு பெயர் அளிக்க வேண்டுவது இன்றியமையாததாகி விட்டது. ஆசிரியர் தொல்காப்பியனார் ஆனிரை மீட்டலே வெட்சி எனக் கொண்டு அதற்கு அளித்திருந்த அவ்வெட்சிப் பெயரை,

ஆனிரை கவரும் நிகழ்ச்சிக்கு அளித்து விட்டமையால், அதை மீட்கும் நிகழ்ச்சிக்குக் கரந்தை என்ற வேறு பெயரை இட்டது போலவே, மண்ணாசை மிக்க மன்னனை வென்று வீறு கொள்ளும் வேந்தன் செயலுக்கு ஆசிரியர் வழங்கிய வஞ்சி என்ற பெயரை, அம்மண்ணாசை மிக்கான் செயலுக்கு அளித்து விட்டமையால், அவனை அடக்கு வோன் செயலுக்குக் காஞ்சி என்னும் வேறு பெயர் இட்டு வழங்கியுள்ளார்கள் பிற்காலப் புறப் பொருள் ஆசிரியர்கள்.

ஆனிரை காரணமாக நிகழும் போர்கள் இரண்டு, மண் காரணமாக நிகழும் போர்கள் இரண்டு. அரண் காரணமாக நிகழும் போர்கள் இரண்டு, ஆற்றல் காரணமாக நிகழும் போர்கள் இரண்டு எனத் தமிழகத்துப் போர்கள் எட்டு வகைப்படும் என்பதே ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்து ஆகுமாயின், அவற்றைத் தனித்தனியே விளக்கி, அவற்றிற்குத் தனித் தனியாகப் பெயர் சூட்டியிருப்பர். ஆனால், அவ்வாறு எட்டாகக் கொண்டு எட்டுப் பெயர் சூட்டாமல், நான்காகக் கொண்டு, நான்கு பெயரே சூட்டியுள்ளமையால், அவர்க்கு அது கருத்து அன்று என்பது புலனாகும்: வெட்சித் திணையினை விளக்கும் சூத்திரத்திலேயே, கரந்தை என்ற அதற்கு மறுதலைத் திணைப் பெயரைத் தந்திருப்பதையும், அது போலவே, உழிஞைத் திணையினை விளக்கும் சூத்திரத்திலேயே அதற்கு மறுதலைத் திணைப் பெயராகிய நொச்சி என்பதைத் தந்திருப்பதையும் நோக்கின், ஆசிரியர் தொல்காப்பியனார்க்கும், போர் எட்டு வகைப்படும் என்பதே கருத்தாம் என்று கூறுவாரும் உளர். ஆனால், அதுவே அவர் கருத்து ஆகுமாயின், வெட்சியில், கரந்தைப் பெயரை அளித்ததைப் போலவும், உழிஞையில் நொச்சிப்

பெயரை அளித்ததைப் போலவும், வஞ்சி தும்பைத் திணைகளிலும், அவற்றின் மறுதலைத் திணைப் பெயர்களை வழங்கியிருத்தல் வேண்டும்; ஆனால், அவ்வாறு அவர் வழங்கவில்லை ஆதலாலும், மண்ணாசை கொண்டு வரும் வஞ்சிக்கு எதிராக எடுக்கும் மண் காக்கும் நிகழ்ச்சியைக் குறிப்பதாகப் பிற்கால ஆசிரியர்கள் கொண்ட காஞ்சி என்னும் பெயரை, நிலையாமை உணர்த்தும் திணைக்குச் சூட்டி விட்டமையாலும், வெட்சிக்குக் கரந்தை, வஞ்சிக்குக் காஞ்சி, உழிஞைக்கு நொச்சி என ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் மறுதலை நிகழ்ச்சி உண்டு என்பதே ஆசிரியர் கருத்து ஆகுமாயின் தும்பைக்கும் ஒரு மாறுதலை நிகழ்ச்சியை அளித்திருத்தல் வேண்டும். ஆசிரியர் தொல்காப்பியனாரும் அளிக்கவில்லை; முன்னவை மூன்றும், இரண்டு இரண்டாகப் பிரிந்தே நிற்கும் எனக் கொண்ட பிற்காலப் புறப்பொருள் ஆசிரியர்களும், அப்பிரிவைத் தும்பைக்கண் கண்டார் அல்லர் ஆதலாலும், எதிர் ஊன்றலை உணர்த்துவதே காஞ்சி என்ற கொள்கையிலும் பிற்கால ஆசிரியர் களிடையே ஒருமைப்பாடு இல்லை; ஒரு சிலர் மட்டுமே அது எதிர் ஊன்றலை உணர்த்துவதாகக் கொள்ள, ஏனையோர் எல்லாம் அது நிலையாமை உணர்த்துவ தாகவே கொள்வர் ஆதலாலும், 'எதிர் சேரல் காஞ்சி என்பரால் எனின், காஞ்சி என்பது எப்பொருட்டும் நிலையாமை கூறுதலின், பெரிதும் ஆராய்ச்சிப்படும் பொதுவியல் பொருண்மைப் பெயரால் கூறலாகாமை உணர்க' என்ற நச்சினார்க்கினியரின் மறுப்பை ஈண்டு உணர்க. (புறத்திணை: 7 உரை)

ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்து வஞ்சியாவது, மண்ணாசை கொண்டு வருவானை வென்று, அவன் ஆசையை அழித்துத் தன் மண் காக்கும் நிகழ்ச்சி ஆகுமே அல்லது, அது, மண் ஆசை உடையான் நிகழ்ச்சியை மட்டுமே குறிப்பதோ, மண் ஆசை உடையான், அது காப்பவன் ஆகிய இருவரின் நிகழ்ச்சிகளையும் தனித் தனியே குறிப்பதோ ஆகாது என்பதே எனக் கொள்க. வஞ்சியாவது, மண் காப்பது ஆகவே, அது காக்கும் தொழில் நிகழ, அதைக் கைப்பற்றும் நிகழ்ச்சி அதற்கு முன் நிகழ வேண்டுமாதலின், மண் காக்கும் மன்னவன் செயல் கூறும் போது, அதற்கு முன்பாக அது கவரும் மன்னவன் செயலும் கூற வேண்டுவது இன்றியமையாத தாயிற்று என்றும் அறிக.

பு.வெ. மாலை ஆசிரியர், வஞ்சியாவது "வாடா வஞ்சி தலை மலைந்து கூடார் மண் கொளல் குறித்தன்று" என்றும், காஞ்சியாவது, "வெஞ்சின மாற்றான் விடு தர வேந்தன் காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று," என்றும் கூறி, மண் குறித்த போர் இரண்டாகும் எனக் கொண்டுள்ளார் எனினும், அத்திணைகளை விளக்கும் துறைகள் அமைந் திருக்கும் அமைப்பு முறையினை ஊன்றி நோக்கின், அது அவர் கருத்திற்கு அரணளிப்பது ஆகாது, மண் குறித்த போரை விளக்குவது வஞ்சி ஒன்றே, காஞ்சி நிலையாமை குறிப்பதே என்ற கொள்கைக்கே அரணாக நிற்பது நன்கு புலனாகும். ஆசிரியர் தொல்காப்பியனார், வஞ்சித் திணை விளக்கும் சூத்திரத்தின் முற்பகுதியில் மண்ணாசை கொண்டு வருவான் நிகழ்ச்சிகளைக் கூறி, அதன் பிற்பகுதியில், அவனை வென்று ஓட்டி மண் காக்கும் காவலன் நிகழ்ச்சிகளைக் கூறியிருப்பதைப் போலவே, புறப்பொருள் வெண்பா மாலையின் வஞ்சிப் படலத்து

முற்பகுதி மண் குறித்து எழும் மன்னவன் செயல் கூறப், பிற்பகுதி, அது காப்பவன் செயல் கூறுவதாகவே அமைந்துள்ளது. வஞ்சி முதலாகக், கொடை வஞ்சி ஈறாக உள்ள பதினான்கு துறைகளும் மண் ஆசை கொண்டு வருவான் தொழில்களை உணர்த்த, "குறுவஞ்சி" முதலாக, "நல்லினை வஞ்சி" ஈறாக உள்ள பிற்பட்ட துறைகள் ஏழும், வந்தானை வென்று ஓட்டுவான் தொழில்களை உணர்த்துவனவாகவே அமைந்திருப்பது, அது கற்பார்க்கு நன்கு புலனாகும். மண்ணாசை உடைய மன்னவன் செயல் கூறவது எனக் கருதப்பட்ட, பு.வெ. மாலை வஞ்சித்திணை இயல்பு, இவ்வாறு, அம்மன்னவன் வினையோடு, அவனை வென்று ஓட்டித் தன் மண் காக்கும் மன்னவன் வினையையும் ஒரு சேரக் கூறுவதாய் அமைந்துவிட, மண் காக்கும் மன்னவன் வினை கூறுவதாகக் கொள்ளப்படும் வெண்பா மாலைக் காஞ்சித் திணை இயல்பும் அதற்கு அரண் அளிப்பதாக அமையவில்லை. காஞ்சித் திணைப்பொருள் விளக்குவதாகக் கூறப்படும், அக்காஞ்சிப் படலத்துள் வந்துள்ள தலைப்புக்கள் இருபத்தைந்தனுள், ஒரு சிலவே மண் காக்கும் காவலன் செயல் விளக்கு வனவாக, அதுவும் கூறியது கூறல் என்னும் குற்றம்படும் வகையில், எஞ்சிய எல்லாம் நிலையாமைப் பொருள் விளக்குவனவாகவே உள்ளன. ஆகவே, ஆசிரியர் தொல் காப்பியனார் கொள்கையை ஒட்டி, மண் ஆசை கொண்டு வருவானை வென்று ஓட்டி மண் காப்பதே வஞ்சி, நிலையாமை குறிப்பதே காஞ்சி என்று கொள்வதே பொருந்துவதாம் என அறிக.

மண் ஆசை குறித்த போர் உணர்த்தும் புறத்திணையாகிய வஞ்சி, இருத்தல் பொருள் உணர்த்தும்

அகத்திணையாகிய முல்லைக்குப் புறமாகும் என்று கூறியுள்ளார் ஆசிரியர். இது அதற்குப் புறனாகும் காரணத்தைக் கூற வந்த உரையாசிரியர், "அதற்கு இது புறனாகியவாறு என்னையெனின், "மாயோன்மேய காடுறை உலகமும்," கார்காலமும் முல்லைக்கு முதற் பொருள் ஆதலானும், பகையிற் சேறலாகிய வஞ்சிக்கு நிழலும் நீரும் உள்ள காலம் வேண்டுதலானும், பருமரக் காடாகிய மலை சார்ந்த இடம் (குறிஞ்சி) ஆகாமையானும், அதற்கு இது சிறந்தது என்க. அன்னது ஆகல், முல்லைப் பாட்டினுள்,

"கான்யாறு தழீஇய அகல்நெடும் புறவில்
சேண்நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி
வேட்டுப்புழை அருப்பம் மாட்டிக் காட்ட
இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி"

–என்பதனாலும் அறிக, என்று கூறியுள்ளார். நச்சினார்க் கினியர், "முதலெனப்பட்ட காடுறை உலகமும் கார் காலமும், அந்நிலத்திற் கேற்ற கருப்பொருளும், அரசன் பாசறைக்கண் தலைவியைப் பிரிந்து இருத்தலும், அவன் தலைவி அவனைப் பிரிந்து மனையின் இருத்தலும் ஆகிய உரிப்பொருளும் ஒப்பச் சேறலின் வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று. வெஞ்சுடர் வெப்பம் நீங்கத் தண் பெயல் பெய்து நீரும் நிழலும் உணவும் பிறவும் உளவாகிய காட்டகத்துக் களிறு முதலியவற்றோடு சென்றிருத்தல் வேண்டுதலின் வஞ்சிக்கும் இம்முதல் கருஉரியும் வந்தன வாம். முல்லைப் பாட்டினுள், 'கான்யாறு தழீஇய...பாடி' என்பதனான் உணர்க," என்று காரணம் காட்டியுள்ளார்.

தொல்காப்பியப் பொருளதிகார அகத்திணை இயலின்கண், ஆசிரியர் நச்சினார்க்கினியர், "வினைவயின் பிரிந்து மீள்வோன் விரைபரித்தேர் ஊர்ந்து பாசறையி னின்றும் மாலைக் காலத்து ஊர்வயின் வரூஉம் காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆதலின், அவை வெப்பமும் தட்பமும் மிகாது இடை நிகர்த்தவாகி, ஏவல் செய்து வரும் இளையோர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும் ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலின், களி சிறந்து மாவும் புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவற்கும் தலைவிக்கும் காமக்குறிப்பு மிகுதலானும், பிரிந்து மீளும் தலைவன் திறமெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலாம் முல்லைக்குக் கார்காலம் உரித்தாயிற்று. புல்லை மேய்ந்து கொல்லேற்றோடே, புனிற்றாக் கன்றை நினைத்து மன்றிற் புகுதரவும், தீங்குழல் இசைப்பவும், பந்தர் முல்லை வந்து மணங் கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக் குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப் பொழுதும் உரித்தாயிற்று," எனக் கூறும் விளக்கத்தால். தலைவன் மீளும் காலமே கார்காலம், அக்காலமே மீட்சிக்கு ஏற்புடைய காலம் என்பது அவர் கருத்தாதல் புலனாயிற்று. நச்சினார்க்கினியர் கூறும் இக்கருத்தினை.

"வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து
போர்வல் இளையர் தாள்வலம் வாழ்த்தத்
தண்பெயல் பொழிந்த பைதறு காலைக்
குருதி உருவின் ஒண்செம் மூதாய்
பெருவழி மருங்கில் சிறுபல வரிப்பப்,
பைங்கொடி முல்லை மெண்மதப் புதுவீ
வெண்களர் அரிமணல் நன்பல தாஅய்

வண்டுபோது அவிழ்க்கும் தண்கமழ் புறவில்
கருங்கோட்டு இரலை காமர் மடப்பிணை
மருண்டமான் நோக்கம் காண்தொறும் நின்நினைந்து
திண்தேர்வலவ! கடவு, எனக் கடைஇ
இன்றே வருவர் ஆன்றிகம் பனி —அகம்: 74

என்ற, தலைவியை ஆற்றுவிக்கும் தோழியின் கூற்றும்,

"வந்துவினை முடித்தனன் வேந்தனும்; பகைவரும்
தந்து திறைகொடுத்துத் தமர் ஆயினரே;
முரண் செறிந்திருந்த தானை இரண்டும்
ஒன்றுஎன அறைந்தன பணையே; நின்தேர்
முன்இயங்கு ஊர்தி பின்னிலை ஈயாது
ஊர்க பாக..." —அகம்: 44

என்ற, வினைமுடித்த தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறும் கூற்றும் உறுதி செய்கின்றன. இவ்வகையால் நாடு காவல் போலும் வினைமேற்கொண்டு பிரிந்து சென்ற தலைவன், வினை முடித்துக் கொண்டு வீடு திரும்பும் காலம், கார்காலமாகும் என்பது உறுதியாயிற்று. 'கிழவி நிலையே வினையிடத்து உரையார், வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" என்பதற்கு ஏற்ப, காதலை மறந்து கடனாற்றிய தன் பயனாய் வினையில் வெற்றி கண்ட பின்னர், அது காறும் மறைந்திருந்த காதல் வெளிப்பட்டு ஆட்சி புரியுமாதலின் வினைமுடிவுற்றதும் வீடு திரும்ப விரைவன் என்பது இயல்பாயிற்று. அவ்வாறு அவன் வீடு திரும்பும் காலம் கார்காலம் என்பது உறுதியாகவே, அவன் வினையாற்றும் காலம், அக்கார்காலத்திற்கு முன்னதான, இளவேனில், முதுவேனில் பருவங்களாகிய சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி மாதங்களாகுமே யல்லது, மீண்டு வரும் கார்காலமாம் ஆவணியும், புரட்டாசியும் ஆதல்

இயலாது. இவ்வாறு வினைசெய் காலமும், அது முடித்து வீடு திரும்பும் காலமும் ஒன்று ஆகாது. முன்னது வேனிற் பருவத்ததாகப் பின்னது கார்ப்பருவத்தது ஆகவே, நிழலும் நீரும் சார்ந்த கார்காலத்துக் காட்டகமே வினை நிகழ்ச்சிக்கு ஏற்புடையதாம் என்று கூறி, நிலமும், காலமும் கொண்டு, வஞ்சியை முல்லைப் புறமாகக் கோடல் பொருந்தாது.

வஞ்சிப் போர், மண் ஆசை காரணமாக நிகழும் போர் ஆம். ஆகவே அப்போர் இரு நாடுகளின் எல்லைப் படைகளுக்கு இடையே நடைபெறுவதாகும். ஒரு நாட்டிற்கு இன்றியமையா அரண்களாகிய கடல் அரண், காட்டரண், மலையரண் ஆகியவற்றுள், கடல் அரணும், மலையரணும் எல்லா நாடுகளுக்கும் அமைதல் இயலாது. ஆனால், ஒவ்வொரு நாட்டையும் சூழக்காட்டரண் மட்டும் இயல்பாகவே அமைந்திருக்கும். இயற்கையான காடு அமையாதாயின், செயற்கைக் காட்டரணாவது அமைந் திருக்கும். "நொச்சிவேலித் தித்தன் உறந்தை" என்பது போலும் தொடர்கள், சங்க இலக்கியங்களில், நகரங் களோடு தொடர்புடையவாய் வழங்கப் பெறுகின்றன. ஆகவே, வஞ்சிப் போர், அக்காட்டகத்து நிகழும் போரே ஆகும். காடு முல்லை எனப்படும். ஆகவே வஞ்சி முல்லைப்புறம் ஆயிற்று. வெட்சிப்போர் புரியும் மறவரும் ஆயரும் முறையே பாலை, முல்லை நிலத்தவராகவும் அவர் அது காரணமாக நிகழ்த்தும் போர் குறிஞ்சி நிலத்திலாதல் கொண்டு, குறிஞ்சிப்புறமாக வெட்சியைக் கொண்டது போலவே, ஈண்டும் வஞ்சிப் போர் நிகழும் இடமாதல் கொண்டே முல்லைப் புறமாக வஞ்சியைக் கோடல் வேண்டும்; அதுவே இயற்கையோடு இயன்ற காரணம் ஆகும்.

# 3

## நொச்சியும் உழிஞையும்

மண்ணாசை கொண்டு அண்டை நாட்டு அரசனோடு போரிடப் போன ஓர் அரசன், போரை விரும்பி மேற்கொண்டவனாதலின், அப்போரை மேற் கொள்வதன் பின்னர்த் தன்வலி, மாற்றான்வலி, தனக்கு ஆகும் காலம், மாற்றானுக்கு ஆகும் காலம், தனக்கு வாய்ப்புடைய இடம், மாற்றானுக்கு வாய்ப்புடைய இடம் ஆகியவற்றைப் பல முறை ஆராய்ந்து ஆராய்ந்து, தன்வலி மிக்க நிலையில், தனக்கு ஏற்புடைய காலத்தில், வாய்ப் புடைய இடமாக நோக்கிப் போர் தொடங்கியிருப்பன். ஆனால், அவன் பகைவனாகிய மண்ணுக்குரிய மன்ன வனோ எனில், அத்தகைய முன்னேற்பாடுகளோடு போர்க் களம் புகுந்தவனல்லன். பகையரசன் படை தன் நாட்டுள் புகுந்து தன் நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றிக் கொண்டது என்பதை அறிந்தவுடனே, அப்படையை விரட்டித் தன் நாட்டை வாழ்விக்க வேண்டும் என்ற எண்ணமே முன்னிற்க, விரைந்து களம் புகுந்தவனாதலின், அந் நிலையில் தன் படைபலம் யாது? பகைப் பலம் யாது? தனக்கு ஏற்புடைய காலம்தானா? தனக்கு வெற்றியளிக்க வாய்ப்புடைய இடந்தானா என்பனவற்றையெல்லாம்

எண்ணிப் பார்த்து, அவையெல்லாம் தனக்கு நல்லவாதல் கண்ட பிறகே களம் புகுந்திருத்தல் இயலாது. உள்ளது ஒரு சில படையே எனினும், அது கொண்டே களம் புகுந் திருப்பன்; தனக்குத் துணை புரிவாரைக் கண்டு, அவர் துணையினை நாடிப் பெறுதல் வேண்டும் என்ற நினைவுதானும் அவனுக்கு அப்போது எழுந்திராது. ஆக, இந்நிலைகளால் வந்தவன் கைவலுக்க, தன் கை வலுவிழக்க, வந்தானை வெல்ல மாட்டாது தோற்றுப் போவது, மண்ணுக்கு உரியானுக்கு ஒரோ வழி உண்டாதலும் கூடும்.

தோல்வியுற்றது தன் படை என்பதனாலேயே மண்ணுக்குரிய மன்னவன், பகைவனுக்குப் பணிந்து போக வேண்டும் என்பது தேவையில்லை. சிறிது காலம் கழியின், வந்தவனை வென்று ஓட்டுவதும் இயலும். அதற்குள் அவனுக்கு ஏற்புடைய காலமும் வந்து வாய்த்துவிடும். அவனோடு நட்புடையவராகிய அரசர் சிலர், அவனுக்குத் துணையாகத் தம் படைகளை அனுப்புவதும் செய்வர். ஆகவே, அக்காலத்தை எதிர் நோக்கியிருப்பது அரச முறையாகும். ஆகவே, அக்காலம் வரும்வரை, பகை வனுக்குப் பணியாமலும் அவனால் பற்றப்பட்டுப் பாழுற்றுப் போகாமலும், தன் படையையும் தன்னையும் காத்துக் கொள்ள வேண்டுவது அவன் தலையாய கடமையாகும். அக்கடமையைக் குறைவற நிறைவேற்றும் கருத்துடையராகவே, நம் கன்னித் தமிழ் நாட்டுக் காவலர்கள் தங்கள் தலைநகர்களைத் தலைசிறந்த அரண் களாக அமைத்திருந்தார்கள். பேரூர்கள் ஒவ்வொன்றும் பெரிய பெரிய கோட்டைகளாகவே அமைய வேண்டுவது அக்காலத் தமிழகத்தின் இன்றியமையாத் தேவையாக அமைந்து விட்டது.

பண்டைத் தமிழகம், ஒரு நாடு செல்வத்தில் சிறந்து வாழ வேண்டுமாயின், அது நீர்வள நில வளங்கள் தரும் வற்றாப் பெருவளங்களோடு, வாணிகத் துறையில் வளம் பெற்ற நாடாகவும் திகழ்தல் வேண்டும். வாணிகத்திலும், நில வாணிகத்தைக் காட்டிலும் கடல் வாணிகத்தையே பெருவாரியாக மேற்கொள்ளுதல் வேண்டும். விலை யுயர்ந்த பொருள்களை வெளிநாடுகளிலிருந்து தான் வாங்குவதை விடுத்து, அப்பொருள்களை அப்புற நாடு களுக்குத் தான் வழங்குதல் வேண்டும். பொருள்களை விற்றுப் பொற்காசுகளைப் பெற வேண்டுமேயல்லாது, பொற்காசுகளைக் கொடுத்துப் பொருள்களை வாங்குதல் கூடாது; அத்தகைய வாணிகத்திற்குத் துணை செய்யும் வகையில் வகை வகையான தொழில்களை வளர்த்து, நாட்டை வளம் கொழிக்கும் நாடாக ஆக்குதல் வேண்டும். தன் நாட்டுத் தொழில் வல்லவர்கள் பிற நாட்டு மக்களின் தேவைகளை அறிந்து அவர்கள் விரும்பி வாங்கும் வகையில், பொருள்களை வனப்புடையவாக ஆக்கித் தருதல் வேண்டும் என்பன போலும் வாணிகத் துறை உண்மைகளை உணர்ந்திருந்தமையால், தமிழகத்துப் பேரூர்கள், பெரும் பொருட் களஞ்சியங்களாகக் காட்சி அளித்தன. இவ்வாறு தமிழகத்துப் பேரூர்களில் வளம் கொழிக்கவே, அப்பேரூர்களை அரசிருக்கையாகக் கொண்டு ஆண்ட அரசர்கள், வளங் கொழிக்கும் நாடுகளுள் புகுந்து, அவ்வளங்களைக் கொள்ளை கொண்டு செல்வதையே வாழ்வுத் தொழிலாகக் கொண்டு திரியும் ஆறலைக் கள்வர்களாலும், மண்ணாசை மிக்க மன்னர் களாலும், பொன்னாசை மிக்க பெருவீரர்களாலும் அழிவு நேராவாறு அந்நகர்களைக் காக்க வேண்டும் என்பதில்

கருத்துடையவராயினர். அதனால் அப்பேரூர்களைச் சூழ வலிய பெரிய அரண்களை அமைக்க வேண்டுவது இன்றியமையாததாகி விட்டது. ஒப்பற்ற பேரரசு அமைத்து ஆண்டுவந்த சோழர் குலக் காவலர்கள், தங்கள் நாடு தந்த பெருநிதியை ஈட்டி வைத்திருந்த குடந்தை மாநகரைச் சூழ அமைத்திருந்த அரிய காவற் சிறப்பும், தமிழகத்தின் பேரரசுகளுக்கு எவ்வகையிலும் குறைவுறாத வகையில், அவ்வரசுகளை அடுத்து அரசமைத்து வாழ்ந்திருந்த வேளிர்குலக் குறுநில மன்னர்கள் தங்கள் செல்வத்தைக் குவித்து வைத்திருந்த கொண்கான நாட்டுப் பாழி நகரைச் சூழ அமைத்திருந்த அரிய காவற் சிறப்பும் புலவர் பாராட்டும் பெருமையுடையவாயின.

"கொற்றச் சோழர்குடந்தை வைத்த
நாடுதரு நிதியினும் செறிய
அருங்கடிப் படுக்குவன் அறன்இல் யாயே" அகம் : 60

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்..."
—அகம்: 258

என்ற அகநானூற்றுத் தொடர்களைக் காண்க.

தமிழகத்துப் பேரூர்களின் அமைப்பு முறையினைப் பழந் தமிழ் இலக்கியங்களின் கண்கொண்டு நோக்கு வார்க்கு, அவை ஒவ்வொன்றும், அரண் அமைப்பின் இன்றியமையாமையினை உணர்ந்து அமைக்கப் பெற் றுள்ளன என்பது புலனாகும். பேரூர்கள், பெரும்பாலும் பேராற்றங்கரைகளிலேயே தோன்றும் என்பது உலகக் காட்சி உணர்த்தும் உண்மையாகும். ஆறுகள், நாட்டின் வளம் பெருகத் துணைபுரிதலோடு, நல்ல அரணாகவும் அமைதல் அறிந்தே, அக்காலப் பெருமக்கள், பேரூர்களைப்

பேராற்றங்கரைகளில் அமைத்தார்கள். நனிமிகப் பழைய நாகரிகம் உடையவாகிய எகிப்து நாட்டு நகரங்கள் நைல் நதியின் கரையில், மெசபடோமிய நாகரிகத்தை நாட்டிற்கு நல்கிய நகரங்கள் டைகிரஸ், யூப்ரடஸ் ஆற்றங்கரைகளில், திராவிட நாகரிகத்தின் தொன்னிலங்களாகிய மொகஞ்ச தாரோ, அரப்பா நகரங்கள் சிந்து நதிக் கரையில், உலகம் புகழ் இலண்டன் மாநகரம் தேம்ஸ் நதிக்கரையில், உலகப் பழம் பெரும் பேரூர்களாம் இவற்றைப் போலவே, சேரநாட்டுத் தலைநகராம் கருவூர் பொருநையாற்றங் கரையிலும், சோணாட்டுத் தலை நகர்களாம் உறையூரும் புகாரும் காவிரிக் கரையிலும், பாண்டி நாட்டுத் தலை நகராம் மதுரை வைகைக் கரையிலும், பல்லவப் பேரரசின் அரசிருக்கையாம் காஞ்சி மாநகர் பாலாற்றங்கரையிலும் அமைந்திருத்தல் அறிக.

ஒரு நாட்டையும், அந்நாட்டின் தலைநகரையும் சூழ, நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்ற அரண்கள் நான்கும் இயற்கையாகவே அமைந்திருப்பது சாலவும் நன்று என்பதே பழந்தமிழ்ப் பெரியார்கள் கண்ட அரண் அமைப்பு முறையாகும். "மணி நீரும் மண்ணும், மலையும் அணிநிழல் காடும் உடையது அரண்" என்ற வள்ளுவர் வாய்மொழியினைக் காண்க. "கான் அரணும் மலை அரணும், கடல் அரணும் சூழ்கிடந்த கலிங்க பூமி" என அவ்வியற்கை யரண்களே எடுத்துப் பாராட்டப் பெறுதலும் காண்க. இவ்வரண் அமைப்பு முறையினைக் கருத்தில் கொண்டு எளிதில் கடந்து செல்லலாகாவாறு, எக் காலத்தும் கரை புரண்டு ஓடும் வெள்ளம் உடையவாகிய பேராற்றங் கரைகளிலேயே தங்கள் தலைநகர்களைக் கண்ட தமிழ் நாட்டுப் பேரரசர்கள், அவ்வாறுகள்

ஒவ்வொன்றும், ஓரிடத்தே இரண்டாகப் பிரிந்து சிறிது தூரம் ஓடி மீண்டும் ஒன்று கலந்து ஓட உண்டாகும், திருவரங்கம் போலும் ஆற்றிடைக் குறைகள், எல்லா ஆறுகளிலும் உண்டாதல் இயலாது போவதால், ஆறுகள் நகர்களுக்கு ஒருசார் அரணாகவே அமைதல் கூடும் என்பதையறிந்து, பிற அரண்களையும் பொருந்தும் வகையால் அமைத்து வைத்தனர். அவ்வாறு அமைக்க முனைந்த அவர்கள், அந்நால்வகை அரண்களுள், மலையரண் இயற்கையாக அமைதல் இயலுமேயல்லது, அதை விடுத்து ஏனைய அரண்களைத் தாமாகவே படைத்துக் கொண்டனர். நகரத்தின் நாற்புறங்களிலும் காடுகளை வளர்த்தனர். காட்டரணை அடுத்து, ஆழ்ந்து அகன்ற அகழிகளைத் தோண்டினர். நகரைக் கைப்பற்றும் கருத்தோடு வந்து வளைத்துக் கொள்ளும் பகைப் படை, காவற் காட்டை அழிப்பதிலும் அகழியைத் தூர்ப்பதிலும் முனையுமாதலின் அவ்வழிவு நிலை இடம் பெறாவாறு, அப்பகைப் படையைத் தலை நகர்ப் புறத்திலேயே போராடி அழிக்க வேண்டும் என்பதே போர் முறையின் தலையாய நெறியாகும் என்பதையுணர்ந்து, புறக்காவல் வீரர்கள் இருந்து பணிபுரியத் தக்க பெருநிலப் பரப்பினை, அகழிக்கும் மதிலுக்கும் இடையே அமைத்தார்கள். புறநகர் என்னும் பெயருடையதாகிய அப்பெரு நிலப் பரப்பினை அடுத்து, வானளாவ உயர்ந்து, மலையெனக் காட்சி அளிக்கும் மதில்களை எழுப்பினார்கள். அம் மதில் அகத்தே, அரசன் பெருங்கோயில் முதலாம் மாட மாளிகைகள் நிறைந்த அந்நகரை அமைத்தார்கள். கௌந்தி அடிகளோடு மதுரைக்குச் சென்ற கோவலனும் கண்ணகியும் வையையாற்றைப் புணையால் கடந்து,

தென்கரை அடைந்து, காவற் காட்டையும் அகழியினையும் கடந்து புறநகர் புகுந்து தங்கினார்கள் எனச் சிலப்பதிகாரம் அளிக்கும் செய்தியால், ஆறு, ஆற்றைக் கடந்தால் காவற் காடு, காவற்காட்டைக் கடந்தால் அகழி, அகழியைக் கடந்தால் புறநகர், புறநகரைக் கடந்தால் மதில், மதிலைக் கடந்தால் அகநகர் என்பதே பழந்தமிழ்ப் பேரூர்களின் அமைப்பு முறையாகும் என்பது உறுதியாதல் அறிக.

"மாதவத் தாட்டி யொடு மரப்புணை போகித்
தேமலர் நறும்பொழில் தென்கரை எய்தி
வானவர் உறையும் மதுரை வலம் கொளத்
தான்நனி பெரிதும் தகவுடைத்து என்றாங்கு
அருமிளை உடுத்த அகழி சூழ் போகி....
போர் உழந்து எடுத்த ஆர்எயில் நெடுங்கொடி
வாரல் என்பன போல் மறித்துக் கை காட்டப்...
புறஞ்சிறை மூதூர் புக்கனர் புரிந்து..."

– சிலம்பு : 13:179–196

மரம் செடி கொடிகள் மண்டியும், ஒன்றோடொன்று பின்னிக் கொண்டும் கிடப்பதால், மக்களும் மாவும் எளிதில் கடந்து செல்லாவாறு இடையூறு பயக்கும் பெரு மரக் காடுகளை ஊடறுத்துக் கொண்டு போதல் படையாளர்க்கு அறவே இயலாது என்பதை அறிந்த அக்கால அரசர்கள், தங்கள் நாட்டையும் தலைநகரையும் சூழ, இயற்கைப் பெருங்காடுகள் இடம் பெறுவதைப் பெரிதும் விரும்பினார்கள். நாடு வளரக் காடு அழிந்து போன பிற்காலத்தில், காட்டரண்களை இயல்பாகப் பெறுதல் இயலாதாகவே, தம் அரண்களைச் சூழச் செயற்கைக் காடுகளை வளர்த்தார்கள். நொச்சி மரங்களையே பெருமளவில் கொண்டனவாய், உறந்தை என வழங்கப் பெறும் உறையூரைச் சூழ அமைந்திருந்த

காவற்காட்டின் கடத்தற்கு அருமையினை "நொச்சி வேலித் தித்தன் உறந்தைக் கல் முதிர் புறங்காட்டன்ன பல்முட்டு" (அகம்: 122) எனப் பரணர் பாராட்டியுள்ளமை உணர்க. இவ்வாறு காவற்காடும் ஓர் அரணாகி விடவே, படையெடுத்து வரும் பகையரசர், அக்காவற்காட்டினை அழிப்பதனையே முதற்கண் மேற்கொண்டனர். கருவூர்க் கோட்டையை வளைத்துக் கொண்ட குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், அக்கோட்டையின் காவற் காட்டினை அழிக்கவும் அக்கோட்டைக் காவலன், அதைத் தடுக்கவும் நினைக்காது, அரணகத்திலேயே அடங்கி யிருந்தமை கண்டு, 'வேந்தே! தம் காவற் காட்டின் அழிவு கண்டும் வாளாகிடப்பது வேந்தர்க்கு அழகன்று" என்ற ஆலத்தூர்க் கிழார் அறிவுரை, காவற் காட்டின் அருமை பெருமைகளை அறிவிப்பது அறிக:

"காவு தொறும்
கடிமரம் தடியும் ஓசை தன்னூர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப
ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு, ஈங்குநின்
சிலைத்தார் முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தக வுடைத்தே!"

–புறம்: 36.

பெருநீர்ப் பரப்பினைக் கடக்கும் துணையாகப் புணையும் தெப்பமும் போல்வன அல்லது பிற எதுவும் காணாப் பழங்காலத்தில் நீர் அரண், நனிமிகச் சிறந்த அரணாகக் கருதப்பட்டது. நீர் அரண், நில அரண், மலையரண், காடு அரண் என்ற நால்வகை அரண்களுள், வள்ளுவர் நீர் அரணையே முதற்கண் கூறியுள்ளார் எனினும், பெருங்கடலும், பேராறும் போலும் அரண்கள் எல்லா நாடுகளுக்கும் எல்லா நகரங்களுக்கும் அமைதல்

இயலாது. ஆகவே, அவை பெறமாட்டா இடங்களில் அரசர்கள் தங்கள் அரண்களைச் சூழ, அந்த அகழிகளைத் தோண்டி நீர் நிரப்பி வைத்தனர். ஒரு மூச்சில் நீந்திக் கடக்க மாட்டா அகலமும், கால் நிலம் தட்டா ஆழமும், கால் இட்டாரைக் கௌவி ஈர்த்துக் கொள்ளும் முதலைகள் வாழும் கொடுமையும் உடையவாக, அவ்வகழியை ஆக்கி வைத்திருந்தார்கள். "மண் உற ஆழ்ந்த மணி நீர்க்கிடங்கு" (மதுரைக் காஞ்சி: 351), "இரை தேர்ந்து இருவரும் கொடுந்தாள் முதலையொடு திரைப்படக்குழிந்த கல் அகழ் கிடங்கு" (மலைபடுகடாம்: 90-91) என அவ்வகழிகள் புலவர் பாராட்டும் பெருமையுடைய வாதலும் காண்க.

அகழிக்கும் மதிலுக்கும் இடைப்பட்ட இடமான புற நகர், அரண் மதிலையும், அகழியையும், காவற் காட்டையும் காத்து நிற்கும் காவற்படை பாசறை கொண்டிருக்கும் இடமாகும். பகைவர் படை, காவற் காட்டினை அழிப்பதையும், அகழியைத் தூர்ப்பதையும் தடுத்து நிறுத்துவது அரணகத்தில் உள்ள படையால் ஆகாது ஆதலின், அப்பணி, புற நகரில் பாடி கொண்டிருக்கும் படையாளர்பால் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

காவற் படையின் வாழிடமாகிய புறநகர், பிறிதொரு வகையாலும் அரணுக்குத் துணை புரிந்தது. அகநகரில் பெய்யும் மழை நீரும் அகநகரத்து மக்கள் தத்தம் மனைகளில் கழித்துவிடும் கழிநீரும் அகழியைச் சென்று அடைவதன் முன்னர்ப் புறநகர் நிலங்களுக்கு வேண்டும் நீர் வளமாக நிறைந்து பயன் தருவதால், அப்புறநகர், அரணகத்து மக்களுக்கு வேண்டும் உணவுப் பொருள் களையும் தந்து உதவிற்று. ஓர் அரணையோ ஒரு நாட்டையோ கைப்பற்றக் கருதும் பகையரசர்கள் தம்

கருத்தினை நிறைவேற்றிக் கொள்ள மேற்கொள்ளும் பல்வேறு செயல் முறைகளுள், அவ்வரணுக்கு உரியாரும், அந்நாட்டிற்கு உரியாரும் உணவும் உண்ணும் நீரும் பெறமாட்டாது கிடந்து வருந்தி வருந்தி, இறுதியில் தம் உயிரினைக் காப்பாற்றிக் கொள்வான் வேண்டித் தாமே வந்து பணியும் வகையில், அவ்வரணையும், நாட்டையும் வளைத்துக் கொண்டு முற்றி நிற்கும் முறையே தலையாய போர் முறையாகும்.

தனக்குரிய ஆவூர்க் கோட்டையினைத் தான் அகத்தே யிருக்குங்காலை, நலங்கிள்ளி வளைத்து முற்றிக் கொண்டானாகவும், அம்முற்றுகை நெடிது நாள்நீண்டு செல்லவும், புறம்போந்து போரிட நினையாது வாளா கிடந்த நெடுங்கிள்ளிபால் சென்று, "வேந்தே! உண்ணும் உணவும், குடிக்கும் நீரும் கிடைக்கப் பெறாமல் யானைகள் வருந்துகின்றன; பால் கிடைக்கப் பெறாமல் பச்சிளங் குழவிகள் கதறிக் கதறி அழுகின்றன. மகளிர் மலர் சூடும் மகிழ்ச்சியும் இலராய்க் கூந்தலை வறிதே வாரி முடிக் கின்றனர். வளமனை வாழ்வார் மனைகள் வளம் இழந்து வறுமையுற்றமை கண்டு வாய்விட்டுப் புலம்புகின்றனர். இவற்றை யெல்லாம் கண்டும் கேட்டும், அரணகத்தே வாளா அடங்கிக் கிடத்தல் அறமும் அன்று. ஆண்மையும் அன்று!" என்பன போல்வனவற்றை இடித்துக் கூறிய கோவூர்க் கிழார் கூற்றில், அப்போர் முறையின் இன்றி யமையாமை புலப்படுவது காண்க.

"இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன் வெளில் வருந்தஒற்றி
நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்து

அலமரல் யானை உருமென முழங்கவும்,
பாலில் குழவி அலறவும், மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்இல் இனைகூஉக் கேட்பவும்
இன்னாது அம்ம! ஈங்கு இனிது இருத்தல்...
திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்து இது காணுங்காலே."

—புறம்: 44.

இவ்வாறு நனிமிகப் பெரிய நாற்படையால், நெடிது நாள் வளைக்கப்பட்ட போதும், அழிவுற்றுப் போகாது நின்று நிலைபெற வல்ல உரத்தினை ஓர் அரணுக்கும், ஒரு நாட்டிற்கும் உதவுவது, அவ்வரணகத்தும், அந்நாட்ட கத்தும் இருக்கும் விளைநிலங்கள் வழங்கும் உணவுச் செல்வங்களே ஆகும். முற்றுகை எத்துணைக் காலம் நீடிப்பினும், அகத்துள்ளார்க்கு உணவுக் குறைபாடு நேரா வாறு காக்க வல்ல உணவு வளம் படைத்த நாட்டையோ அரணையோ பகையரசர் கைப்பற்றிக் கொள்வது இயலாது.

முடியுடை மூவேந்தர் என்ற பெருமைக்குரிய பேரரசர்களாம் தமக்கு இல்லாப் பெரும்புகழ், பறம்பு மலை நாடாளும் குறுநிலத் தலைவனாம் வள்ளல் பாரிக்கு வருவதா என்ற காழ்ப்புணர்வால் அவனைக் கொன்று அழிக்கத் துணிந்த சேரனும், சோழனும், பாண்டியனும் பறம்பரண் ஒரு சிற்றரண்; அதனகத்து வாழ்வார் புறத்தே யிருந்து உணவு வந்தால் அல்லது உயிர் வாழார்; ஆகவே அவ்வுணவு அரணகத்துட் புகாவாறு அவ்வரணை வளைத்துக் கொண்டால், வள்ளல் பாரிபணிந்து விடுவன் என்று எண்ணித், தம் நாற்படை கொண்டு அப்பறம்பு

மலையை வளைத்துக் கொண்ட போது, பாரியின் ஆருயிர் நண்பராம் கபிலர், அம்மூவேந்தர்களைப் பார்த்து, "வேந்தர் பெருமக்களே! பறம்பரணைக் கைப்பற்றுவது நீங்கள் நினைப்பது போல் அவ்வளவு எளிமையுடையதன்று. அரணகத்து உள்ளார், எத்தனை ஆண்டுகள் ஆயினும் பணிந்து விடுவாரல்லர்; தன்னகத்தே வாழும் மக்கள் வறுமையுற்றுத் தன்னம்பிக்கை இழந்து விடுமளவு வளக் குறைபாடு உடையதன்று பறம்பரண். உழைக்க வேண்டாதே பெறக்கூடிய உணவுப் பொருள்கள் பறம்பரணில் மிகப் பலஉள. நெல் விளையும் மூங்கிற் காடுகள் ஆண்டு நிறைய உண்டு; அம்மூங்கில் தரும் அரிசியே அவர்களுக்கு ஆண்டு முழுவதும் வரும். பறம்பு மலையெங்கும் பலா மரங்களே காட்சியளிக்கும்; அப்பலா ஒவ்வொன்றும் எண்ணிலாப் பழங்களை அளிக்கும்; மண்ணைத் தோண்டினால், தோண்டுமிடமெங்கும் வள்ளிக்கிழங்குகளே வெளிப்படும்; காணுமிடமெங்கும் காட்சியளிக்கும் தேன் கூடுகளிலிருந்து தேன் தானாகவே வெளிப்பட்டு வழியும். இதனால் உள்ளிருப்போர்க்கு உணவுக் குறைபாடே உண்டாகாது. ஆகவே, வேந்தர்காள்! காணும் மரந்தொறும் களிறுகளைக் கட்டி வைத்திருந் தாலும், போர்க்களம் எங்கும் நெடிய பெரிய தேர்களையே நிறுத்தி வைத்திருந்தாலும் பறம்புக் கோட்டையைப் பணிய வைப்பது இயலாது; போரிட்டுப் பெறுவது உங்களாலும் இயலாது; உங்கள் வாள் வலிக்கு அஞ்சிப், பாரியும் பறம்பரணைப் பணிய வைத்து விடான்!" என்று கூறிய அறிவுரையில், புறநகர் அளிக்கும் வளம், அரண்காப்பிற்கு எத்துணை வலிவுடைத்து என்ற உண்மை வெளிப்பட்டு நிற்றல் உணர்க.

"அளிதோ தானே பாரியது பறம்பே!
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே;
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே;
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே;
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே;
நான்கே, அணிநிற ஓரிபாய்தலின் மீதழிந்து
திணிநெடும் குன்றம் தேன்சொரி யும்மே;
வான்கண் அற்று அவன் மலையே; வானத்து
மீன்கண் அற்று அதன்சுனையே, ஆங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்,
தாளிற் கொள்ளலிர்; வாளில் தாரலன்!"

—புறம்: 109.

காவற் காட்டை அழித்து, அகழியைத் தூர்த்து, அவற்றைக் காத்து நின்ற புறநகர் வீரர்களை வென்று நிற்கும் பகைவர் படையால் பாழுற்றுப் போகாவாறு நகரத்தையும், நல்ல அரணையும் காத்து நிற்பது மதில் ஒன்றே. அதனால் அம்மதில் பகைவர் படையால் எளிதில் அழிவுறாது நெடிது நாள் நின்று தாங்கவல்ல வன்மையுடையதாதல் வேண்டும் என்பதையும் தமிழர்கள் உணர்ந்திருந்தார்கள். பகைவர் படை, மதிலை ஏணியிட்டு ஏறியும், அடியைத் தகர்த்தும், அறவே இடித்தும் அரணுட் புக முற்படுவர். அதனால், மதில், ஏணியிட்டும் ஏறமாட்டா உயர்வும், அகழ்ந்து கடக்க லாகா அடி அகலமும், இடித்துத் தகர்க்கலாகாத் திண்மையும் உடையதாதல் வேண்டும். அகத்தோர் ஊக்கமும் உள்ளுரவும் உருக்குலைந்து போகும் வகையில், அரண் முற்றுகை நீண்டு செல்லும் வகையில், புறத்தே பகைவர் படையை விட்டு வைப்பது போர் முறையாகாது. ஆகவே, புறப்படையை அகத்திருந்தவாறே சிறுகச் சிறுக

அழிப்பதையும் அகப்படை மேற்கொள்ளுதல் வேண்டும். அதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் புறத்தே பாடி கொண்டிருக்கும் பகைப் படைக் கண்ணில் படாது, மதிலின் உச்சிக்கண் ஒளிந்திருந்து அம்பேவிப் போர் புரிதற்கு ஏற்ப, அம்மதில் தலையகலம் உடையதாதலும் வேண்டும் என்பன போலும் அரண் அமைப்பு முறைகளையும் உணர்ந்து அரண் அமைத்து வாழ்ந்தார்கள். "உயர்வு, அகலம், திண்மை, அருமை இந்நான்கின் அமைவு அரண் என்று உரைக்கும் நூல்" என்பது வள்ளுவர் வகுத்த அரண் அமைப்பு விதி.

மதிலின் இத்தகைய அமைப்பு முறையினையும் மதியாது, பகைவர் படை, அம்மதில் அழிவில் வெற்றி காண்பதும் ஒரோ வழி நிகழ்ந்து விடும் என்பதையும் பழந்தமிழ்ப் பேரரசர்கள் உணர்ந்திருந்தமையால், அது மேற்கொள்ளும் பகைவர் படையை அந்நிலையிலும் அழித்தொழிக்க வல்ல ஆற்றல் அம்மதிலுக்கு இருத்தல் வேண்டும் என்பதை உணர்ந்து ஆட்கள் இயக்க இயங்காது தாமே இயங்கிப் பணிபுரியவல்ல அரிய பொறிப்படைகள் பலவற்றை அம்மதிலெங்கும் அமைத்து இருந்தார்கள்.

தானே வளைந்து அம்பேவும் வில்; குரங்குருவில் இருந்து குறுகுவாரைக் கடித்துக் கொல்லும் பொறி; கல் உமிழ் கவண்; உருகக் காய்ந்து சேர்ந்தார்மீது சிதறித் துன்புறுத்தும் நெய் கொதிகலன்; உருகிய செம்பைப் பகைப் படைமீது ஊற்றும் செம்புருக்கு உலை; இரும்பை உருகக் காய்ச்சி உட்புக முனைவார் உடல்மீது ஊற்ற ஏற்று நிற்கும் இரும்புருக்கு உலை. கவணிற்கு வேண்டும் கற்களைத் தாமே இடுவதும் தேடுவதும் செய்யும் கல்இடு கூடை; தூண்டில்போல் தோன்றி, மதிலை அணுகுவாரைப் பற்றி

வலிக்கும் பொறி; அதில் உச்சி அடைந்தாரைக் கழுத்தில் மாட்டி இறுக்கி உயிர் போக்கும் இடுக்கிப் பொறி, ஆண்டலைப் புள் வடியில் இருந்து பகைவரைக் கண்ட அளவே பறந்து போய் அவர் தலையைக் கொத்திப் பறிக்கும் பொறி; மதில்மீது இவர்வாரை மறித்து மறித்துத் தள்ளும் இருப்புக்கவை; கழுக்கோல்; அம்புக்கட்டு; அம்பு அறாத்தூணிகள்; மதிலைப் பற்றுவார் கையைக் குத்திக் குத்தித் துன்புறுத்தும் ஊசிப்பொறி; மீன் கொத்திப் பறவை உருவில் இருந்து மதில் உச்சியை அண்ணாந்து நோக்குவார் கண்களைக் குத்திப் பறிக்கும் சிச்சிலிப் பொறி; பகைவர் உடலைக் குத்திக் கிழிக்கும் பன்றிப் பொறி; பகைவர் தலைகளைத் தாக்கித் தகர்த்து உயிர் போக்கும் தடிப்பொறி; கோல்; குந்தம்; வேல்; அரண் மதிலில் தமிழர்கள் அமைத்திருந்த அரியபெரிய பொறிப் படைகளுள் சிலம்பு வாயிலாக அறியக் கிடப்பன இவை.

"மிளையும் கிடங்கும் வளைவில் பொறியும்
கருவிரல் ஊகமும் கல்உமிழ் கவணும்;
பரிவுறு வெந்நெய்யும் பாகுஅடு குழிசியும்
காய்பொன் உலையும் கல்இடு கூடையும்
தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை அடுப்பும்
சுவையும், கழுவும், புதையும், புழையும்,
ஐயவித் துலாமும், கைபெயர் ஊசியும்,
சென்று எறி சிரலும், பன்றியும் பணையும்
எழுவும், சீப்பும், முழுவிறல் கணையமும்,
கோலும், குந்தமும், வேலும் பிறவும்
ஞாயிலும் சிறந்து..."

—சிலம்பு: 15:207–217

மதில் அமைப்பு இத்தகையதாக, அரணுட் புக அம்மதிலின் இடையிடையே அமைத்திருந்த வாயில்களும்,

அவ் வாயில்களுக்குப் பொருத்தி யிருந்த கதவுகளும், தமிழர்களின் போர் அறிவின் பெருமையினைப் பறை சாற்றுவனவாய்த் திகழ்ந்தன. நாற்படையுள் நனிசிறந்து விளங்கும் தேர்ப் படை, தன் மீது பறக்கும் வெற்றிக் கொடியும் விரித்த வெண் கொற்றக் குடையும் தாழாதே உட்புக வல்ல உயர்வும் உருவகமும் உடையவாக அமைக்கப்பட்ட அவ்வாயில்கள், பகைநாட்டு ஒற்றர்களும், பகைவர்களும் தம் உருவு கரந்தும் உட்புகுந்து விடாதபடி விழிப்போடிருந்து காக்க வல்ல யவன வீரர்களின் காவலுக்கு உட்பட்டிருந்தன. "அரசர்காள்! அமர் புரிந்து இவ்வரணைக் கைப்பற்றுவது ஆகாது: ஆகவே அவ் வெண்ணம் கைவிட்டு அகன்று வாழுங்கள்; அணுகுவீரேல், நீங்கள் ஆற்றல் இழப்பது உறுதி; அந்நிலை உண்டாகிவிடின் உம்மை வாளாப் போகவிடுவே மல்லேம்; தோற்ற உங்கள் காலில் வீரக்கழலைக் களைந்து, விளையாடும் மகளிர்க் குரிய சிலம்பைப் பூட்டுவோம். மார்புக் கவசத்தை மாற்றித் தழையாடை சூட்டுவோம்; கையில் உள்ள வாளையும் வேலையும் அகற்றி, ஆடி மகிழுங்கள் எனப் பந்தும் பாவையும் திணித்து உம்மை மகளிராக்கி மானம் இழக்கப் பண்ணுவோம்!" எனக் கூறாமல் கூறி, அரணகத்து ஆற்றல் மறவரின் ஆண்மையைப் பறைசாற்றும், தண்டையும், தழை ஆடையும், பந்தும், பாவையும் அவ்வாயில்கள்தோறும் தொங்கவிடப்பட்டிருக்கும். "வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப் பொருநர்த் தேய்த்த போர் அறா வாயில்" (திருமுருகாற்றுப்படை: 68–69). "செம்பொறிச் சிலம்பொடு அணித்தழை தூங்கும், எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில்" (பதிற்றுப் பத்து: 53: 6–7) என்ற தொடர்களைக் காண்க.

இவ்வாயில்களை அடைக்கப் பயன்படும் கதவுகள், பகைப் படையைச் சேர்ந்த யானைகள் ஒருசேர வந்து தாக்கினாலும் தகர்ந்து போகாத்திண்மை யுடையவாய்த் திகழ்ந்தன. பலகைகள் ஒன்றோடொன்று நன்கு பொருத்தப் பெற்றன. தாழ்கள் தனியே செய்து, பொருத்தப் பெறாமல், கதவுகள் அமைக்கும் போது, அக்கதவுகளோடே கடைந்து அமைக்கப் பெற்றன. மோதி அழிக்க முனையும் பகைப் படையின் மத யானைகளின் மத்தகத்தைப் புண்ணாக்க வல்ல பெரியவும் சிறியவுமாய ஆணிகள் பல, அக் கதவுகளில் வரிசை வரிசையாக, அழுத்தப் பெற்றிருந்தன. அம் மட்டோ! "எம் அரசனோடு பகை கொண்டு வாழ்ந்த மாற்றரசர் பட்ட பாட்டினைப் பாருங்கள்!" எனப் பகையரசர்க்கு அச்சம் ஊட்டும் வகையில் அரணுக்கு உரிய அரசர்கள் போரில் பெற்ற வெற்றிப் பொருள்களை, வாயிற் கதவுகளில் அழுத்தி வைப்பதும் மேற்கொண்டிருந்தார்கள். சேரநாட்டுத் தொண்டி நகரத்து வாயிற் கதவில், அச்சேரர் பகைவனாம் மூவன் என்பான் பற்கள் பொறித்து வைத்திருந்த நிகழ்ச்சியையும், சோணாட்டு வெண்மணி வாயில் என்னும் நகரத்து வாயிற் கதவில், அந்நகரத்துக்கு உரியோனாகிய மத்தி என்பானின் பகைவனாகிய எழினி என்பானின் பற்கள் பொறித்து வைத்திருந்த நிகழ்ச்சி யையும் பழந்தமிழ் நூல்கள் பாராட்டியுள்ளன.

"மூவன் முழுவலி முள்ளெயிறு அழுத்திய கதவின்
கானலம் தொண்டி."

—நற்றிணை: 18. 2–4.

"கல்லா எழினி பல்லெறிந்து அழுத்திய
வன்கட் கதவின் வெண்மணி வாயில்"

—அகம்: 211: 13–14.

நாடு நகரங்களின் காப்பு நிலை, இவ்வாறு அரணைப் பொறுத்தே அமைந்திருந்தமையால், அரணுக்கு உரியவன் அதனைக் காப்பதிலும், அவன் பகைவன் அதனை அழிப்பதிலும் தம் ஆற்றல் அனைத்தையும் காட்டுவாரா யினர். அதனால், அரண் காக்கும் போரும், அதன் அழிவுப் போரும் அரண் அமைந்த இடத்தில் நிகழ்வவாயின. மக்களையும் தம்பால் ஈர்த்துப் பொறாமை கொள்ளச் செய்யுமளவு, பொன்னும் நவமணியும் போலும் அரும் பொருள்கள் பெருமளவில் குவிந்து கிடப்பது பேரூர்களிலேயே ஆம் ஆதலாலும், அப்பொருள்களைப் பகைநாட்டவர் கொள்ளை கொண்டு போகாவாறு அரண் அமைத்துக் காப்பதும் ஆண்டே நிகழும் ஆதலாலும், அரண் அழிக்க முனைவதும், அது காக்க முனைவதுமாகிய போர்கள் நிகழ்வது ஆண்டே ஆதலாலும், பேரூர்கள், தொடக்க நிலையில் தோன்றி வளர்ந்தது, ஆற்றுப் பாய்ச்சலால் வளங்கொழிக்கும் மருத நிலப் பகுதியில் ஆதலாலும், நகரங்கள் ஆண்டு இடம் பெறுவதே உலகெங்கும் காணலாம் நிகழ்ச்சியாகும் ஆதலாலும், அரண் கருதி நிகழும் போர்கள் அம்மருத நிலத்து நிகழ்ச்சியாய் அந்நிலத்து மக்களின் புறவொழுக்கமாயின. ஆகவே, ஆசிரியர் தொல்காப்பியனார் "உழிஞைதானே மருதத்துப் புறனே" என்றார்.

"பனிவார் சிமையக் கானம் போகி
அகநாடு புக்கு அவர் அருப்பம் வெளவி"

—மதுரைக் காஞ்சி: 148–49

"பிணங்குகதிர்க் கழனி நாப்பண் ஏமுற்று
உணங்குகலன் ஆழியின் தோன்றும்
ஓர் எயில்"

—புறம்: 388.

எனப், புலவர்கள் அரண்களை மருத நிலத்து வைத்தே பாராட்டியிருப்பது காண்க.

அரண் கருதி நிகழும் போர்களை விளக்கும் உழிஞைத் திணை, மருதம் என்ற அகத்திணைக்குப் புறன் ஆகியதன் காரணத்தைக் கூறவந்த ஆசிரியர் இளம்பூரணர், "மருதத்திற்கு இது புறனாயவாறு என்னையெனின், வஞ்சியிற் சென்ற வேந்தனொடு போர் செய்தல் ஆற்றாது உடைந்து, மாற்று வேந்தன் அரண் வலியாகப் போர் செய்யுமாகலானும், அவர் நாட்டகத்து ஆகலானும், அவ்வழிப் பொருவார்க்கு விடியப் பொழுது காலமாக லானும் அதற்கு இது புறனாயிற்று," எனக்கூறிய விளக்கமும், ஆசிரியர் நச்சினார்க்கினியர், "இருபெருவேந்தர் தம்முள் மாறுகொண்ட வழி எதிர்செலற்கு ஆற்றாது போய் மதிலகத்து இருந்த வேந்தன் மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்தது ஆதலானும், அம்மதிலை முற்றுவோனும் ஆந்நிலந்து இருத்தலானும், ஒருவன் வாயில் வேண்டத் திறவாது அடைத்திருத்தல் ஒப்புமையானும், உள்ளிருந்த வனும் புறப்பட விரும்புதலானும், மருதம்போல் இதற்கும் பெரும் பொழுது வரைவின்மையானும், சிறுபொழுதினும் விடியற் காலமே போர் செய்தற்குக் காலம் ஆதலானும், உழிஞை மருதத்திற்குப் புறனாயிற்று!" எனக் கூறிய விளக்கமும், அரண் நாகரிகம் மருத நிலத்து நாகரிகமாம் என்ற கொள்கைக்கு அரண் செய்து நிற்றல் அறிக.

தங்கள் நாட்டையும் நகரையும், தாங்கள் வாழும் இடத்தையும் பகைவரிடமிருந்து காக்க வேண்டும் என்ற எண்ணம் மக்களுக்கு எழுந்தது நனி மிகப் பழைய காலத்தில். ஆனால், அவ்வுணர்வு உண்டாகிய அந்தக் காலத்திலேயே, அவர்கள் அத்தகைய அரண்களைத்

தாமாகவே ஆக்கும் முறையினை அறிந்து கொண்டா ரல்லர். அதனால், அரண்களைத் தாமாகவே ஆக்கிக் கொள்வதற்கு மாறாக, அரண்கள் இயற்கையாகவே அமைந்திருக்கும் இடந்தேடித் தங்கள் வாழிடங்களை வகுத்துக் கொண்டார்கள். ஆனால், காலம் செல்லச் செல்ல அரண் உள்ள இடங்களில், தங்கள் வாழிடங்களை வகுத்துக் கொள்வதால், அரண் தேடிக் கொண்டோம் என்ற ஒரு அமைதி தவிர்த்து, தங்கள் வாழ்க்கைக்காம் வளங்களைத் தேடிக் கொள்வதில் எண்ணிலா இடையூறுகள் இடம் பெறக் கண்டனர். அதனால், வாழ்வை வளர்க்கும் இடங்களில் வாழிடங்களை அமைத்துக் கொண்டு, அத்தகைய இடங்களுக்காம் அரண்களைத் தாமாகவே ஆக்கிக் கொள்ளத் தலைப்பட்டனர். இவ்வாறு, அரண் அமைந்த இடம் தேடி வருவதற்குப் பதிலாக, தாமிருக்கும் இடத்தையே அரணுடையதாக ஆக்க முனைந்த அந்நிலையிலும், கல்லும் இட்டிகையும் கொண்டு மதில் எழுப்பும் அறிவு வாய்க்கப் பெற்றாரல்லர். அதனால், அக்காலை அவர்கள் அமைத்த அரண்களெல்லாம், பகைவரோ, பகைவரின் நாற்படைகளோ எளிதில் ஊடறுத்துப் போகலாகா மரம் செடி கொடிகளைத், தம் வாழிடங்களைச் சுற்றி வளர்ப்பதையே அரணாகக் கொண்டனர். காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிக னார் மகனார் நப்புதனார் தாம் பாடிய முல்லைப் பாட்டினுள், காட்டகத்தே, முள்வேலி மரங்களையே மதிலாகக்கொண்டு அமைக்கப் பெற்ற பாடி வீட்டினையே பாராட்டியிருப்பதும், "காட்ட, இடு முட் புரிசை ஏமுற வளைஇப் படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" (முல்லைப் பாட்டு: 26– 28), அதியமான் நெடுமானஞ்சியின் குதிரைப்

படையின் எழுச்சியினைக் கண்ட அளவே, அவன் பகைவர் தம் அரண் வாயிலைக் கவைத்த முட் செடிகளைக் கொண்டு அடைத்து விடுவர் என ஔவையார் கூறியிருப்பதும் – "இன நன்மாச் செலக் கண்டு அவர்கவை முள்ளின் புழை அடைப்பவும்" (புறம்: 98) நம் கருத்திற்கு அரணாதல் அறிக.

காவற்காடு அரண் உறுப்புக்களில் சிறந்த ஓர் உறுப்பாகக் கருதப்பட்ட நிலை இக்காலத்தில்தான் இடம் பெற்றது. அவ்வாறு அரணாகக் காடுகளை வளர்க்கத் தலைப்பட்ட நிலையில், அக்காடுகளில் எந்த மரங்களை வேண்டுமாயினும் வளர்ப்பது என்பதை விடுத்துத், தம் கிளைகள் எளிதில் விடுபடாவாறு ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு தம்மை ஊடறுத்துச் செல்ல முனைவார்க்கு இடையூறு பயக்க வல்ல மரங்களை மட்டுமே தேர்ந்தெடுத்து வளர்ப்பாராயினர். அவ்வகை மரங்களுள் நொச்சி மரம் தலை சிறந்து விளங்கிற்று. வேலிகளில் வளர்க்கப்படும் மரங்களில் நொச்சியே தலை சிறந்து இருப்பது இக்காலத்திலும் கண்கூடாம். சோழர் தலைநகர்களுள் ஒன்றாகிய உறந்தை நகரைச் சூழ, அரணாக அமைந்து காத்தது நொச்சி மரமே என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.

"நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல் முதிர் புறங் காட்டன்ன
பல் முட்டின்று."

அகம்: 122.

இவ்வாறு அரணாக நின்று காப்பதில் நொச்சி தலைசிறந்து விளங்கினமையால் அரண் காக்கும் ஒழுக்கம், நொச்சி ஒழுக்கம் எனப் பெயர் பெற்றதுபோலும்! அல்லது அரண் காக்கும் தொழில் நொச்சி ஒழுக்கம் எனப்பட்டு,

அரணாக நின்று காக்கும் அத்தொழிலை அவ்வகை மரங்கள் புரிந்தமையால், அம்மரங்கள் நொச்சி எனப் பெயர் பெற்றிருத்தலும் கூடும். மரப்பெயரால், திணை அப்பெயர் பெற்றதா, திணைப் பெயரால், மரம் அப்பெயர் பெற்றதா என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது என்றாலும், அரண்காக்கும் நிலையில் இரண்டிற்கும் உறவு உளது என்பதில் சிறிதும் ஐயம் இல்லை; ஆகவே, அரண் காக்கும் தொழில் நொச்சி ஒழுக்கம் எனப்படுவதும், அரண் காக்கும் வீரர் நொச்சி அணிந்து செல்வதும் சாலப் பொருந்தும் என்க.

ஆனிரை கவர்தலும் மீட்டலும் ஆகிய இரண்டனுள் மீட்டலே சிறப்புடைய நிகழ்ச்சியாதல் கருதி, அதைப் பாராட்டவே வெட்சித்திணை உருப்பெற்றது என்றாலும், கவர்தல் இல்லாதபோது மீட்டலுக்கு இடம் இல்லையாதலின், மீட்டலைக் கூறவந்த அத்திணையில், அது கூறப்படுவதன் முன் கவர்தல் நிகழ்ச்சி கூறப் பட்டிருப்பது போலவும், ஒரு நாட்டு எல்லையைக் கைப்பற்றலும் அதை மீட்டலும் ஆகிய இரண்டனுள், மீட்டலே சிறப்புடைய நிகழ்ச்சியாதல் கருதி, அதைப் பாராட்டவே வஞ்சித்திணை உருப் பெற்றது என்றாலும், மண்ணைக் கைப்பற்றல் இல்லாத போது அதை மீட்டலுக்கு இடம் இல்லையாதலின், மண் மீட்சியைக் கூற வந்த அத்திணையில், அது கூறப்படுவதன் முன், மண்ணைக் கைப்பற்றும் நிகழ்ச்சி கூறப்பட்டிருப்பது போலவும், அரணை வளைத்துக் கொள்வதும், அதை மீட்டுக் கொள்வதும் ஆகிய இரண்டனுள், அரண் மீட்சி நிகழ்ச்சியே சிறப்புடையது ஆதலின், அதைப் பாராட்டவே உழிஞைத் திணை உருப் பெற்றது என்றாலும், வளைத்துக் கொள்வது

இல்லாதபோது மீட்சிக்கு இடம் இல்லையாதலின், அரண் மீட்சியைக் கூற வந்த இத்திணையில் அது கூறப்படுவதன் முன், வளைத்துக் கொள்வதும் கூறப்பட்டுள்ளது.

ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்து இதுவே யல்லது, அரணை வளைத்துக் கொள்வது, அதை மீட்டுக் கொள்வது ஆகிய இரு நிகழ்ச்சிகளையும் இருவேறு திணைகளாகக்கொண்டு அவ்விரண்டையுமே பாராட்டு வது அவர் கருத்தன்று; இது முற்றுதல் முன்னர் நிகழப் பின்னர் நிகழும் மீட்டுக் கொள்வதே உழிஞையாம் என்பது விளங்கும் வகையில், “உழிஞைதானே மருதத்துப் புறனே; முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் அனைநெறி மரபிற்று ஆகும்,” எனச் சூத்திரம் செய்து முற்றலை முற்படக் கூறிக் கோடலைப் பிற்படக் கூறிய முறையால் தெளிவுறப் புலனாம். அச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்வதை விடுத்து, “முற்றலும் கோடலும்” என்பது முற்றுவதும் அழிப்பதும் எனப் பொருள்பட்டு, இரு வினைகளும் வந்து வளைத்துக் கொண்ட பகை வேந்தன் செயல்களையே குறிக்கும் எனப் பொருள் கொள்ளும் வகையில் பொருள் கூறியுள்ளார் ஆசிரியர் இளம்பூரணர்.

ஒரு வேந்தனுக்கு உரிய அரணைப் பிறிது ஒரு வேந்தன் முற்றுவதே அறமில் செயலாம் என்றால், முற்றுவதோடு நில்லாது அதை அழித்தும் விடுவது நனி மிகக் கொடிய அறமில் செயலாகும். அத்தகைய நனிமிகக் கொடிய நாகரிகமற்ற அழிவுச் செயலை ஆசிரியர் தொல்காப்பியனார் பாடிப் பாராட்டினார், அதற்கு இலக்கணம் வகுத்தார் என்பது, அவர் பாடவந்த தமிழ் மரபிற்கு அறவே பொருந்தாது. மேலும் “களவின் ஆதந்து ஓம்பல் மேவற்று” எனக் களவாடப்பட்ட ஆக்களை மீட்டுக்

கொண்டு வந்து காத்தலே வெட்சி எனவும், "மண் நசை வேந்தனை வேந்தன் அஞ்சுகத் தலை சென்று அடல் குறித்தன்று" என மண் ஆசை கொண்டு வந்த மன்னனை மண்ணுக்கு உரியான் அழித்து வெற்றி கொள்வதே வஞ்சி எனவும், அழிவுப் போர் புரிவாரை அழித்து அறப் போர் புரிந்தாரைப் பாராட்டுவதே செய்த ஆசிரியர் தொல் காப்பியனார், ஈண்டு மட்டும் அழிவுப் போர் புரிவானையே பாராட்டியுள்ளார் என்பது பொருந்தாது. ஆகவே, முற்றலும் கோடலும் ஆகிய இருவினைகளும், வந்த வேந்தன் என்ற ஒருவன் வினைகள் ஆகா; முற்றல் வந்தவன் வினையாக, கோடல் அரணுக்கு உரியான் வினையாக இருவர்க்கும் உரிய இருவேறு வினைகளே ஆகும் என்க. ஆசிரியர் நச்சினார்க்கினியர், "முற்றலும் கோடலும்" என்பதற்குச், "சென்ற வேந்தன் வளைத்தலும், இருந்த வேந்தன் கைக்கொண்டு காத்தலும்" எனப் பொருள் கொண்டிருப்பதும் காண்க. மேலும் இத்திணையின் விளக்கம் உரைக்கப் பின் வரும் இரு சூத்திரங்களிலும், முற்பகுதிகள் வந்தோன் செயல்களைக் குறிப்பனவாக, பிற்பகுதிகள் அரணுக்கு உரியோன் செயல்களைக் குறிப்பனவாம் என்பது அவ்விரு சூத்திரங்களையும் நுணுகி ஆராய்வார்க்குப் புலனாதலும் அறிக.

ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டதுபோல், இவற்றை அழிவுப் போர்கள் மேற்கொண்டு வந்தார்களை வென்று ஓட்டிய வேந்தர் செயல்களைக் குறிக்கும் மூன்று திணைகளாகக் கோடல் பொருந்துமே யல்லது, பிற்கால ஆசிரியன்மார் கொண்டது போல் ஆக்கப் போர் செய்தார் நிகழ்ச்சிகளைப் போலவே, அழிவுப் போர் நிகழ்ச்சி களையும் விளக்கும் ஆறு திணைகளாகக் கோடல்

பொருந்தாது. தன் ஆண்மையை உலகறியச் செய்ய வேண்டும் என்பதே குறிக்கோளாக வந்தானை வென்று அடக்கும் வேந்தன் செயலை விளக்கும்போது, ஆசிரியர் தொல்காப்பியனார், அவ்விரு நிகழ்ச்சிகளையும் முன்னும் பின்னும் நிகழும் ஒரே தொடர் நிகழ்ச்சியாகக் கொண்டு தும்பை என ஒரு பெயரே சூட்டி, முன்னைய திணைகளைக் கொண்ட முடிவிலேயே அடியொற்றி நின்றுள்ளாராக, பிற்கால இலக்கண ஆசிரியர்கள், முன்னைய திணை களைப் போலவே, ஈண்டும் அவ்விரு நிகழ்ச்சிகளையும் இரு வேறு நிகழ்ச்சிகளாகக் கொண்டு இரு வேறு பெயர் கொடுப்பதே முறையாக, அவ்வாறு கொள்ளாமல், ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டதே போல், அவ்விரு நிகழ்ச்சிகளையும் ஒரு தொடர் நிகழ்ச்சியாகவே கொண்டு, தும்பை என ஒரு பெயரே சூட்டி, முன்னைய முறைகளோடு முரண்பட்டிருப்பது, வெட்சி, வஞ்சி, உழிஞை முதலாயின குறித்து ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்ட முறையும் கூறிய விளக்கங்களுமே இயற்கை யோடு பொருந்தும், பிற்கால ஆசிரியர்கள் கொண்டது பொருந்தாது என்பதைத் தெளிவுற எடுத்துக் காட்டும்.

புறப்பொருள் இலக்கணத்தை விளக்க வந்த பிற்கால ஆசிரியர்கள், ஆனிரை கவர்தலும் மீட்டலும் ஆகிய நிகழ்ச்சிகளை இருவேறு நிகழ்ச்சிகளாகக் கொண்டு, கவர்தலை வெட்சியாகவும், மீட்டலைக் கரந்தையாகவும் கொண்டாலும், ஆசிரியர் தொல்காப்பியனார், அவ்விரு நிகழ்ச்சிகளையும் முன்னும் பின்னும் நிகழும் ஒரே தொடர் நிகழ்ச்சியாகக் கொண்டு அதற்கு வெட்சி என முன்னதன் பெயரால் பெயர் சூட்டியதைப் போலவும், மாற்று வேந்தன் மண்ணைக் கைப்பற்றலும், அம்மண்ணுக்குரிய மன்னவன் அதை மீட்டுக் கொள்ளலும் ஆகிய நிகழ்ச்சிகளை இருவேறு

நிகழ்ச்சிகளாகக் கொண்டு, அதே ஆசிரியர்கள் தனித்தனிப் பெயர் கொடுத்துக் கொண்டாலும், ஆசிரியர் தொல் காப்பியனார், அவ்விரு நிகழ்ச்சிகளையும் முன்னும் பின்னும் நிகழும் ஒரே தொடர் நிகழ்ச்சியாகக் கொண்டு, அதற்கு வஞ்சி என முன்னதன் பெயரால் பெயர் சூட்டியதைப் போலவும், பிற்காலப் புறப்பொருள் இலக்கண ஆசிரியர்கள், பகையரசன் அரணை முற்றி வளைத்துக் கொள்வதும், அவ்வரணுக்குரிய அரசன் அம் முற்றுகையை ஒழித்துக் காத்துக் கொள்வதும் ஆகிய இரு நிகழ்ச்சிகளாகக் கொண்டு, முற்றி வளைப்பதை உழிஞை யாகவும், முற்றுகையை முறியடித்து அரணைத் தனதாக்கிக் கொள்வதை நொச்சியாகவும் கொண்டாலும், ஆசிரியர் தொல்காப்பியனார் அவ்விரு நிகழ்ச்சிகளையும் முன்னும் பின்னும் நிகழும் ஒரே நிகழ்ச்சியாகக் கொண்டு அதற்கு உழிஞை எனப் பின்னதன் பெயரால் சூட்டியுள்ளார்.

ஆனிரை கவர்தலும் மீட்டலும், மண்ணைக் கைப்பற்றலும் மீட்டலும் ஆகிய அவ்விடங்களில், முறையே வெட்சி, வஞ்சி என, அந்நிகழ்ச்சிகளின் முன்னிகழ்ச்சி களைக் குறிக்கும் பெயர்களால் பெயர் சூட்டிய ஆசிரியர் தொல்காப்பியனார், ஈண்டு மட்டும், அரண் வளைத்தலும், அது தவிர்த்தலும் ஆகிய நிகழ்ச்சிகளில் உழிஞை எனப் பின்னதன் பெயரால் பெயர் சூட்டியுள்ளார். இச்சிறு வேறுபாடு தவிர்த்து இம்மூன்று திணைகளை வகுத்து விளக்கும் நிலையில், ஆசிரியர் தொல்காப்பியனார் மேற் கொண்ட முறையில் ஒருமைப்பாடே நிலவுவது உணர்க.

புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் போலும் பிற்கால ஆசிரியர்கள், ஆனிரைப் போர் பற்றிய விளக்கத்தின் போதும், மண் குறித்த போர் பற்றிய விளக்கத்தின் போதும், அவ்விரு நிகழ்ச்சிகள் பற்றிய

விளக்கங்களை முன்னர்க் கூறி அவ்விரண்டின் பின் நிகழ்ச்சிகளாகிய கரந்தை காஞ்சி நிகழ்ச்சிகள் பற்றிய விளக்கங்களைப் பின்னர்க் கூறியது போல், அரண் போர் பற்றிய விளக்கம் ஈண்டும், அரண் வளைக்கும் முன் நிகழ்ச்சியாகிய உழிஞை பற்றிய விளக்கங்களை முன்னர்க் கூறி, அதை மீட்கும் நிகழ்ச்சியாகிய நொச்சி பற்றிய விளக்கங்களைப் பின்னர்க் கூற வேண்டுவதே முறை யாகவும், வைப்பு முறையினை மாற்றியிருப்பது ஏனோ அறியேம்.

புறப்பொருட்டிணைகள் பற்றிய விளக்கங்களையும் விரிவுகளையும் விளக்கும் நிலையில், புறப்பொருள் வெண்பாமாலை, அரண் குறித்த போர்பற்றிய விளக்கத்தைக் கூறுங்கால், மதிலைக் கைப்பற்றும் முயற்சிகளைக் கூறும் உழிஞைத் திணை பற்றிய விளக்கங்களை முதற்கண் கூறி, அதைக் காக்கும் முயற்சிகளைக் கூறும் நொச்சித் திணை பற்றிய விளக்கங்களைப் பின்னர்க் கூறுகிறதேனும், இயல்பான வைப்பு முறை அது ஆகாது. அரண்கோடலைக் கூறும் உழிஞையினை முதற்கண் விளக்கி, அது மீட்டலைக் கூறும் நொச்சியினைப் பின்னர் விளக்குவதே முறையாகும். ஆனிரை கவர்தலும், அது மீட்டலும் அடுத்தடுத்து நிகழ்வதாகலின் அவை கூறும் திணைகள் அடுத்தடுத்து விளக்கப்படுவது போலவும், மண்ணைக் கோடலும் அது மீட்டலும் அடுத்தடுத்து நிகழ்வதாகலின் அவை கூறும் காஞ்சியும் வஞ்சியும் அடுத்தடுத்து விளக்கப்படுவது போலவும், அரண் கோடலும், அது மீட்டலும் ஆகிய நிகழ்ச்சிகளும் அடுத்தடுத்து நிகழ்வதாகலின், அவை கூறும் உழிஞை, நொச்சித் திணைகளும் அம்முறையை ஒட்டி, முன்பின்னாக வைக்கப் பெறுவதே முறையாகும். புறப் பொருள் வெண்பாமாலை ஆசிரியருக்கும் இதுவே உடன்

பாடாகும் என்பது, புறப்பொருள் வெண்பா மாலைக் கண் விளக்கப் பெறும் திணைகள் எவை எவை என்பது பற்றிய செய்தியை அளிக்கும்,

"வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
உட்குடை உழிஞை நொச்சி தும்பையென்று
இத்திறம் ஏழும் புறம்என மொழிப;
வாகை பாடாண் பொதுவியல் திணையெனப்
போகிய மூன்றும் புறப்புறம் ஆகும்." –சூத்திரம்: 19.

என்ற சூத்திரத்தில், "உழிஞை நொச்சி" என உழிஞையை முன்னாகவும், நொச்சியைப் பின்னாகவும் வைத்தே சூத்திரம் ஆக்கியிருப்பதால் உறுதியாவது காண்க.

பிற்கால ஆசிரியர்களால் நொச்சி உழிஞை இருதிணைகளாகவும், ஆசிரியர் தொல்காப்பியனாரால் உழிஞை என ஒரு திணையாகவும் கொள்ளப்படும் அரண் குறித்த போர் பற்றிய பொது இயல்புகளைக் கண்ட நாம், இனி அதன் துறைகளின் அமைதி பற்றிய ஆராய்ச்சியினை மேற்கொள்வோமாக.

## கொள்ளார் தேயம் குறித்த கொற்றம்

மலையினின்றும் உருண்டோடி வந்து கடல் புகும் கானாற்று வெள்ளம்போல், பரிசில் வேண்டித் தன்வாயிற் கண் நாள்தோறும் வந்து குவியும் பாணரும் கூத்தரும் பொருநரும் புலவரும் போலும் இரவலர் அனைவர்க்கும் அவர் தம் இன்முகம் காணும் வரையும் வாரி வாரி வழங்கத் தக்க பேருள்ளம் உடைய தன்பால், அவ்வாறு வழங்கத் தக்க பெருவளம் இல்லாதபோது அது பிறர்பால் குவிந்திருக்கக் காணும் வேந்தனே ஆயினும், வீரனே ஆயினும், அவனால் வாளா அடங்கியிருப்பது இயலாது.

ஆங்குக் கொன்னே குவிந்து கிடக்கும் பொருளைக் கொள்ளை கொண்டு வந்து, அவ்விரவலர் கூட்டத்திற்கு வழங்கி அவரை வாழ வைக்கவே துணிவன். அவ்வாறு துணிவதும், அத்துணிவைச் செயல்படுத்துவான் வேண்டி, அச்செல்வம் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் அரணை அழித்துக் கைப்பற்றக் கருதுவதும் உண்டு. சிந்தை இன்றிச் செயல் எழாது என்ப ஆதலினாலும், செயல் சிந்தையின் விளைவே ஆதலினாலும், அரணைக் கை கொள்ளக்கருதிய அக்கருத்தே அத்திணையின் வித்தாகி முதல் துறையாக இடம் பெற்றது.

தம் வாழ்வு வளம் உடையதாக வேண்டிய புலவர்கள் எல்லாம் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனையே அடுத்து நின்றாராக, அவன், அவர்தம் வறுமை தீர்ப்பான் வேண்டித் தன் குலப்பகைவர்களாம் சேர பாண்டியர் நாட்டுச் செல்வ வளங்கள் மீது சிந்தை செலுத்தினன் எனக் கோவூர்க் கிழார் கூறுவது காண்க.

"மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
புலவர் எல்லாம் நின் நோக்கினரே;
நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்று வெகுண்டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்நோக்கினையே"

— புறம்:42

வெளி நாட்டவர் உள்ளத்தில் தணியாப் பெரு வேட்கையை எழுப்பவல்ல பெருநிதியை ஈட்டி வைத்திருப் பவன் உண்மையில் ஒப்புயர்வற்ற பெருவேந்தனாகவே இருப்பன் ஆதலாலும், அவன் தன் பெருநிதியைக் காக்க மேற்கொண்டிருக்கும் காவல், பிறரால் எளிதில் கடத்தற் கரிய காவலாகவே இருக்கும் ஆதலாலும், அக்காவலைக்

கெடுத்து, அவ்வேந்தனை வென்று அந்நிதியைக் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணம், உண்மையில் ஒப்புயர்வற்ற ஒரு பெருவீரன் உள்ளத்தில் மட்டுமே உண்டாகும் ஆதலின், இது கொற்றம் எனப்பட்டது.

அவ்வாறு தன் அண்டை நாட்டுச் செல்வத்தைக் கைப்பற்றிக் கொணர்ந்து இரவலர்க்குக் கொடுக்கத் துணிந்த ஒரு கோவேந்தன், தன் கொற்றத்தின்பால் கொண்ட தளராத் தன்னம்பிக்கையால், அதைக் கொள் வதற்கு முன்பே, அப்பொருள்களை அவ்விரவலர்களின் உடைமையாக்கி விடுதலும் உண்டு. "பகைவர்க்கு உரிய அரண் அவர்கள் உடைமையாகவும், அதை வென்று கைக்கொள்வதன் முன்பே, 'பாணர் தலைவ! அப்பேரரண் இன்றுமுதல் உன் உடைமையாம்; அதை யான்தர, இன்றே ஏற்றுக் கொள்!' எனக் கூறிப் பாணர் உடைமையாக்கும் பெருங்கொடை வள்ளலே! நீ வாழி!" எனப் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியை வாழ்த்தும் ஊன்பொதி பசுங்குடையார் புறப்பாட்டு இதற்கு நல்ல சான்றாகும்.

"ஒன்னார்
ஆரெயில் அவர் கட்டாகவும், நுமது எனப்
பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்"

புறம்: 209.

ஆக, இந்நிகழ்ச்சி அரண் குறித்த போரின் முதற் படியாகவே உழிஞைத் திணையின் பொதுவிலக்கணம் கூறும் "கொள்ளார் தேயம் குறித்த கொற்றமும்" என்ற சூத்திரத்தில், இதற்கு முதலிடம் அளித்துள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார். ஆக, இது அரணை முற்றக் கருதிய வேற்று வேந்தன் செயலே அல்லது, முற்றுகையைத் தவிர்த்து

அரணைக் காக்கக் கருதும் அவ்வரணுக்கு உரியான் செயல் அன்று என்பது தெளிவாகும்.

அரணை முற்றிக் கொண்ட மாற்று வேந்தனை வெற்றி கொண்டு அரணைக் காப்பதே உழிஞையாம் என்றால், அதை விளக்கும் சூத்திரத்தில், அரணைக் கைப்பற்றத் துணிந்த நிகழ்ச்சியைக் கூறுவது பொருந்தாதே என்ற எண்ணம் எழுதல் இயல்பே. அது உண்மை என்றாலும், அரண் முற்றுகை இல்லாதபோது, அதை மீட்டலுக்கு இடம் இல்லை. ஆகவே, மீட்டலைக் கூறும் போது, அதன் முன் நிகழ்ச்சிகளையும் கூறவேண்டுவது முறையாதலின் அத்தகைய முன் நிகழ்ச்சிகளில் ஒன்றாகிய இதுவும், அச்சூத்திரத்தில் இடம் பெற்றுள்ளது எனக் கொள்க. ஆக, இது அரண் அழிப்போன் வினையே அல்லது அது காப்போன் வினை அன்று என்க. இனி வரும், அழிப்போன் வினை விளக்கும் துறைகளுக்கும் இதுவே கூறிக் கொள்க.

ஆசிரியர் தொல்காப்பியனார், "கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்" என, நாடுபற்றிய நிகழ்ச்சியைக் குறிப்ப தாகவே கோடல் வேண்டும். நாடு பற்றியதாயின், அது வஞ்சி எனப்படுமே யன்றி உழிஞை எனப்படாது.

பகையரண் ஒன்றைக் கைப்பற்றக் கருதும் அரசன் ஒருவன் அவ்வெண்ணம் வரப் பெற்ற அப்போதே அதை மேற்கொண்டு விடுவானல்லன். அது போர் முறையும் ஆகாது. கைப்பற்றக் கருதிய அரணின் அமைப்பு நிலை, அது அமைந்திருக்கும் இடத்தின் இயல்பு, அதைக்காத்து நிற்கும் படை வரிசையின் வன்மை, அதை முற்றி வளைத்தற்கு வாய்ப்புடைய காலம் ஆகியவற்றை ஆராய்ந்து நோக்கி, சென்று வளைத்துக் கொண்டால் வெற்றி உறுதி என

எண்ணுமளவு தன் படை பலம் பெருகிய பின்னர், வாய்ப்புடைய காலமும் வந்து வாய்த்த பின்னரே விரைந்து சென்று வளைத்துக் கொள்வன்.

அவ்வாறு விரிவாக ஆராய்ந்து படையெடுத்துச் செல்லத் துணிந்த நிலையில், தானே செல்லமாட்டா ஓர் இடையூறு நேர்ந்தபோது, எடுத்த வினையில் இடை மடங்கல் கூடாது என்ற உணர்வால், தானாகவே மதிக்கத்தக்கனவும், தனக்கு இன்றியமையாதனவுமாகிய தன் வெண் கொற்றக் குடையினையும், வீரவாளினையும் முன்னே போகவிட்டுத் தான் பின்னர்ச் செல்வான். ஆகவே, அரண்போர் நிகழ்ச்சிகளின் விரிவும் விளக்கமும் கூறிவந்த சூத்திரத்தில், "குடையும் வாளும் நாள் கோள்" என வந்திருக்கும் குடை நாட்கோளும், வாள்நாட்கோளும் அரணை வளைத்துக் கொள்ள விரும்பிய வேந்தனுக்குரிய தொடக்க வினையைக் கூறும் "கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்" என்ற தொடரின் விரிவும் விளக்கங்களுமாய், உழிஞைப் போரின் தொடக்க நிகழ்ச்சிகளே ஆம் என்க.

புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியரும், குடை நாட்கோள், வாள்நாட் கோள்களையும், அவற்றோடு தொடர்புடையவாகிய முரச உழிஞை, கொற்ற உழிஞை களையும் உழிஞைத் திணையின் தொடக்க நிகழ்ச்சி களாகவே கூறியிருப்பதும் உணர்க.

## உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு:-

ஒரு வேந்தன், மாற்று வேந்தனுக்குரிய அரணைக் கைப்பற்றத் துணிந்து விட்ட நிலையிலும், அறப்போர் முறைகளை அறிந்த வேந்தனாயின், அவன், தன் ஆசையைப் போராடியே பெற நினைப்பானல்லன். அவன்

குறிக்கோள் அரண் கொள்கையேயன்றித், தன் ஆற்றலைக் காட்டுவது அன்று. ஆற்றலைக் காட்ட மேற்கொள்ளும் போராயின், அது தும்பை ஆகிவிடும். ஆகவே, போரிடா மலே அரணைத் தான் பெற வழியுண்டா என்றே எண்ணிப் பார்ப்பன்; அரண் கோடல், தன் கருத்தாகும் என்பதை அறிந்தும் அரணுக்குரியவன் அரண் அடைத்து அடங்கி யிருப்பது, தன் ஆற்றலை முற்றவும் உணராமையால் என்பது உணர்ந்து அவனுக்கு அது உணர்த்தும் வழி வகைகளை மேற் கொள்வன். அடைத்திருப்பினும் அரணுள் புகுதற்கு உரியவராகிய புலவர்களை அவன்பால் போக்கித் தன் கருத்தினையும், அக்கருத்துடையோனாகி விட்ட தன் ஆற்றலையும் அவனுக்கு எடுத்துரைக்கச் செய்வன்.

நலங்கிள்ளி ஆவூர்க் கோட்டையை முற்றியிருந்த போது, அடைத்துக் கொண்டு அகத்தே அடங்கியிருந்த நெடுங்கிள்ளிபால் சென்ற புலவர் கோவூர்க் கிழார், அம் முற்றுகையால் அகத்தோர் படும் அல்லல்களை நிரலே எடுத்துரைத்து, அடங்கியிருப்பது அறமோ, ஆண்மையோ ஆகாது எனும் பொருள்படக் கூறிய அறவுரை இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

"இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா,
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ,
திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்து
அலமரல் யானை உருமென முழங்கவும்,
பாலில் குழவி அலறவும், மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும், நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்,

இன்னாது அம்ம! ஈங்கு இனிது இருத்தல்,
துன்னரும் துப்பின் வயமான் தோன்றல்!
அறவை யாயின் நினது எனத் திறத்தல்
மறவை யாயின் போரொடு திறத்தல்!
அறவையும் மறவையும் அல்லையாகத்
திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதில் ஒரு சிறை ஒடுங்குதல்
நாணுத் தகவுடைத்து இது காணுங் காலே." –புறம்: 44

அரண்போர் தொடங்க இருந்த அன்று விடியற் காலை. அந்தணன் ஒருவன் அரணுட் புகுந்து அடங்கி யிருப்பானுக்கு அறவுரை கூறியதன் விளைவாக, அரணகத்தான் அடங்கியிருப்பதை விடுத்து வாயில் திறந்து விட்ட நிகழ்ச்சியைப் புறத்தில் மதுரை வேளாசான் பாடியிருக்கும் பாட்டொன்று புலப்படுத்துவது காண்க.

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவல் ஊர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே, அதற்கே
ஏணியும் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந் தனவே." புறம்: 305

இவ்வாறு அரண் போர் தொடங்குவதன் முன்பே, அது தவிர்க்கத் தூது விடுவது ஒரு புறம் இருக்க, அரண் போர் தொடங்கி நடைபெற்றிருக்கும் நிலையிலும், அது மேலும் நீளாமை கருதி, வந்த வேந்தன் வீரர்கள், தம் முன் நின்று போராடும் அரணுக்குரியானின் வீரர்கள் உள்ளத்தில் அச்சமும் நடுக்கமும் எழும் வகையில் தம் வேந்தனின் பெருமை பேராண்மைகளை எடுத்துரைப் பதன் மூலம், அவரைப் பணிய வைத்து அவ்வரணைக் கைப்பற்றிக் கோடலும் உண்டு.

ஆயர் தலைவன் கழுவுள் என்பானுக்குரிய அரணைத், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை வளைத்துக் கொண்டிருந்த நிலையில், சேர நாட்டு வீரர்கள், எடுத்து இயம்பிய இரும் பொறையின் பெருமையை அறிய நேர்ந்தமையால் வஞ்சி, ஆயர்பாடி வீரர்கள் பணிந்து விட்டார்களாக, வீரர் பணிந்து விட்ட நிலையில், தான் மட்டும் பணியாதிருப்பது இயலாது என்பது உணர்ந்து, இறுதியில் கழுவுளும் பணிந்து போன நிகழ்ச்சியைப் பதிற்றுப்பத்தில் காணலாம்.

“வீரர்காள்! எங்கள் தலைவனோடு பகைகொண்டு போர்க்களம் புகாதீர்கள்; அவன் முன் புகுந்து போராடிய அவ்வளவு வீரர்களும் கல்லறையுட் புகுந்து மறைந்து விட்டார்களேயல்லது மண் மீது மன்னி நிலை பெற்றிருப் பார் ஒருவரும் இலர்!” என்ற கூற்று அமைய வந்திருக்கும் திருக்குறளும் இந்த இனத்தைச் சேர்ந்ததே.

“என்ஐமுன் நில்லன்மின்; தெவ்வீர்! பலர்என்ஐ
முன்நின்று கல்நின்ற வர்.” குறள் : 771

இவ்வாறு, “எண்ணியதை எண்ணியாங்கு முடிக்க வல்லவன் எம் வேந்தன்!” என அவன் வீரரும், அவனால் விடப்படும் தூதுவரும் அவன் புகழ் பாடிப் போர் ஒழிப்பதைக் கூறுவதே உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாம். ஆக, இது, அரண் கோடல் குறித்து வந்த, அரணுக்கு உரியனல்லாதான் செயலைக் குறிப்பதே ஆம் என்க.

## தொல்லெயிற்கு இவர்தல்:

அரண் கோடல் கருதிய ஒருவன், அதைப் போரிடாமலே பெற மேற்கொண்ட முயற்சிகள் பயனற்றுப்

போயின என்பதை உணர்ந்ததும், அதைப் போராடிப் பெறத் துணிவன். பகைவனின் அடுத்த நிகழ்ச்சி அதுவாகவே இருக்கும் என்பதை அரணுக்கு உரியானும் அறிவானாதலின் அவன், அரண் வாயில்களை அடைத்துக் கொண்டு, அடங்கி விடுவன். அவன் செயல் அதுவாகி விட்ட நிலையில், அரணைக் கைப்பற்றக் கருதியவன் செய்ய வேண்டுவது காவற் காடுகளை அழித்து, கிடங்கினைத் தூர்த்து, மதிலைக் கடந்து அரணகத்தை அடைவதே ஆம். இவ்வளவும் செய்ய வேண்டுமாயின், கொடி படர்ந்தால், பார்ப்பவர்க்குப் படர்ந்த கொடி புலப்படுவதல்லது, அது ஏறிப் படர்ந்திருக்கும் பொருள் புலப்படாததுபோல், அரணை நோக்குவார்க்கு அரண் புலப்படாது, பார்க்குமிடமெங்கும் படை வீரர்களே காட்சி தரும் வகையில், அரணை மிகப் பெரிய படைகொண்டு மொய்த்துக் கொள்ளுதல் வேண்டும். அதைக் கூறுவதே, தொல்லெயிற்கு இவர்தல். ஈண்டு, மதிலை வளைத்துக் கொள்ளும் படையின் செயலை உணர்த்த, கொடியின் செயல் உணர்த்தும் இவர்தல் என்ற சொல் ஆளப் பட்டிருக்கும் நயம் உணர்தற்பாலது. 'பீரை நாறிய புரை இவர் மருங்கு" (புறம்: 116) 'பீர் இவர் வேலிப் பாழ்மனை" (பதிற்று: 26) ஆக, இதுவும் அரண் கொள்ளக் கருதும் பகையரசன் செயலே யல்லது, அரணுக்குரியான் செயலாகாது என்க.

அரணகத்து மதில் மீது ஏறுவதன் முன், அவ்வரணுக்கும் அரணாக இருப்பனவாகிய காவற் காட்டின் கண்ணும், கிடங்கின் கண்ணும் நின்று காவல் புரிவாராகிய அரண் வீரர்களை வெற்றி கொள்ள வேண்டுவதும், அவர்களை வெற்றிகொண்ட பிறகு, அரண்

மதிலுக்கு ஏணி அமைத்து ஏறவேண்டுவதும் இன்றியமையாதவாதலின், உழிஞைத் திணையின் விளக்கம் கூறும் இரண்டாவது சூத்திரத்தில் இடம் பெறும், "மடையமை ஏணிமிசை மயக்கமும்," "கற்று அமர் ஒழிய வென்று கைக்கொண்டு முற்றிய முதர்வும்" என்ற இரண்டு துறைகளும், தொல் எயிற்கு இவர்தல் என்றதன் விரிவும் விளக்கங்களுமேயாம் என்க. 'மறத்துறை மலிந்து மண்டி மாற்றார் விறற் கொடி மதிலின் புறத்திறுத்தன்று" என்பதைக் கூறும் புறத்திறை, "வாஅள் மறவர் வணங்காதார் நீஇள் மதிலின் நிலையுரைத் தன்று" என்பதைக் கூறும் ஆரெயில் உழிஞை, "கருதாதார் மதிற்குமரி மேல் ஒரு தானாகி இகல் மிகுத்தன்று" என்பதைக் கூறும் குற்றுழிஞை,"விண்தோயும்மிளை கடந்து குண்டு அகழிப் புறத்திறுத் தன்று" என்பதைக் கூறும் புறத்துழிஞை, "தொடு தழல் மறவர் துன்னித், துன்னார் இடுஆட்டு இஞ்சியின் ஏணிச் சாத்தின்று," என்பதைக் கூறும் ஏணிநிலை, "அகத்தோன் காலை அதிர்முரசு இயம்பப் புறத்தோன் வெஞ்சினப் பொலிவுரைத்தன்று" என்பதைக் கூறும் முற்றுமுதிர்வு ஆகிய பு.வெ. மாலைத் துறைகளும் இதன் கீழ் அடங்கும் என்க.

## தோலது பெருக்கம்:

பகைவன், பெரும் படைகொண்டு, தன் அரணை வளைத்துக் கொண்டுள்ளான் என்பது உணரும் அரணுக்கு உரியவன், புறத்தே வளைத்து நிற்கும் அப்பெரும் படையினை அழிக்கும் பணியினை மேற்கொள்வன். புறத்தே நிற்பது கபிலர் கூறுவது போல், மரந்தொறும் பிணித்தகளிறும், புலந்தொறும் பரப்பிய தேரும் கொண்ட பெரும் படையே யாயினும், அதனை எளிதில் அழிக்கும்

வாய்ப்பு அரணகத்துப் படைக்கு உண்டு. புறத்தோர் ஏணியிட்டும் ஏறலாகா உயர்வும், குத்தி அழிக்கலாகாத் திண்மையும், வளைவில் போலும் அரும் பொறிகள் பல அமையப் பெற்று அணுகலாகா அருமையும் உடையதாத லோடு, தாம்விடும் படைக்கலங்கள் புறத்தார் மீது சென்று பாயவும், அவர்விடும் படைக்கலன் ஒன்று தானும் தம் மீது வந்து பாயாது போகவும் வாய்ப்பளிக்கும் வகையில், புறத்தோர்க்குப் புலனாகாதவாறு, அகத்தோர் நின்று போரிடற்கேற்ற தலை அகலமும் உடையதே அரண் ஆகும். மேலும், அகத்தோர் மதில் உச்சிக் கண் நின்று போரிட, புறத்தோர் மதில் அடியில் நின்று போரிட வேண்டி யிருக்கும் நிலையில், புறத்தோர் தொடுக்கும் படைக் கலன்கள் அகத்தோர் மீது சென்று படாதாக, அகத்தோர் கையிலிருந்து புறப்படும் ஒவ்வொரு படைக்கலனும், புறத்தார் மீது தப்பாது சென்று பாயும் ஆதலின், இப்போரில் பேரழிவுக்கு உள்ளாகிவிடின், அரண் கோடல் குறிக்கோள் பயனற்றுப் போய் விடுமாதலின், அரணைத் தாக்க ஆணை பிறப்பிப்பதன் முன், அழிவைத் தவிர்க்க வல்ல தற்காப்பு வகைகளை அளித்தே அனுப்புவன். ஒரு வீரனுக்குப் போரில் தன்னைக் காக்கும் கவசமாக அமைவது, அவன் கையிலிருக்கும் கேடயமே ஆகும். ஆகவே, அரண் தாக்கச் செல்லும் படைவரிசையில் அணிவகுத்துச் செல்லும் படைவீரன் ஒவ்வொருவன் கையிலும் கேடயம் காட்சி அளிக்கும். அதைக் கூறுவதே தோலின் பெருக்கம் என்ற இத்துறை. பண்டு கேடயமாகப் பயன்பட்டது பெரும்பாலும் தோலே ஆதலின் ஈண்டு தோல் என்பது தோலால் ஆன கேடயத்தை உணர்த்தி, மீண்டும் தோல் ஏந்திச் செல்லும் வீரரைக் குறிக்கும்.

"இன்னும் அரணைக் கைப்பற்றாமல் இருப்பது இழுக்காகும்; அரண்கொள்ளும் முயற்சியைத் தோல்படை மேற்கொண்டால் அது எளிதாகி விடும்" என்று கூறினான் ஒரு வேந்தன் என்று பொருள் பட வரும் பு.வெ. மாலைச் செய்யுளும், அரண் முற்றுகையில் படையின் தோள் வலிமையினையே மிகுத்துக் கூறுவதும் காண்க.

"நின்றபுகழ் ஒழிய, நில்லா உயிர்ஓம்பி
இன்றுநாம் வைகல் இழிவாகும் – வென்று ஒளிரும்
பாண்டில் நிரைதோல், பணியார் பகையரணம்
வேண்டின், எளிது என்றான் வேற்று."

ஆக, இதுவும் புறத்தோன் செயல் உணர்த்துவதே யல்லது அகத்தோன் செயல் உணர்த்துவது அன்று என அறிக. 'இந் நான்கு முற்றுவோர்க்கே உரிய வெனக் கொள்க," என நச்சினார்க்கினியர் கூறுவதும் காண்க.

## அகத்தோன் செல்வம்:

அரணை வளைத்துக் கொண்டு, புறத்தே பாடி கொண்டிருக்கும் பகைப் படை, இறுதியாக, அரணைத் தாக்கத் துணிந்துவிட்டது என்பதை அரணுக்கு உரியான் கண்டு கொண்டதும், அத்தாக்குதலைத் தாங்குவதற்கு ஏற்புடையவற்றை மேற்கொள்ளத் தொடங்குவன், அரண் முற்றுகை எத்துணை காலம் நீளுவதாயினும், அரணகத்து மக்கள் அது குறித்துக் கவலை கொள்ளாது வாழ்தற்கு வேண்டும் பொருள்கள் பலவற்றையும் பெருமளவில் ஈட்டி வைப்பன். அம்முயற்சி ஒரு பால் நிகழ்ந்து கொண்டிருக்க, அரண்மதில்கள் பகைப் படையால் பாழுற்றுப் போகாத படி அம் மதிலகத்தே பல்வேறு பொறிப் படைகளைப் பொருத்துவதை மேற்கொள்வன், இம் முயற்சிகளில் நிறைவு

கண்டதும், அரண் பற்றிய கவலை சிறிதும் கொள்ளாது செம்மாந்திருப்பன், அந் நிலையைக் கூறுவதே "அகத்தோன் செல்வம்" என்ற இத்துறை.

இவ்வாறு அழிக்கலாகா ஆற்றல் உடையதாக அரணை மாற்றிய அம்மன்னவன், அந்நிலை அளிக்கும் மன நிறைவால், புறத்தோன் செயல் எதுவே ஆயினும் ஆகுக என எண்ணிக் கிடப்பதோடு நில்லாது அரண்வலிமையை வந்திருப்போன் உணர்ந்தால், இத்துணை வலிமை பொருந்திய அரணை முற்றி அழிப்பது முடியாது என உணர்ந்து முற்றுகையைக் கைவிடினும் விடுவன் என்ற உணர்வால், தக்காரை அப்புறத்தோன்பால் போக்கி, அரண் பெருமையை அவனுக்கு உணர்த்தச் செய்வதும் உண்டு. பறம்பரணை மூவேந்தர் முற்றியிருந்த போது பறம்பிற் கோமகன் ஆருயிர் நண்பராம் கபிலர், பறம் பரணின் பற்றற்கரிய பேராற்றலைப் புலப்படுத்திப் பாடிய புறப்பாட்டு இதற்கு நல்ல எடுத்துக்காட்டு.

"அளிதோ தானே பாரியது பறம்பே?
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே
ஒன்றே சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே;
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே;
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே;
நான்கே, அணிநிற ஓரிபாய்தலின் மீதழிந்து

திணி நெடுங்குன்றம் தேன் சொரியும்மே;
வான்கண் அற்று அவன் மலையே; வானத்து
மீன்கண் அற்று அதன் சுனையே; ஆங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்

புலந்தொறும் பரப்பிய தேரிணி ராயினும்
தாளிற் கொள்ளலிர்; வாளின் தாரலன்”

இவ்வாறு அரண் பெருமை கூறுவதும் அகத்தோன் செல்வமாம் என்க.

அரணகத்துப் படையும் குடியும் கேடின்றி வாழ்தற்கு ஏற்பன செய்வதெல்லாம் அரண் காவலைக் கருத்தில் இருத்திச் செய்வனவாம் ஆதலின், அவை செய்யும் அவன் அதற்கு அடையாளமாக நொச்சிமலர் புனைவதும் இதன் ஒரு பகுதியே ஆகும். ஆகவே, அடுத்து வரும் சூத்திரத்தில் “அகத்தோள் வீழ்ந்த நொச்சி” எனக் கூறப்படும் துறை, அகத்தோன் செல்வம் இத்துறையின் விரிவும் விளக்கமும் ஆம் என உணர்க.

## ஒரு தான் மண்டிய புதுமை

அரண் முற்றுகை எவ்வளவு காலம் நீளினும், நின்று தாங்குதற் கேற்ற செயல் முறைகளை ஒருபாலும், முற்றியிருக்கும் பகைப்படை முற்றுகையைக் கை விட்டுத் தானே புறங்காட்டிப் போதற்கேற்ப, அரண் மதில்களில் அரிய பொறிப் படைகளைப் பொருத்துவதை ஒருபாலும் மேற் கொள்ளும் அரணுக்குரியான் செயல்களால், புறத்தே பாடி கொண்டிருக்கும் தன் கருத்தையும், தன் நாற்படைப் பெருமையையும் அப்படை கொண்டு அரணை அழிக்கத் தான் திட்டமிட்டிருக்கும் தன் போர் முறைகளையும் அரணுக்கு உரியான் அறிந்து கொண்டான் என்பதை அரண் கோடல் கருதி வந்திருக்கும் பகையரசன் அறிந்து கொண்ட அளவில், ஒன்று, தான் கருதிவந்ததைக் கைவிட்டு வறிதே ஊர் திரும்புதல் வேண்டும்; அல்லது அரணுக் குரியான் மேற்கொள்ளும் அவ்வளவு முயற்சிகளையும்

பயனற்றதாக்க வல்ல புதிய போர் முறைகளைக் கைக்கோடல் வேண்டும். "ஆசைக்கோர் அளவில்லை; அகிலமெலாம் கட்டி ஆளினும் கடல்மீதிலும் ஆணை செலவே நிற்பர்" என்பதே அரசர்க்கு ஓதிய இயல்பு ஆதலின், அரண்கோடல் கருதிய அரசன், பெரும்பாலும், முன்னதைக் காட்டிலும் பின்னதை மேற்கொள்வதே இயல்பாம். ஆகவே, முற்றியிருக்கும் வேந்தனை, அகத்தோன் எதிர்பாரா வகையில் தன் போர்முறைகளில் புதுமுறைகளைப் புகுத்திப் போரிடத் துணிவன். உழிஞைத் திணையின் விளக்கம் கூறும் இரண்டாவது சூத்திரத்தில் வரும் "புயத்தோன் வீழ்ந்த புதுமை" என்ற துறை இதைச் சுட்டுவதேயாம்.

புதுமுறைகளை வேந்தன் விரும்பி விட்டால் மட்டும் போதாது. அவன் விரும்பும் இப்புது முறைகளை, அவன் படைத் தலைவரும், அப்படைத் தலைவர்களின் கீழ்ப் பணிபுரியும் போர் வீரர்களும் விரும்புதல் வேண்டும். அப்பொழுதுதான் அப்புது முறைகளும் பயனளிக்கும். அரணைத் தாக்க முனைவதற்கு முன்பே ஆராய்ந்து பார்க்க வேண்டுவ அனைத்தையும் ஆராய்ந்து பார்க்காது, மேற்கொண்ட போர் முறை ஒவ்வொன்றும் பயனற்றுப் போகக் கண்டு, ஒவ்வொன்றாகக் கைவிட்டுப் புதுப்புது முறைகளை மேற்கொள்வதைக் காணும் அவன் படைவீரருக்கு, அவன் தலைமையில் நம்பிக்கை அற்றுப் போக, அவன் மேற்கொள்ளும் புதுமுறைகளை மேலும் பின்பற்ற மறுப்பது இயலக் கூடியதே. ஆனால், போர் நிகழ்போதில் ஒரு படை வரிசையில், அத்தகைய இடர்நிலை இடம் பெறுவது ஆக்கத்திற்கு வழிகோலுவ தாகாது. ஆகவே, படையெடுத்து வந்து விட்டபின்னர்,

படைத் தலைவன் எம்முறை மேற்கொள்ளினும் அம் முறையின் தகுதி தகுதியின்மைகளை ஆராய்வதைவிடுத்து, அவன் ஆணைகளைக் கண்ணை மூடிக் கொண்டு பின்பற்றியே தீர்தல் வேண்டும். அவரே நல்வீரரும் வல்வீரரும் ஆவர். அரண் கோடல் குறித்து வந்தவன் எத்தகையவனேயாயினும், அவனோடு வந்திருக்கும் அவன் படை வீரர், "அரண் முற்றுகை இத்துணைக் காலம் நீட்டிக்கிறதே!" என்றோ, "அரண் கோடல் குறித்து அரசன் அன்றுவரை எடுத்த ஒவ்வொரு முயற்சியும் தோல்வி காண்கிறதே!" என்றோ, அரசன் தலைமையை வெறுக்காது. அந்நிலையிலும் அவன் ஆணை ஏற்று அரண் மதிலை அழிப்பதில் ஆர்வம் காட்டுவர் என்றால், உண்மையில் அவர்கள் பாராட்டத் தக்கவரேயாவர். "போர் எனில் புகலும் புனைகழல் மறவர், காடிடைக் கிடந்த நாடு நனிசேய செல்வேர் அல்லேம் என்னார்" (புறம்: 31) என அத்தகைய வீரர் பாராட்டப் பெற்றுள்ளமை காண்க.

உழிஞைத் திணையின் விளக்கம் கூறும் "குடையும் வாளும்" என்ற இரண்டாவது சூத்திரத்தில் வந்துள்ள "மதில் மிசைக்கு இவர்ந்த மேலோர் பக்கம்" என்பது அப்பாராட்டைக் கூறவந்ததே ஆம். ஆக, அரண் புறத்தே முற்றிக் கிடக்கும் பகையரசன் வேட்கையின் விளைவு, அரண் மதில் அழிக்கும் முயற்சியே ஆதலின், பு.வெ. மாலையார் முடிந்த முடிபாக, 'எயில்தனை அழித்தல்" என்ற துறையினைக் கொண்டார்.

அரண் பற்றிய போரைத் தொல்காப்பியர் கொண்டது போல், அரணைக் கைப்பற்ற வந்தானை, வென்றாட்டும் வேந்தன் மேற்கொண்ட ஒரு போர் நிகழ்ச்சியாகக் கொள்ளாது, அரணைக் கைப்பற்ற வந்தவன்

மேற்கொண்ட போர் ஒன்று, அது உழிஞை; அரண் முற்றுகையைத் தகர்த்து, அதைக் காக்க மேற் கொண்ட போர் மற்றொன்று; அது நொச்சி; என இரண்டாகக் கொள்ளும் நிலையில் அரணை அழிக்கும் நிகழ்ச்சி உழிஞையில் கூறப்படுவதே முறையாம். அரணை அழிப்பார், அரணுக்கு உரியரல்லாத பகைவராவரே யல்லாது, அரணுக்கு உரியராகார். ஆகவே அரணழிக்கும் செயல், அரணழிவு கூறுவதாகிய உழிஞையில் இடம் பெறுவது பொருந்துமே யல்லாது அரண் காவல் கூறுவதாகிய நொச்சியில் இடம் பெறுவது பொருந்தாது. ஆகவே எயில்தனை அழித்தல் என்ற துறையினைப் பு.வெ. மாலையார், நொச்சியில் வரிசைப்படுத்தியிருப்பினும், அது உழிஞையில் வரிசைப் படுத்துவதற்கு உரியதே என அறிக. துறைகளை இது போல் இடம் பெயர்த்து வைத்திருப்பது, பு.வெ. மாலையில் இவ்வொரு நிகழ்ச்சியில் மட்டும் காணக்கிடப்பது அன்று; இதுபோல் மேலும் பல உள.

உழிஞையாவது அரணை முற்றிக் கொள்ளுதல் என்று பொருள் கூறிய பு.வெ. மாலையார், "முடிமிசை உழிஞை குடி ஒன்னார் கொடிநுடங்கு ஆரெயில் கொளக்கருதின்று" (கொளு: 95), அரண்கோடல் பற்றிய விதிமுறை வகுக்கும் அவ்வுழிஞைப்படலத்துள், "ஆரெயில் உழிஞை" என்ற துறையொன்றைக் கொண்டு, பகைவனுக் குரிய அரணின் பற்றற்கரிய வலிமையைப் பாராட்டுவது அதன் பொருளாம்-" வாஅள் மறவர் வணங்காதார், நீ இள் மதிலின் நிலை உரைத்தன்று!" (கொளு; 105) எனக் கூறிப் பின்வரும் வெண்பாவையும் மேற்கொள் செய்யுளாகக் கொண்டுள்ளார்.

"மயில்கணத்து அன்னார் மகிழ்தேறல் ஊட்டக்
கயில்கழலார் கண்கனல் பூப்ப – எயில்கண்ணார்
வீயப்போர் செய்தாலும், வென்றி அரிதரோ
மாயப்போர் மன்னன் மதில்."

அரண் கொள்ளும் அரசன் புகழ்பாடுவதே உழிஞை யாம் எனில், அதில் அவனால் பற்றமாட்டா அரணின் புகழ்பாடல் இடம் பெறுவது பொருந்தாது. ஆகவே தன் அரணை வளைத்துக் கொண்டிருக்கும் பகைப்படையை அழித்துத் தன் அரணைக் காத்துக்கோடலே உழிஞையாம் எனத் தொல்காப்பியர் கொண்டது போல் ஒரு துறையாகக் கொள்ளாமல், அரணை முற்றிக் கொள்வது உழிஞை, அதை மீட்டுக்கோடல் நொச்சி என இரு வேறு துறைகளாகக் கொள்ளும் நிலையில், அரண் பெருமைபாடும். "ஆரெயில்" என்ற அத்துறை நொச்சியில் இடம் பெறற்கு உரியதேயன்றி, உழிஞையில் இடம் பெறுதற்கு உரியதன்று. அவ்வாறாகவும், பு.வெ. மாலையார் அதை உழிஞைக்கண் வைத்தே விளக்கியுள்ளார். துறைகள் வைப்பு முறையில், பு.வெ. மாலையார் செய்த மற்றொரு பிழை இது. நிற்க.

புறத்தோன் போர் முறை மேற்கொள்ள, அவன் படை புத்துணர்ச்சி கொண்டு போரிடத் தொடங்கியதால், அரணைக் காத்து நிற்கும் படை அத்தாக்குதலைத் தாங்க மாட்டாது புறங்காட்டுவது இயல்பே. படை புறங் காட்டிற்று என்பதாலேயே அரணுக்குரியான் அடிபணிந்து போய்விடுவதில்லை. "புறத்தோன், புகுந்து போரிடாது வாளா கிடந்தமையால், அரண் காவல் பொறுப்பினைப் படைவீரர்பால் விடுத்து யான் வாளா இருந்துவிட்டதன் விளைவு இது. அப்பொறுப்பற்ற நிலையினை மேற் கொள்ளாது யானும் விழிப்புணர்ச்சியோடு இருப்பின் இது நேர்ந்திராது!" என்ற உணர்வு வரப்பெற்றதும், அரணுக்

குரியான், அழிந்தோடி வரும் படையினை அணுகி, ஊக்கமும் உணர்வும் ஊட்டுவன். அரண் காவல் பொறுப்பினைத் தானே ஏற்றுப் போர்க்களம் புகுவன். படைத்தலைவன் இன்மையால் படை அழிந்துவிடுவது இயல்பே. 'நிலைமக்கள் சாலஉடைத்து எனினும் தானே தலைமக்கள் இல்வழி இல்" (குறள்: 770) என்ற வள்ளுவர் வாக்கினை நினைவு கூர்க. பெருகிவரும் வெள்ளத்தை இடைநின்று தடுத்து நிறுத்தவல்ல அணைபோல், பாய்ந்து வரும் பகைவர் படைவரிசை முன், தான் ஒருவனாகவே புகுந்து போரிட்டு வெற்றி காண்பன். ஒரு பெரிய படையை, மற்றொரு பெரியபடை வெற்றி கொள்வதே உலகியல். ஆனால் வெள்ளம்போல் பரந்த பெரிய படையைப், பகைப் படையைச் சேர்ந்த ஒரு வீரன், தனித்துப் போராடி வெற்றிகொள்வது உண்மையில் வியப்பிற்கு உரியதே ஆம். "ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று; இவ்வுலகத்து இயற்கை; இன்றின் ஊங்கோ கேளலம்... புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க, ஒரு தானாகிப் பொழுது களத்து அடலே" (புறம்:76) என, அச்செயற்கரும் செயலைப் புலவர்களும் வியந்து பாராட்டி யுள்ளமை யுணர்க. அதனால், புறத்தோன் புதுப்புது முறைகளை மேற்கொண்டு போர் புரிந்ததன் பயனாய்த் தோற்று ஓடிவரும் தன் படையைத் தடுத்து நிறுத்தியவாறே தனித்துக் களம்புகுந்த அரணுக்குரியான் செயல் ஆற்றவும் வியத்தற் குரியதாகவே தொல்காப்பியனார், அதைப் புதுமையினும் புதுமை எனப் போற்றிப் புகழ்வாராயினர். அதுவே, "ஒருதான் மண்டிய புதுமை." இதையே, பு.வெ. மாலையார், "அழிபடை தாங்கல்" எனப் பெயரிட்டுப் பாராட்டி யுள்ளார்.

## புறத்தோன் அணங்கிய பக்கம்:

அரணை முற்றியிருப்பவன், இறுதியாக அரண் மதிலை அழிக்கத் தலைப்பட்டு விட்டான் என்பதை அறிந்து கொண்டதும், அரணுக்குரியான், இனியும் வாளா அடங்கிக் கிடப்பதில் பயனில்லை; பகைவன்முயற்சியை முறியடிக்க முனைதல் வேண்டும் எனத் துணிவன்; அவ்வாறு துணிந்தவன், அப்புறப் பகைவனை முறி யடிக்கும் போரினை அரணுக்குள்ளேயே மேற்கொள்வது இயலாது. பகைவன் முறையே காவற்காட்டை அழித்து, அகழியைத் தூர்த்துப் புறநகரை அடைந்து ஆங்கிருந்த வாறே அரண்மதிலை அழிக்க முனைந்துள்ளான் ஆதலின், அவன் படையை அப்புற நகரிலேயே எதிர்த்துப் போராடுதல் வேண்டும். அதனால், அரணுக்குரியான் அரண்வாயிலைத் திறந்து கொண்டு புறநகர் வந்து ஆங்கு அரண் மதில் அழிப்பதில் ஈடுபட்டிருக்கும் அப்பகைப் படையைச் சாடுவான். இவ்வாறு திடுமென வந்து தாக்கிய அவன் தாக்குதலைத் தாங்க மாட்டாது பகைப்படை, அரண் மதில் அழிப்பதைக் கைவிடுவதோடு, அப்புறநகர் விட்டே ஓடிவிடும். ஆனால், அப்போரில் அரணுக் குரியான் படை வரிசையிலும் சிலர் உயிரிழந்து போதல் உண்டு. உயிரிழந்தார் எனினும் அரண்மதிலுக்கு வர இருந்த அழிவைக் காத்த பெருமையில் அவர்க்கும் பங்குண்டா தலின், வென்றாரைப் போலவே அவரும் பாராட்டுக்குரிய வராவர். அப்பாராட்டைக் கூறுவதே "ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன்பாகி" என்ற தொடரால் பெயர் பெறும் "பாசிமறன்" என்ற துறை. பு.வெ. மாலையில், "மறனுடைப் பாசி" எனவரும் துறை இதுவே. "மறப்படை மறவேந்தர் துறக்கத்துச் செலவுரைத்தன்று."

"பாயினார் மாயும் வகையால், பலகாப்பும்
ஏயினார்; ஏய இகன்மறவர் – ஆயினார்,
ஒன்றியவர் அற ஊர்ப்புலத்துத் தார்தாங்கி
வென்றி அமரர் விருந்து."
–பு.வெ.மாலை: 87

*"வினைபகை என்றிரண்டின் எச்சம், நினையுங்கால் தீயெச்சம் போலத்தெறும்" என்றார் வள்ளுவர். பகைப்படையைப் புறநகரிலிருந்து துரத்திவிட்டதோடு போர் ஒழிந்துவிட்டதாக எண்ணி அமைதி கொள்வது ஆகாது. அதை அகழிக்கு அப்பாலும் துரத்தி அடித்து அறவே அழித்தல் வேண்டும். அதனால், புறநகரில் வெற்றி கொண்ட அரணுக்குரியான், பகைப்படையைத் துரத்திச் சென்று அகழிக் கரையில் அருஞ்சமர் ஆடி, அழித்து வெற்றிகொள்வன். அப்போரிலும் அவன் தன் வீரர் சிலரை இழப்பதும் உண்டு. புறநகர்ப் போரில் உயிரிழந்தார் போலவே, அகழிப் போரில் அழிந்தவர்களும் பாராட்டுக் குரியவராவர். அதைக் கூறுவதே "நீர்ச்செரு வீழ்ந்த பாசி." "அருமிளையொடு கிடங்கு அழியாமைச் செருமலைந்த சிறப்புரைத்தன்று" என்ற கொளுவாலும்,*

"வளையும் வயிரும் ஒலிப்ப வாள்வீசி
இளையும் கிடங்கும் சிதையத் – தளைபரிந்த
நோனார் படைஇரிய நொச்சி விறல்மறவர்
ஆனார் அமர்விலக்கி ஆர்ப்பு!"

*என்ற மேற்கோட் செய்யுளாலும் இத்துறைக்கு விளக்கம் தரும் பு.வெ. மாலை, இத்துறைக்குப் பெயரிடுங்கால், "நீர்ச்செரு" எனப் பெயரிடுவதற்குப் பதிலாக "ஊர்ச்செரு" எனப் பெயரிட்டுப் பிழை புரிந்துளது.*

*அரணும் அத்துணை ஆற்றல் உடையதன்று; அரணுக்குரியானும் பெரும் படை உடையனல்லன்;*

ஆனால், அரணைக் கைக்கொண்டால் அடையலாகும் பொருட் செல்வமோ அளவிறந்தது என்ற நினைவால், அரணை வளைத்துக் கொண்ட பகைவன் காவற் காட்டைக் கடந்தாயிற்று; அகழியைத் தூர்த்தாயிற்று; புறநகர்க் காவற்படையை அழித்தாயிற்று; அரண்மதிலைக் கடக்கவேண்டுவது ஒன்றே எஞ்சியுள்ளது; அது முடிந்தால் அரண் நமதே என்ற நினைவால் செருக்குண்டிருக்கும் சமயம், அரணுக்குரியானால் திடுமெனத் தாக்குண்டமை யால் பேரழிவிற்கு உள்ளாகிப் புறங்காட்டி ஓட வேண்டியதாயிற்று. இவ்வாறு அரணை வளைத்துக் கொண்டு புறத்தே கிடந்த பகைவனுக்கு நேர்ந்த பெருங்கேட்டையே முடிந்த முடிபாகப் "புறத்தோன் அணங்கிய பக்கம்" என்ற தொடரால் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

## உடன்றோர் வருபகை பேணார் ஆர்எயில்:

தன் அரண்மீது ஆசைகொண்டு, பெரும்படையோடு வந்து வளைத்துக்கொண்டதன் விளைவால் அரணகத்து மக்கள் பட்ட அல்லலும், அரணுக்கு நேர்ந்த அழிவும் அரணுக்குரியானுக்கு ஆற்றொணாச் சினம் அளித்தது. பகைவனை வென்று துரத்தியதோடு அவன் உள்ளம் அமைதி யுற்றிலது. படை கொண்டு வந்த பகைவன் அடங்கா ஆசையின் விளைவினை எண்ணி எண்ணி அழுதல் வேண்டும்; அவனைக் காண்பார் அனைவரும் அவனை எள்ளி நகையாடி இகழ்தல் வேண்டும் என்றும் எண்ணிற்று அவன் உள்ளம். அதனால் அரசுரிமையின் சின்னமாய், அவன் தலையில் அணிந்திருந்த மணி மகுடத்தைக் கைக்கொண்டு அழித்து, அப்பொன் கொண்டு கழல் பண்ணிக் காலில் அணிந்து கொண்டான். அதன்

*பின்னரே அவன் சினம் தணிந்தது. பகைவன் அடைந்த தோல்வியின் இக்கொடுமையினையும், தான் பெற்ற வெற்றியின் பெருமையினையும் ஒரு சேர விளக்குவதே, "இகல் மதில் குடுமி கொண்ட மண்ணு மங்கலம்" என்ற துறை.*

"வென்றி பெற வந்த வேந்தை இகன்மதில்வாய்க்
கொன்று குடுமி கொளக் கண்டு.... தன்பால்
விருந்தினர் வந்தார்க்கு விண் விருந்து செய்தான்
பெருந்தகை என்று ஆர்த்தார் பிறர்."

*பகைவன் முடிப் பொன் அழித்துப் பண்ணிய கழல் புனைந்து வெற்றி விழாக் கொண்டாடி மகிழ்ந்த அவன், அவ்வெற்றியைத் தேடித்தந்த வாள் வீரரை மறந்தானல்லன். அவர் துணையின்றி அரணைக் காத்தல் இயலாது என்பதை உணர்ந்திருந்தமையால், அவர்க்குச் சிறப்பும் பெருமையும் அளிக்க விரும்பி அரண் காவல் போரில் பங்கு கொண்ட ஒவ்வொருவரையும் தனித்தனியே அழைத்துப் பாராட்டுவதினும், அவர் கையிற் கிடந்த அருந்துணை புரிந்த வீர வாளுக்குச் சிறப்பளிப்பதே சாலவும் பொருந்தும் என எண்ணியமையால், வீரவாளைத் தூயநீராட்டிப் பொட்டிட்டுப் பூவணிந்து வீர உலாவந்து விழாக் கொண்டாடினான். இவ்வாறு வீரவாளுக்கு விழா எடுப்பதன் முகத்தான், வீரர்க்கு விழாக் கொண்டாடுவதே "வென்ற வாளின் மண்" என்ற வாள் மண்ணு மங்கலத் துறை.*

"தீர்த்த நீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்,
கூர்த்த வாள்மண்ணிக், கொடித்தேரான் – போர்த்தும்
இடியார்பணைதுவைப்ப இம்மதிலுள் வேட்டான்,
புடையார் அறையப் புகழ்."

– பு.வெ. மாலை: 121.

வீரர்க்கு விழாச் செய்து நன்றியைத் தெரிவித்துக் கொண்டவேந்தன். அவ்விழாவால் வீரர்தம் புகழ் பெருகும் என்றாலும் அவர் வாழ்வு வளம் பெற அது துணை புரிவதாகாது. அரணைக் காத்துத் தனக்கு வாழ்வளித்த வீரர்க்கு வெறும் விழாக் கொண்டாடி விட்டதனாலேயே, அவர்க்குத் தான் ஆற்ற வேண்டிய நன்றிக் கடன் தீர்ந்ததாகி விடாது. அவர் உள்ளத்தில் இன்பம் குடி கொண்டது போல், அவர் இல்லத்திலும் இன்பம் குடி கொள்ளுதல் வேண்டும் என உணர்ந்தான். அதனால், அப்படை வீரர் ஒவ்வொருவரையும் போர்க் களத்தில் அவர் ஆற்றிய அருஞ் செயலின் தகுதிக்கேற்ப முன்னும் பின்னுமாக முறையே அழைத்துப் பொன்னும் பொருளும், நன்செயும் புன்செயும் வழங்கி அவரை வாழ்வித்தான். அதைக் கூறுவதே "தொகை நிலை."

"வில்லைக் கவைஇக் கணைதாங்கு, மார்பின்
மாதாங்கு எறுழ்த்தோள் மறவர்த் தம்மின்!
கல்லிடித்து இயற்றிய இட்டுவாய்க் கிடங்கின்
நல்எயில் உழந்த செல்வர்த் தம்மின்!
கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரசம் ஒவில கறங்க
எரிநிமிர்ந் தன்ன தானை நாப்பண்
பெருநல் யானை போர்க்களத்து ஒழிய
விழுமிய வீழ்ந்த குருசிலர்த் தம்மின்!
புரையோர்க்குத் தொடுத்த பொலம்பூந் தும்பை
நீர் யார் என்னாது முறை கருதுபு சூட்டிக்
காழ்மண்டு எஃகமொடு கணையலைக் கலங்கிப்
பிரிபிணை அரிந்த நிறம் சிதை கவயத்து
வானத் தன்ன வளநகர் பொற்ப
நோன் குறட்டன்ன ஊன் செய் மார்பின்
உயர்ந்த உதவி ஊக்கலர்த் தம்மின்!

நிவந்த யானைக் கணநிரை கவர்ந்த
புலர்ந்த சாந்தின் விரவுப் பூந்தெரியல்
பெருஞ்செய் ஆடவர்த் தம்முன்! பிறரும்
யாவரும் வருக! ஏனோரும் தம்மென,
வரையா வாயில் செறாஅது இருந்து
பாணர் வருக! பாட்டியர் வருக!
யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக! என
இருங்கிளை புரக்கும் இரவலர்க்கெல்லாம்
கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் மீசி."

—மதுரைக்காஞ்சி: 728–752.

*அரணுக்குரியான் கொண்டாடிய இவ்விழாவும், கொடுத்த அக்கொடையும் அவனுக்கும் அவன் வீரர்க்கும் மகிழ்ச்சி ஊட்டுவது ஒன்றே குறிக்கோளாகக் கொண்டவை அல்ல. அவை காணும் பிற குறுநில மன்னர்களும், பெருநில வேந்தர்களும், அவ்வரண் மீது ஆசை கொள்வது எத்துணைப் பெரும் பிழை; எத்துணைப் பெருங்கேட்டைத் தர வல்லது என்பதை உணர வைத்துப் பகைவரால் பற்றற்கரியது அவ்வரண் என்ற அவ்வரண் பெருமையை உலகறியச் சாற்றுவதே அவற்றின் உண்மைக் குறிக் கோளாம். ஆகவே, இவை யெல்லாம் உள்ளடங்க, "உடன்றார் வருபகை பேணார் ஆரெயில்" என்ற துறையினை உழிஞைத் திணையின் முடிந்த முடிபாகக் கூறியுள்ளார், ஆசிரியர் தொல்காப்பியனார்.*

*ஆக, பகைவன் பெரும் படையோடு வந்து வளைத்துக் கொண்டு அரிதின் முயன்றாலும், அரண், அழிக்கலாகாத் திண்மையும், பற்றலாகாப் பெருவலியும் உடையது என்பதைக் காட்டுவதும், அப்பெரு நிலையை நிலை நாட்டப் போராடி வெற்றி காணும் வேந்தனையும் வீரரையும் பாராட்டுவதும் ஆகிய அரண் காவல் ஒன்றே, உழிஞைத் திணையின் கருப் பொருள் என்பதை உறுதி*

*செய்யவே, அரணின் பற்றற்கருமை பாராட்டும் "ஆரெயில் உழிஞை"த் துறையினை, உழிஞைத்திணையின் இறுதித் துறையாக அமைத்துள்ளார் ஆசிரியர்.*

"உழிஞை தானே மருதத்துப் புறனே;
முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற்று ஆகும் என்ப."

"அதுவே தானும் இருநால் வகைத்தே."

"கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்,
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்,
தொல் எயிற்கு இவர்தலும், தோலது பெருக்கமும்,
அகத்தோன் செல்வமும், அன்றி முரணிய
புறத்தோன் அணங்கிய பக்கமும், திறற்பட
ஒருதான் மண்டிய குறுமையும், உடன்றோர்
வருபகை பேணார் ஆரெயில் உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே."

"குடையும் வாளும் நாள்கோள் அன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமும் கடைஇச்
சுற்றமர் ஒழிய வென்று கைக்கொண்டு
முற்றிய முதிர்வும், அன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியும், மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்,
நீர்ச்செரு வீழ்ந்த பாசியும், அதா அன்று,
ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்,
மதில்மிசைக்கு இவர்ந்த மேலோர் பக்கமும்,
இகல்மதில் குடுமிகொண்ட மண்ணு மங்கலமும்,
வென்ற வாளின் மண்ணொடு ஒன்றத்,
தொகைநிலை என்னும் துறையொடு தொகைஇ
வகைநான் மூன்றே துறை என மொழிப"

—தொல்: புறம்: 66, 67, 68, 69

4

# ஆணவப் போர்

ஓர் அரசன், தன் நாடு வளம் குறைந்து வறுமை மிக்க வழியே, வளம் கொழிக்கும் நாட்டின்மீது போர் தொடுத்துப் போவன் என்பதே போரின் பொது இயல்பாம் என்றாலும், பொருட் குறைபாடு இடக் குறைபாடுகள் மட்டுமே போருக்காம் அடிப்படைக் காரணங்களாகி விடா. அளந்து காணலாகா வளமும், எல்லை காணமாட்டா இடமும் கொண்டதான ஒப்பற்ற பேரரசினைப் பெற்று விட்டமை யினாலேயே, நாடாளும் அரசர் நிறைமனம் கொண்டவ ராகி விடார். அந்நிலையிலும் அவர் உள்ளம் ஆராமை யுடையதாதலும் உண்டு. மண்ணையும் பொன்னையும் பெற்றுவிட்ட அவர் உள்ளம், புகழ்மீது பெருங்காதல் கொள்ளும். மண்ணாசை பொன்னாசைகளைக் காட்டி லும், புகழாசை ஆற்றல் வாய்ந்ததாகும். பொன்னுக்கும் பொருளுக்கும் மண்ணுக்கும் மங்கைக்கும் அடிமைப் படாதவரும் புகழுக்கு அடிமையாகி விடுவர். புகழ் உரைக்கு அடிமைப்பட்டுப், பொன்னையும் பொருளையும் வாரி வழங்கிய வள்ளல் பெருமக்கள் பண்டைத் தமிழகத்தில் மிகப் பலராவர். புகழ் விரும்பித் தம் பொன்னுயிரைக் கொடுத்த கொடையாளரும் உளர். அத்தகைய புகழ்தரு வழிகளாக, அறிவாண்மைகள் எனவும், அருள் அன்புகள்

எனவும் பலவுளவேனும், பண்டைத் தமிழர்கள் ஆண்மை ஆற்றல்கள் வழிப்பெறலாகும் புகழையே பெறற்கரிய பேறாகக் கருதினார்கள். அக்காலச் சூழ்நிலையும் அதற்கே துணை நின்றது; ("சுழலும் இசை வேண்டி, வேண்டா உயிரார் கழல் யாப்புக், காரிகை நீர்த்து" என்ற வள்ளுவர் வாக்கும் அதற்கே அரண் செய்வது அறிக.) பண்டைத் தமிழகத்தில் அறிவு சான்ற ஆன்றோர்களும், பண்புமிக்க பெரியோர்களும், வாரி வழங்கிய வள்ளல்களும் மிகப் பலராக வாழ்ந்திருந்தாலும், இறந்தாரின் பெயரும், பீடும், பெருமையும். பொறித்தகல்லை அவர் உடல் இட்டு மூடிய இடத்தில் நாட்டி, வழிபாடாற்றும் வழக்கத்தினை, அக்கால மக்கள், போர்க் களத்தில் மாண்ட பெருவீரர் மாட்டு மட்டும் கொண்டனரேயல்லது, ஆன்றோரும் சான்றோரும் அருள்மிகு உள்ளத்தோருமாகிய அவ்வகையினர் மாட்டுக் கொண்டாரல்லர். அக்கால நிலை அதுவாகவே, கடல் போல் பரந்த பெரு நாடும், மலைபோல் குவிந்த பெரு வளமும் வாய்க்கப் பெற்றமையால் அவை காரணமாகப் போர் மேற்கொள்ள வேண்டாப் பேரரசு செலுத்தும் வேந்தர்களும், வெற்றிப் புகழ்பால் வேட்கை உடையராகிப் பிற நாடுகள் மீது படை தொடுப்பதை விரும்பி மேற் கொண்டார்கள்.

தானே பெருவீரன்; அகில உலகமும் தனக்குத்தலை வணங்குதல் வேண்டும்; தன் தாள் பணிதல் வேண்டும் என்ற ஆணவ உணர்வுடையனாகி, ஒருவன் போர் மேற்கொண்டு எழுவானாயின், அவன் ஆணைக்கு உலக வீரர் அனைவருமே அடங்கி விடுவாரல்லர். அவருள் யாரேனும் ஒரு வீரன் அவனை அவ்வாறே விட்டால், அவன் ஆசை அடங்காது; ஆகவே அவன் ஆணவத்தை

அடக்குதல் வேண்டும் எனத் துணிந்து, அவனை வென்று அடக்க, அவனோடு போர் தொடுத்துப் போவதும் உண்டு. அவ்வாறு மேற்கொள்ளும், அவ்வாணவ அழிப்புப் போருக்குத் தமிழர்கள் தும்பைப் போர் எனும் பெயர் சூட்டிப் பாராட்டியுள்ளார்கள்.

பொருளாசை தூண்டப் பிற நாட்டின் ஆனிரை கவர்தல் காரணமாக மேற் கொள்ளும் போரும், மண்ணாசை தூண்டப், பிறநாட்டின் ஒரு பகுதியைத் தனதாக்கிக் கோடல் காரணமாக மேற்கொள்ளும் போரும், (அவ்விரு ஆசைகளையும் நிறைவேற வொட்டாது இடை நின்று தடுக்கும் அரணழிவு குறித்து மேற்கொள்ளும் போரும்) எவ்வாறு அறனொடு படா அழிவுப் போர்கள் ஆகுமோ, அவை போலவே, தன் ஆற்றலை அகில உலகமும் அறிந்து பாராட்ட வேண்டும் என்ற ஆணவம் காரணமாக மேற்கொள்ளும் போரும் அழிவுப் போரே ஆகும். அது போலவே முற்கூறிய மூவகை அழிவுப் போர்களுக்கும் மாறாகப், பொருளாசை காரணமாக வந்தானை அழிக்க மேற்கொள்ளும் போரும், மண்ணாசை காரணமாக வந்தானை அழிக்க மேற்கொள்ளும் போரும், அரண் அழிக்க வந்தானை அழிக்க மேற்கொள்ளும் போரும் பாராட்டத்தக்க அறப்போர்களாதல் போலவே, ஆற்றல் காட்ட வந்தானை அழிக்க மேற்கொள்ளும் போரும் பாராட்டத்தக்க அறப் போராகும்.

பண்டைத் தமிழ் மக்கள் மேற்கொண்டு நடாத்திய போர்களின் இவ்வுண்மை நிலையை உள்ளவாறு உணர்ந்தவர் தொல்காப்பியராதலின், தும்பைப் போர் எனப்படுவது, மைந்து பொருளாகப் போர் தொடுத்து வந்த

வேந்தன் மீது போர் தொடுத்துப் போய் அழிப்பதாகும் என விதி வகுத்துள்ளார்.

"தும்பைதானே நெய்தலது புறனே,
மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்று தலை அழிக்கும் சிறப்பிற்று என்ப."

ஆசிரியர் தொல்காப்பியனாரின் உள்ளுணர்வையோ தமிழர்கள் மேற்கொண்ட அறப் பெருமையையோ உணர மாட்டாத, ஐயன் ஆரிதனார் போலும் பிற்கால இலக்கண ஆசிரியர்கள், போரில் பெறலாகும் வெற்றிப் புகழ் கருதிப் போர் தொடுத்துப் போவதே தும்பை எனப் பழித்து ஒழிக்கத் தக்கதான அழிவுப் போரையே பாராட்டற்குரியதாகக் கூறுவது தமிழர் பண்பாட்டு நெறியோடு பொருந்துவதாகாது.

"செங்களத்து மறம் கருதிப்
பைந்தும் பை தலை மலிந்தன்று."

–பு.வெ.மா கொளு: 127

தும்பை என்ற இப்புறத்திணை, கடலும் கடல் சார்ந்த இடமும் ஆகிய நெய்தல் என்ற அகத்திணைக்குப் புறம் ஆவது ஏன் என்பதற்கான காரணம் காட்ட வந்த ஆசிரியர் இளம்பூரணர், "இருபெரு வேந்தரும் ஒரு களத்துப் பொருதலின், அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களரும் மணலும் பரந்த வெளி நிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல் சார்ந்த வழியல்லது இன்மையானும், நெய்தற்கு ஓதிய ஏற்பாடு, போர்த் தொழிற்கு முடிவாதலானும் (தும்பை) நெய்தற்குப் புறனாயிற்று," என்றும், ஆசிரியர் நச்சினார்க்கினியர், "நெய்தற்குரிய பெருமணல் உலகம் போலக் காடும் மலையும் கழனியுமல்லாத களரும் மணலும் பொருகளமாக

வேண்டுதலானும்... பிற காரணங்களானும் நெய்தற்குத் தும்பை புறனாயிற்று" என்றும் காரணம் காட்டியுள்ளனர்.

பண்டைத் தமிழர்கள் மேற்கொண்ட போர், இத் தும்பைப் போர் ஒன்று மட்டுமே அன்று; ஆனிரை, நாட்டு எல்லை, அரண் என இவைபோலும் காரணங்கள் கருதி வேறுபல போர்களும் அவர்கள் மேற்கொள்வது உண்டு. அவற்றுள் ஆனிரை காரணமான போர், அது இயங்கும் இடமாம் மலை நாட்டகத்திலேயே நடைபெறும். அது போலவே அண்டை நாட்டு மண் பற்றிய போர் அந்நாட்டு எல்லைப்புறங்களில் மட்டுமே நிகழும். நாட்டு எல்லை காடே ஆதலின், அப்போர் நிகழ் இடம் காடே ஆகும். அரண்போர், அரண் மிக்க இடந்தேடி வைத்துக் காக்க வேண்டிய அரியநிதி மிகுந்த இடத்திலேயே நிகழும். அந்நிதி, நகரங்களிலேயே ஈட்டப்படும். அத்தகைய நகரங்கள், வயல் வளம் சார்ந்த ஆற்றங் கரைகளிலேயே இடம் பெறும். அதனால் அரண் போர் நிகழும் இடம், செந்நெல்லும், கரும்பும் சிறக்க விளையும் நன்செய்கள் மலிந்த மருதநிலமே ஆகும். ஆக, பண்டைத் தமிழகத்துப் போர்கள் களரும் மணலும் பரந்த கடலைச் சார்ந்த நிலத்தில் மட்டுமே நிகழவில்லை. நாட்டிலும் நடைபெற்றன; மலையிலும் நடைபெற்றன; கழனிகளுக்கிடையேயும் நடைபெற்றன.

போர் நிகழ்தற்காம் காரணமும் சூழ்நிலையும், எங்கு எப்போது உண்டாகி விடுகின்றனவோ, அங்கு அப்போதே அது நடைபெற்று விடும். "போர் நிகழ்தற்கேற்ற இடம் இது அன்று; அதற்கேற்ற பொழுதும், இது அன்று; ஆகவே, போரிட வேண்டிய நிலை பிறந்துவிட்ட போதிலும், அது நிகழ்தற்கேற்ற இடம் தேடிச் சென்று போரிடுவோம்!" என்று, போராடும் வீரர்கள் ஒப்பந்தம் செய்து கொண்டு

போரிடுவதில்லை. ஆகவே ஆனிரை காரணமாகப் போராடத் துணிந்தவர்கள், அதற்காம் காரணம் எழுந்த இடமாகிய குறிஞ்சி நிலம், தம் இரு படைகளும் நின்று போரிடற்கியலா மலை நாடாக உளது; ஆகவே, தம் படைகள், அவ்விடம் விட்டகன்று மணல் பரந்த கடற் கரைக்கண் சென்று போரிடுக, என்று ஆணை பிறப்பிப்பது இல்லை. மாறாக, அப்போர், அம்மலையகத்து மண்ணி லேயே நடைபெறும். அது போலவே, நாட்டெல்லை காரணமாக நிகழும் போர் நாட்டெல்லைக்கு அப்பாற் பட்ட நிலத்தில் நிகழாது, நாட்டெல்லையாக விளங்கும் காட்டகத்திலேயே நிகழும். அது போலவே அரண் காரணமாக நிகழும் போர் அது அமைந்திருக்கும் இடத்திற்கு அப்பாற்பட்ட நிலத்தில் நிகழாது. அது அமைந்திருக்கும் இடமாம் வயல் நிலத்திலேயே நிகழும்.

இரு பெரும் வேந்தர்கள் போரிடற்கேற்ற இடம், காடும் மலையும் கழனியும் ஆகாது; களரும் மணலும் பரந்த கடல் நிலமே ஏற்புடையது எனக் கூறும் அவ்வாசிரியர்கள் இருவருமே, ஆனிரை குறித்த போர் விளக்கம் கூறும்போது "வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயது எவ்வாறெனின், நிரை கோடல் குறிஞ்சிக்குரிய மலை சார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயின் பிற நாட்டு ஆனிரையைக் களவிற் கோடல் ஒருபுடை குறிஞ்சிக்கு உரித்தாகிய களவோடு ஒத்தலானும் அதற்கு அது புறனாயிற்று என்க" (தொல். பொருள் இளம்பூரணம். 59) என்றும், நாட்டெல்லை பற்றிய போர் விளக்கத்தின் போது, "அதற்கு (வஞ்சிக்கு) இது (முல்லை) புறனாகியவாறு என்னையெனின், "மாயோன்மேய காடுறை யுலகமும்,' 'கார்காலமும் முல்லைக்கு முதற் பொருளாதலானும்,

*பகைவயிற் சேறலாகிய வஞ்சிக்கு நிழலும் நீரும் உள்ள காலம் வேண்டுதலானும் பருமரக் காடாகிய மலைசார்ந்த இடம் ஆகாமையானும், அதற்கு இது சிறந்தது என்க" (தொ. பொ. இளம்பூரணம்.64)* என்றும், *"முதல் எனப்பட்ட காடுறையுலகமும், கார் காலமும் அந்நிலத்திற்கேற்ற கருப்பொருளும் அரசன் பாசறைக் கண் தலைவியைப் பிரிந்து இருத்தலும்,* **அவன் தலைவி அவனைப் பிரிந்து மனைவயின் இருத்தலும்** *ஆகிய உரிப்பொருளும் ஒப்பச் சேறலின், வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று. வெஞ்சுடர் வெப்பமும் நீக்கத் தன்பெயல் பெய்து, நீரும் நிழலும் உணவும் பிறவும் உளவாகிய காட்டகத்துக், களிறு முதலியவற்றோடு சென்றிருத்தல் வேண்டுதலின் வஞ்சிக்கும், அம்முதல் கரு உரியும் வந்தனவாம்" (தொ.பொ. நச்சினார்க்கினியர்.61)* என்றும், *அரண் பற்றிய போர் விளக்கத்தின்போது, "வஞ்சியிற் சென்ற வேந்தனொடு போர் செய்தல் ஆற்றாது உடைந்து, மாற்று வேந்தன் அரண் வலியாகப் போர் செய்யுமாகலானும், அவர் நாட்டகத்து ஆகலானும், அவ்வழிப் பொருவார்க்கு விடியற் பொழுது காலமாகலானும், அதற்கு (மருதத்திற்கு) இது (உழிஞை) புறனாயிற்று" (தொ.பொ. இளம்பூரணம்.67)* என்றும், *"இரு பெரு வேந்தர் தம்முள் மாறு கொண்ட வழி எதிர் செலற் காற்றாது போய் மதிலகத்திருந்த வேந்தன் மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்தாதலானும், அம்மதிலை முற்றுவோனும் அந்நிலத்து இருத்தலானும், ஒருவன் வாயில் வேண்டத் திறவாது அடைத்திருத்தல் ஒப்புமையானும், உள்ளிருந்தவனும், புறப்பட விரும்புதலானும், மருதம் போல் இதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானும், சிறு பொழுதினும் விடியற்காலமே போர் செய்தற்குக்*

காலமாதலானும் உழிஞை மருதத்திற்குப் புறனாயிற்று. மருத நிலத்து மதிலாதல் 'அக நாடு புக்கு அவர் அருப்பம் வெளவி', 'பிணங்கு கதிர்க் கழனி நாப்பண் ஏமுற்று உணங்கு கலன் ஆழியில் தோன்றும் ஓர் எயில் மன்னன்' என்றதனானும் உணர்க" (தொ.பொ. நச்சினார்க்கினியம். 64) என்றும் கூறியுள்ளனர் அதனால், ஆனிரை காரணமான போர் மலைநாட்டிலேயே நிகழ்வதாகும்; நாட்டெல்லை காரணமான போர் காட்டிலேயே நிகழ்வதாகும்; அரண் காரணமான போர், கழனிகளுக்கிடையிலேயே நிகழ்வ தாகும் என்பதே அவ்வுரையாசிரியர்கள் கருத்துமாம் என்பது புலனாவது காண்க. ஆக, ஆண்டெல்லாம் அவ்வாறு கூறிய அவர்கள், போர் நிகழ்தற்குக் காடும் மலையும் கழனியும் ஏற்புடைய ஆகா; கடலே ஏற்புடைத்து என ஈண்டுக் கூறுவது அறவே பொருந்தாது என்க.

போருக்காம் காரணப் பொருள்களான ஆனிரை, அண்டை நாட்டு எல்லை, அரண், ஆற்றல் என்ற இந்நான்கனுள், எக்காரணம் பற்றிப் போர் எழினும், அப்போர், அக்காரணத்திற்கு உரிய பொருள் நிற்கும் நிலத்திலேயே நடைபெற்று விடும். அதுவே இயல்புமாம்.

ஆக, இதுகாறும் கூறியவாற்றான், ஆனிரை, அண்டை நாட்டு எல்லை, அரண், ஆற்றல் எனப் போருக்காம் காரணம் பல ஆயினும், அவை காரணமாக நிகழும் போர் ஒன்றே; போருக்காம் காரணப் பொருள்களாக விளங்கும் அவை நான்கும் வேறு வேறு நிலத்தன வாயினும் அவை அடிப்படையாகத் தோன்றும் போர் குறிப்பிட்ட ஒரு நிலத்தில் மட்டுமே நிகழும் என்ற பிழையுணர்வு உடையராகிப், போரிடற்கேற்ற நிலமாக இருப்பது, காடும் மலையும் கழனியும் அல்லாத களரும் மணலும் மலிந்த

கடற்கரை நிலமாம் என்றும், ஆகவே இருபெரு வேந்தர் ஒரு களத்துப் போரிடும் நிகழ்ச்சியைக் குறிப்பதாகிய தும்பை என்ற புறத்திணை, நெய்தல் என்ற அகத்திணைக்குப் புறனாயிற்று என்ற அவர்கள் உரை, பொருளொடு பொருந்தாப் புல்லுரையேயல்லது, பொருளொடு பொருந் தும் பொன்னுரை அன்று என்பது விளக்கியவாறாயிற்று என்க.

நாற்புறமும் நீரால் சூழ்ந்த ஒரு பெருநிலப் பரப்பில், ஒரு பகுதியிலிருந்தாளும் அரசன் ஒருவன், தன் ஆற்றலை நிலைநாட்டும் நினைப்பு ஒன்றே கருதித் தன் அண்டை நாடுகள் மீது படையெடுத்துச் செல்லினும், போரில் பெற்ற வெற்றியின் பயனால், அந்நாடுகளும் படுபொருள்களும் அவன் உடைமையாகி விடுவதும் உண்டு. அதனால் மண் கருதாப் போராகத் தொடங்கியது, முடிவில் மண் பற்றியதாகி விடுவதும், தொடக்கத்தில் பொருள் கருதித் தோன்றாத போர் முடிவில் பொருள் குறித்த போராக மாறி விடுவதும் உண்டு. ஆனால், வெற்றிப் புகழ் கருதிய ஒருவன் அப்புகழைக் கடல் கடந்த நாடுகளில் மேற்கொள்ளக் கருதி, ஆங்குச் செய்யும் போர்கள் அவ்வாறு மண்ணாசை உடையவாகவும் மாறிவிடுவது பெரும்பாலும் நிகழ்வ தில்லை. ஆங்கு அவன் பெற்ற வெற்றியின் பயனாய் அந்நாட்டின் மண்ணும் பொன்னும் அவன் உடைமை களாகி விடினும், அவற்றைத் தானே ஆட்சி கொள வேண்டின் அதற்குப் பெரியதோர் அரசமைப்பு வேண்டி யிருக்கும்; கடல் கடந்த நாட்டில், அத்தகைய ஒரு பெரிய அரசமைப்பினை நிலை நிறுத்துவதால் ஆக்கத்தினும் கேடே அதிகமாம் என்ற அரசியல் உண்மையை உணர்ந்து அரசர்கள் அத்தகைய நிலையினை விரும்புவாரல்லர்.

அதனால், கடல் கடந்த நாடுகள், மன்னர்களின் மண்ணாசை பொன்னாசைகளை நிறைவேற்றித் தரும் நிலைக்களங்களாவது பெரும்பாலும் இல்லை. மாறாக அம்மன்னர்களின் மங்காப் புகழாசையினை நிறைவேற்றித் தரும் நிலைக்களங்களாதலே இயற்கையோ டியைந்த நியதியாகும்.

தொடக்கத்தில் போர்ப் புகழ் ஒன்றே குறிக் கோளாகக், கடல் கடந்த நாடுகளில் சென்று போரிடு வாருள்ளும், பலர் மண்ணாசையும், பொன்னாசையும் உடையவராக மாறி விடுவதும் உண்டு. என்றாலும், தாம் தொடக்கத்தில் மேற்கொண்ட குறிக்கோளில் ஒரு சிறிதும் பிறழாமல் இருந்து வெற்றிப் புகழ் ஒன்றே கொண்டு மீள்வோரும் ஒரு சிலர் உள்ளனர். வெற்றி கொண்ட நாடேயாயினும், தம் தாய் நாட்டை விடுத்து, அவ்வயல் நாட்டு அரச வாழ்வை, ஒரு சிலர் தவிர்த்துப், பெரும் பாலோர் விரும்புவதில்லை. அதனால் ஆண்டு அரசமைத்து ஆளாது, ஆங்குப் பெற்ற வெற்றிப் புகழ் ஒன்றை மட்டுமே கொண்டு மீண்டு விடுவர். ஆகவே வெற்றிப் புகழ் ஒன்றே கருதி நிகழும் போர், கடல் கடந்த நாடுகளில் மட்டுமே நிகழும் என்க. ஆகவே மைந்து பொருளாகப் போர்தொடுத்து வருபவன் கடல் கடந்த நாட்டினன் ஆதலும், அவ்வாறு வருவோனை வென்று ஓட்டும் வேந்தன், அவனோடு தொடுக்கும் போர், அவன் தன்நாட்டு மண்ணில் அடியிட்ட அந்நிலையே தொடங்கி விடுவதும், வந்தவன், தான் கருதி வந்ததை மறந்து, தான் ஊர்ந்து வந்த கலம் ஏறிக் கடல் புக்க பின்னரே அப்போர் முடிவுறுதலும் இயற்கையொடு பட்ட நிகழ்ச்சிகளாகும்; ஆகவே, மைந்து பொருளாக நிகழும் போரினைக்

கூறுவதாகிய தும்பை என்ற புறத்திணை, கடலும் கடல் சார்ந்த நிலமும் ஆகிய அவ்விடத்து ஒழுக்கத்தினை உணர்த்துவதாகிய நெய்தல் என்ற அகத்திணைக்குப் புறனாயிற்று என்க.

கிரேக்க மாவீரன் அலெக்சாந்தர், இந்தியப் பெருநிலப் பரப்பு வரையும் படையெடுத்து வந்தது, தன் ஆற்றலை உலகப் பெருவீரர்கள் அனைவரும் அறிந்து பாராட்டவேண்டுமென்ற புகழாசை காரணமாக வந்த போரே ஆகும். அவனைச் சீலம் நதிக்கரையோடு நிறுத்தித் துரத்த வேண்டிப் புருடோத்தம மன்னன் நடத்திய போர், மைந்து பொருளாக வந்தானை வென்றடக்க மேற் கொண்ட போராகும். பண்டைய பேரரசர்கள் அசுவமேத யாகம் செய்ய விரும்பித் தம் பட்டத்துக் குதிரைகளைக் கட்டவிழ்த்து விடுவதும், அவற்றிற்குக் காவலாய் அவற்றின் பின் போகவிட்ட அவ்வேந்தர்களின் படை வீரர்கள், அக்குதிரைகள் புகுந்து ஓடும் நாடுகளிலெல்லாம் தம் வெற்றிக் கொடியினை நாட்டி வருவதும், அம்மன்னர் களின் புகழாசை காரணமான நிகழ்ச்சிகளாம். அவ்வாறு ஓடிவரும் அக்குதிரை, தன் நாட்டு எல்லைக்குள் புகுந்ததும், அதைப் பிடித்துப் பிணித்து விடுவதும் அதன் பின்வரும் வீரர்களை அடித்துத் துரத்தி விடுவதும் மைந்து பொருளாக வந்தானை வென்றடக்கும் நிகழ்ச்சிகளாம்.

கடல் கடந்த நாட்டு வீரர்கள், தம் ஆற்றல் காட்டக் கடல் கடந்து வருவதும், அவரைக் கடற்கரைகண்ணேயே நிறுத்தி வெல்வதுமே தும்பைத் திணையாம் என்றாலும், காலம் செல்லச்செல்ல நாற்புறமும் நீரால் சூழப்பட்ட ஒரு பெருநிலப் பரப்பிலேயே, ஒரு நாட்டைச் சேர்ந்த வீரன், தன் ஆற்றல் காட்டத் தன் அண்டை நாட்டின் மீதே போர்

தொடுத்துப் போவதும், அவ்வாறு போவோனை, அந்நாட்டுக்கு உரியான் வென்று துரத்துவதும் தும்பைத் திணையெனக் கொள்ளப்பட்டது.

தமிழகத்தில் நிலையான அரசு அமையாதாகவே, தமிழர் முறையான போர் நெறிகளைக் கல்லாமையினால் சிறந்த வீரர்கள் தோன்றுவதற்கு வாய்ப்பில்லாது போகவே, தமிழகம் ஆற்றல் குறைந்து விளங்க, அக்காலத்தில், தம் ஆற்றல் காட்டப் பிற நாட்டவர் தமிழகத்தின் மீது போர் தொடுத்து வருவதும், தமிழர்கள் அவர்களை வென்று ஓட்டுவதும் இயல்பாக இருந்தன. கங்கைக்கரைக்கண் பேரரசு அமைத்து ஆண்டவராகிய ஆரியரும் மோரியரும் தமிழகத்தின் மீது போர்தொடுத்து வந்தாராக, அவர்களைத் தமிழ் வேந்தர்களும் வீரர்களும் வென்று துரத்திய வரலாற்றுச் செய்திகள் செந்தமிழ் இலக்கியங்களில் ஆங்காங்கே விளங்க உரைக்கப்பட்டுள்ளன. அவ்வட இனத்தவருள் ஒருவராகிய ஆரியர், சோழர் ஆட்சிக்கு உட்பட்டதும், விற்படை வீரர்களால் காக்கப் பெற்றிருந்தது மான வல்லம் வரையும் வந்து விட்டனர் என்றும், ஆயினும், அவ்வல்லப் பெருநகரைச் சுற்றி அரணாக வளர்ந்திருந்த காவற் காட்டிலேயே, அப்படை அழிந்து ஆற்றல் இழந்து போகுமாறு அடித்துத் துரத்தப்பட்டது என்றும் ஒரு செய்தி கூறுகிறது. “சோழர் வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை ஆரியர் படையின் உடைக.” அதைப் போலவே, தம் நெடிய பெரிய தேர்ப்படை செல்லாதபடி இடை நின்று தடுத்த பெரு மலைகளெல்லாம் உடைத்து வழி செய்து கொண்டு வந்த மோரியர், மோகூர் அரணையும் அணுகி விட்டனர் என்றும், அவர்களைக் கோசர் படைத் தலைவனும், அம்மோகூர்க் குரியோனுமாகிய பழையன்

என்பான் வென்று ஓட்டினான் என்றும் பிறிதொரு செய்தி கூறுகிறது. "வெல்கொடித் துனைகாலன்ன புனைதேர்க் கோசர், தொன் மூதாலத்து அரும்பணைப் பொதியில், இன்னிசை முரசங்கடிப்பிகுத்து இரங்கத், தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர், பணியாமையின் பகைதலை வந்த, மாகெழு தானை வம்ப மோரியர், புனைதேர் நேமி உருளிய குறைத்த, இலங்கு வெள் அருவிய அறைவாய்."

மற்போரில் தன்னை வெல்வார் எவரும் இலர் என்ற தன் தறுகணாண்மையினைத் தமிழ் நாட்டகத்திலும் நிலை நாட்டுதல் வேண்டும் என்ற ஆணவ உணர்வோடு தமிழகம் புகுந்த ஆரியப் பொருநன் என்ற வட நாட்டு மல்லனுக்குச் சேரர் படை முதலிகளில் ஒருவனாகிய கணையன் என்பான் இடமளித்துப் பேணிப் போற்றினானேனும், தமிழகத்தின் வடவெல்லைக்கண் அரசமைத்துக் கொண்டு, அவ்வட வெல்லையைக் காத்து நின்றவனும், ஆற்றல் மிகு மறவனும், சேரர் படையில் பணியாற்றும் பிறிதொரு படை முதலியாம் கட்டி என்பானால் அன்பு காட்டப் பெற்றவனும் ஆகிய பாணன் என்பான், அவ்வாரியப் பொருநனின் ஆணவம் கண்டு பொறாது, அவனோடு மற்போரிடத் துணிந்து, இருவரும் களம் புகுந்து போராடுங்கால், தான், அவ்வாரியப் பொருநன் தோளைத் தன் மார்போடு அணைத்து இறுகப் பிடித்துக் கொண்ட பிடியினின்றும், தன்னை விடுவித்துக் கொள்வான் வேண்டி, அவன், தன் ஆற்றல் முழுதும்காட்ட முயலவும், தான், அவனைப் பிடித்துக் கொண்ட பிடியினின்றும் ஒரு சிறிதும் தளர்த்தாமையால், ஆரியப்பொருநன் தோள்கள் இரண்டும், தன் கையிலேயே கிடக்க, அவன் உடல் மட்டும் அறுபட்டு வெளிப்பட்டு வீழ்ந்து போக, வெற்றி கொண்ட

பாணன் செயலும், ஆணவம் கொண்டு போரிட வருவானை வென்றடக்கும் தும்பைப் போர் நிகழ்ச்சியே யாம்.

"பாணன்,
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப்பொருநன்
நிறைத்திரள் முழவுத் தோள் கையகத்து ஒழிந்து
திறன் வேறு கிடக்கை நோக்கி, நற்போர்க்
கணையன் நாணி யாங்கு"

–அகம்:386

இவ்வாறு, தம் ஆற்றல் காட்ட வருவாரை வென்று ஓட்டும் நிலை நிலவிய காலத்தே எழுந்தது தொல்காப்பியம் ஆதலின், அது வந்தானை வென்று ஓட்டுவதே தும்பையாம் என்கிறது.

காலம் செல்லச் செல்லத் தமிழகத்து வீரவாழ்வில் மாற்றம் இடம் பெற்றுவிட்டது. ஆன்றோரும் சான்றோரும் வீரர் வழிபாட்டினையே தம் பாடற்பொருளாகக் கொண்டு பாடவும், மன்னர்களும், மாநிதிச் செல்வர்களும், வீரச் செயல் புரிந்து வெற்றி கண்டவர்க்கே நன்செய் புன்செய் களையும், நவமணிப் பொன்னணிகளையும் வாரிவாரி வழங்கவும், வீர வாழ்வல்லது வேறு வாழ்வறியா மறக் குடிகள் தமிழகத்து ஊர்தோறும் தலையெடுக்கத் தலைப் பட்டு விட்டன. அந்நிலை பிறந்துவிடவே, தம் ஆற்றல் காட்டத் தமிழ் நாட்டிற்குப் பிற நாட்டவர் வருவதும், அவரைத் தமிழர் வென்று ஓட்டுவதுமான நிகழ்ச்சி தமிழகத்தில் இடம் பெறவில்லை; மாறாகத் தம் ஆற்றலை நிலை நாட்டத் தமிழகத்து மன்னர்களும் மாவீரர்களும் பிற நாட்டின்மீது படையெடுத்துச் சென்று வெற்றி கொண்ட நிகழ்ச்சிகளே இடம் பெறலாயின.

சேரனும், பாண்டியனும், ஒளியரும், அருவாளரும் பொதுவரும், வேளிரும் போலும் தமிழகத்து மன்னர் குலமெல்லாம் அடி பணிந்து விட்டாராகத் தன் பேராண் மையைக் காட்டத், தமிழகத்து மண்ணில் வாய்ப்பில்லாது போகவே, தன் போர் வேட்கையினைத் தணித்துக் கொள்வது ஒன்றே குறிக்கோளாகச் சென்ற வடநாட்டிலும், அவந்தி அரசன் தோரண வாயில் தந்தும், மகத மன்னன் பட்டி மண்டபம் கட்டித் தந்தும், வச்சிரத்து வேந்தன், கொற்றப் பந்தர் கொடுத்தும் பணிந்து விட்டமையால், ஆண்டும் போர் வேட்கை தணியாது போகவே, மேலும் வடக்கே நோக்கிச் செல்ல, இமயம் இடைநின்று தடுக்கக் களித்து, அதன் மீது தன் புலிக் கொடி பொறித்துப் புகழ்மாலை கொண்டு தமிழகம் மீண்ட திருமாவளவனின் வடநாட்டுப் படையெடுப்பினை ஈண்டு நினைவு கூர்க.

"இருநில மருங்கில் பொருநரைப் பெறாஅச்
செருவெம் காதலின் திருமா வளவன்
வாளும் குடையும் மயிர்க்கண் முரசும்
நாளொடு பெயர்த்து 'நண்ணார்ப்பெறுக, இம்
மண்ணக மருங்கின் என் வலிகெழு தோள்' எனப்
புண்ணியதிசை முகம் போகிய அந்நாள்,
அசைவில் ஊக்கத்து நசை பிறக்கு ஒழியப்
பகை விலக்கியது இப்பயங் கெழுமலை யென
இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி ஒற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோன் இறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்

அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபின் தோரண வாயிலும்..."

—சிலம்பு : 5; 89–104

தமிழகத்து வீரவாழ்வில் இத்தகைய நிலைமாற்றம் இடம் பெற்று விட்டமையால், பைந்தமிழ் இலக்கியங்களில், தம் ஆற்றல் காட்டத், தமிழகத்து மாவீரர்கள் பிற நாடுகள் மீது போர் தொடுத்துப் போன நிகழ்ச்சிகளுக்கல்லது, தம் ஆற்றல் காட்டப் பிறநாட்டவர், தமிழகத்தின் மீது போர் தொடுத்து வந்ததற்கான நிகழ்ச்சிகளுக்குச் சான்றுகள் இல்லாயின.

வேங்கடம் குமரிகட்கு இடைப்பட்ட தமிழ்நாடு முழுவதும், சோழர் பேரரசே நடைபெறும் பெருநிலை பெற்றும் அமையாது, கங்கை வரையுள்ள நாடுகளை யெல்லாம் வென்று கங்கை கொண்ட சோழன் என்றும், கடல் கடந்து சென்று ஈழத்தையும் கடாரத்தையும் வென்று ஈழமும் கடாரமும் கொண்ட கோப்பரகேசரி வர்மன் என்றும் புகழ்மிகு பெயர் கொண்ட இராஜேந்திர சோழன் வரலாறும் ஈண்டு நினைவில் இருத்தற்கு உரித்தாகும்.

பொன், பொருள், மண், மாநிலம் என்ற பிற ஆசைகளை அடிப்படையாகக் கொண்டு ஆனிரை, அண்டை நாட்டு எல்லை, அரண் காரணமாக எழும் போர்கள் பற்றிய விளக்கங்களைக் கூறியது போலவே, புகழாசையை அடிப்படையாகக் கொண்டு, ஆற்றல் காட்டல் காரணமாக எழும் போர் பற்றிய விளக்கம் கூறும் ஈண்டும், ஆற்றல் காட்ட வருவோன் செயல் பழிக்கத் தக்கதேயன்றிப் பாராட்டற்கு உரியதன்று; மாறாக அவ்வாறு ஆற்றல் காட்ட அமர் தொடுத்து வருவானை வென்று அடக்க அவன் மீது போர் தொடுத்துப் போவதே

பாராட்டற்கு உரியது என்ற உள்ளுணர்வு உடையராகி, தும்பையாவது, மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்று தலை அழிக்கும் சிறப்புடையதாகும் என்று கூறினார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

"தும்பை தானே நெய்தலது புறனே;
மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்று தலை அழிக்கும் சிறப்பிற்று என்ப."

தொல்காப்பியர் காலநிலை அதுவாகவே, அவர் கூற்று அக்காலத்திற்கு ஏற்புடையதாய் அமைந்தது. ஆனால், காலம் மாறக் கருத்தும் மாறுவதுபோல், தொல்காப்பியர் காலத்தில் பழித்தற்குரியதாயிருந்த மைந்து பொருளாகப் போர் தொடுத்துப் போவது, பிற்காலத்தில் பாராட்டற்குரியதாகி விடவே, ஐயன் ஆரிதனார் தும்பையாவது, மறங்காரணமாகப் போர் தொடுத்துப் போவதாம் என, அதையே பாராட்டி, அதற்கே இலக்கணம் கூற முன் வந்துள்ளார். தும்பையாவது, "செங்களத்து மறங்கருதிப் பைந்தும்பை தலைமலைந்தன்று" என்ற அவர் கொளு விளக்கத்தினைக் காண்க.

மறங்கருதித், தும்பை சூடுவதே பாராட்டற்குரியது என்பதே அவர் கருத்தாயின், அவ்வாறு வருவோன் மறத்தைக் கெடுத்து அடக்க, அவனோடு போரிடச் செல்வோன் செயல் பழித்தற்குரியது என்பது அவர் கருத்தாமோ என்றால், ஆகாது என்க. மறங்கருதி மாறுபடுவானை வென்று அடக்குவதும் மறங்காட்டுவதே ஆகும்; ஆதலின், அதுவும் பாராட்டற்குரியது என்பதே அவர் கருத்தாகும். ஆக, அவர், மறங்கருதி வருவதும், அவ்வாறு வருவானை வென்றடக்கச் செல்வதும் ஆகிய இரண்டுமே மறங்காரணமான போர்களாம், ஆகவே,

இரண்டுமே பாராட்டற்குரியவாம் என்று கருதினார். அதனால், மறங்கருதித் தும்பை மலைதல் எனப் பொதுவாகக் கூறி அமைந்தார்.

மறங்கருதிப் போர்மேற் செல்லும் மறவர், தும்பை மலர் மலைவது ஏன்? மறங்கருதிய போர், புகழாசையினை அடிப்படையாகக் கொண்டது. புகழுக்கு வெண்மை நிறம் கற்பிப்பர் அறிஞர். அதனால், தூய வெண்ணிறம் உடையதான தும்பை மலர், புகழ் காரணமாகப் போரிடப்போகும் வீரர்கள் அணியும் பூவாதல் பொருத்தமே என்க. மேலும் தும்பைச் செடி, வன்னிலத்துச் செடியாகும். மறங்கருதிய போர் வேட்கை, உரம் மிக்க உள்ளத்தில் மட்டுமே உருவாகும். தும்பைச் செடி பிணி போக்கும் மருந்துமாம். தும்பைப் போர், புகழாசை கொண்டு போரிட வருவானின், அவ்வாசைப் பிணியை அழிக்க மேற்கொண்ட போராகும். மேலும், தும்பை மலர் இட்டுக் காய்ச்சிய எண்ணெய் தேய்த்து முழுக, நீர்க்கோப்பு நோய் நீங்கும் என்ப; தும்பை மலர் அணிந்து செல்லும் வீரர்களால், மறங்கருதி வந்த மாற்றானின் ஆசை அழிந்து இல்லாகும்; கூறிய இவ்வொருமைப் பாடுகளினாலும், தும்பை, மறங்காரணமாகப் போரிடப் போகும் வீரர்கள் அணிவதற்குச் சாலப் பொருந்துவதாகும்.

உயிரினங்களுள், பிற உயிர்களை உண்டு உயிர்வாழும் உயிரினங்களும், பிற உயிர்களுக்கு உணவாகிப் பயன்படவே உயிர் வாழும் உயிரினங்களும் ஆகிய இரண்டுமே, ஒன்றையொன்று கண்டு கொள்ளாவாறு கரந்து வாழவே விரும்புகின்றன. தாம் இருப்பதை அறிந்துகொண்டால், பிற உயிரினங்கள் ஓடி ஒளிந்து கொள்ளுமே என்ற உணர்வால் கொல்விலங்குகளும், தாம் இருப்பது கொல்விலங்கு

களுக்குத் தெரிதல் கூடாதே என்ற அச்ச உணர்வால் நல்விலங்குகளும் கரந்துறை வாழ்வை விரும்புகின்றன. அவ்வினங்களின் அவ்விருப்பங்கள் இரண்டுமே முறை யானவைதாம் என்பதால், கரந்துறை வாழ்வு, அவற்றிற்கு இயற்கையிலேயே வாய்க்கும் வகையில் அவற்றின் உடலமைப்பு முறை அமைந்துள்ளது. அவ்வுயிரினங்கள் வாழும் நிலத்திற்கும், அவற்றின் உடலின் புறத்தோற்றத் திற்கும் இடையில் எவ்வித வேறுபாடும் தோன்றா வகையில், அவை வாழும் நில இயல்பிற்கேற்ற நிறம் உடையவாய் அவற்றின் தோல் அமைந்துளது.

உயிரினங்களுக்கு இயல்பாக அமைந்திருக்கும் இத்தற்காப்பு வகைகளைப், போராடப் போகும் வீரர்கள் தாமாகவே ஆக்கிக் கொள்வார்கள். ஒருவன் எவ்வளவு தான் ஆற்றல் மிகுந்தவனாயினும், பகைவன் மீது பாய்வதற்கு முன்பே, தன் போர்க் கோலத்தைப் பகைவன் கண்டு கொள்ள விரும்புவானல்லன். “கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை இடைக் கொட்கின் எற்றா விழுமம் தரும்,” என்றார் வள்ளுவர். அவன் முன்பே கண்டு கொண்டால், தாக்கும் தன் கருத்தனைத்தும் கருவிலேயே கருகிவிட நேரிடும்; ஆதலின் பகைவனைத் திடுமெனத் தாக்கும்வரை, தன் முயற்சிகளை மறைத்து வைக்கவே விரும்புவன். அது போலவே, தாக்கப்படும் வீரனும் பகைவனால் எளிதில் தாக்கப்படா வகையில் தன் நடமாட்டங்களை மறைத்து வைக்கவே விரும்புவன். இதனால் பகைநாட்டைத் தாக்கி அழிக்க முன்னேறிப் போகும் படை, அப்படை வரவை எதிர்நோக்கிக் காத்து நிற்கும்படை ஆகிய இரண்டுமே, ஒன்றன் நடமாட்டத்தை ஒன்று கண்டு கொள்ளா வகையிலேயே மேற்கொள்ளும். அதனால் தொலைவிலிருந்து நோக்குவார்க்கு, அது ஒரு

காடு என்ற கருத்தே தோன்றும் வகையில், அணிவகுத்து நிற்கும் படைவீரர் ஒவ்வொருவரும், தம் தலையில் செடி கொடிகள் சிலவற்றையோ, மரக்கிளைகளையோ செருகிக் கொள்வர். இது நம் நாட்டில் மட்டும் நிகழ்வதோ, இக்காலத்தில் மட்டும் நிகழ்வதோ அன்று; மேனாட்டு மன்னர்களும் கையாளும் முறை இது. பண்டைக் காலத்தும் மேற்கொள்ளப்பட்ட முறை இது. மாக்பெத் நாடகத்தில், ஒரு பெரும்படை இவ்வாறு அணிவகுத்துச் சென்ற காட்சியைக் கண்டும், அது படைச் செலவு என்று கொள்ளாமல், ஒரு காட்டின் இடப்பெயர்ச்சியாம் என்று கொண்டமையால் தோல்வி கண்ட நிகழ்ச்சியை, நாடகாசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

ஆக, இப்போர் முறையைக் கருத்தில் நிறுத்தி நோக்குவார்க்குத் தும்பைப் போர் வீரர், தும்பை அணிவதன் காரணம் தெற்றெனப் புலனாம். தும்பைப் போர் கடற்கரையை அடுத்து நிகழ்வதாகும். அது வெண்மணல் பரந்த இடமாகும். அந்நிலத்தில் மிகப் பெருமளவில் முளைத்து நிற்கும் செடியும் தும்பையேயாம். அதனால், அந்நிலத்தில் இயங்கும் படை, பகைப்படையின் கண்ணிற்கு, அது படையன்று கடற்கரை மண்மேடே என்ற பிழையுணர்வே உண்டாகும் வகையில், அந்நிலத்துத் தும்பைச் செடிகளைத், தன் படைவீரர் தலையில் சூட்டிச் செல்வது இயற்கையொடு ஒட்டிய நிகழ்ச்சி ஆயிற்று. ஆகவே, தும்பை வீரர், தும்பை அணிந்து செல்வராயினர் எனல் மேலும் சிறக்கும்.

இவ்வாறு, தொடக்கத்தில், போரின் இன்றியமையா நிகழ்ச்சியாக விளங்கிய தும்பை சூடும் வழக்கம் பிற் காலத்தில் ஒரு மரபாகக் கருதப்பட்டுவிட்டது.

மறவர் கொண்டு சென்ற ஆனிரையை மீட்டுக் கொணரும் போரே பாராட்டற்குரியது என்பதால், அதற்கு வெட்சி என்ற பெயர் சூட்டியும், மண்ணாசை கொண்ட மன்னன் கைப்பற்றிய மண்ணை மீட்கும் போரே பாராட்டற்குரியது என்பதால் அதற்கு வஞ்சி என்ற பெயர் சூட்டியும், ஆற்றல் அழிக்க எண்ணி வளைத்துக் கொண்ட அரண் முற்றுகையினை முறியடிக்கும் போரே பாராட்டற் குரியது என்பதால், அதற்கு உழிஞை என்ற பெயர் சூட்டியும் பாராட்டியது போலவே, ஈண்டும் ஒருவன் ஆற்றலுக்கு நேர இருந்த மதிப்புக் குறைபாட்டினை மாற்றி, அதன் மதிப்பினை உயர்த்த மேற்கொள்ளும் போரே பாராட்டற்குரியது ஆதலின், அதற்குத் தும்பை எனும் பெயர் சூட்டிப் பாராட்டியுள்ளார், ஆசிரியர் தொல் காப்பியனார்.

ஆசிரியர் தொல்காப்பியனார் காட்டிய முறையே கருத்துச் செறிந்த முறையாகவும், ஐயன் ஆரிதனார் போலும் பிற்கால ஆசிரியர்கள், அவர் சென்ற வழிச் செல்லாது, முன்னர்க் கூறிய மூவகைப் போர்களையும், ஒன்று கவர, மற்றொன்று மீட்க என, ஒவ்வொன்றையும் இரண்டிரண்டு பகுதிகள் உடையவாகக் கொண்டு, ஆனிரை கவர்தலை வெட்சி என்றும், அது மீட்டலைக் கரந்தை என்றும், மண் கவர்தலை வஞ்சி என்றும், அது மீட்டலைக் காஞ்சி என்றும், அரண் முற்றுகையினை உழிஞை என்றும், அது மீட்டலை நொச்சி என்றும் பெயர் சூட்டி ஆறு போர் நிகழ்ச்சிகளாகக் கொண்டார்கள். அவ்வாறு கொள்வது, இயற்கைப் போர் முறைகளுக்குப் பொருந்தாது என்பதும், ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்ட முறையே பொருந்தும் முறையாம் என்பதும்,

ஆண்டெல்லாம், ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகக் கொண்ட அவர்களே, மைந்து பொருளாக நிகழும் இப்போர் நிலையினை மட்டும் இரு பிரிவாகக் கொள்ள மாட்டாது, தொல்காப்பியர் கொண்டது போலவே, ஒரு நிகழ்ச்சியாகவே கொண்டு, தும்பை எனும் ஒரு பெயரே சூட்ட வேண்டிய நிலையிலேயே நிற்பதால் உறுதியாவது உணர்க.

வெட்சிப் போர், மாற்றார் கவர்ந்து கொண்ட தன் ஆனிரைச் செல்வத்தை மீட்டல் காரணமாக நிகழும் போராதலின், அந்நிரை கருதி வருவோனும், அது மீட்டல் கருதி மேற்செல்வோனும், முறையே, அதைக் கவர்தலும் மீட்டலும் முடிந்ததும், தம் போர் நிகழ்ச்சிகளைக் கைவிட்டு விடுவர். அது போலவே வஞ்சிப் போர், மாற்றார் கைப்பற்றிக் கொண்ட தன் மண்ணிலிருந்து அம்மாற்றாரை வென்று ஓட்டி, அம்மண்மீது தனக்குள்ள உரிமையைக் காத்தல் காரணமாக நிகழும் போராதலின், அம் மண் கருதி வ்ருவோனும் அது மீட்டல் கருதி மேற் செல்வோனும், முறையே, அம்மண்ணைக் கைப்பற்றலும் மீட்டலும் முடிந்ததும், போர் நிகழ்ச்சிகளைக் கைவிட்டு விடுவர். அது போலவே, உழிஞைப் போர், தன் அரணை முற்றி வளைத்துக் கொண்டிருக்கும் பகைப் படையை வென்று ஓட்டித் தன் அரணைக் காத்தல் காரணமாக நிகழும் போராதலின், அவ்வரண் கருதி வரும் பகைவனும், அது காத்தல் கருதிப் புறம் போந்து போரிடும் அரணுக் குரியானும், முறையே, அரண் காவல் அழிந்து அது தனதுடைமையாதலும், வந்து வளைந்திருந்த படை அழிந்து அகன்று போதலும் முடிந்ததும், தம் போர் நிகழ்ச்சிகளைக் கைவிட்டு விடுவர்.

ஆனால், தும்பைப் போர் அத்தகையதன்று, தும்பைப்போர், தன் அண்டை அயல் நாட்டவரெல்லாம், தன் ஆண்மை ஆற்றல்களைக் கண்டு அஞ்சி அடிபணிதல் வேண்டும் என்ற ஆணவ உணர்வுடையனாகிப் போர் மேற்கொண்டு வருவானின் ஆண்மை ஆற்றல்களை அழித்து அடிமை கொண்டு அவனுக்கு நல்லறிவு புகட்ட மேற்கொள்ளும் போராதலின், வருவோனும் போர் நிகழ்ச்சியை ஒரு அளவே நிறுத்திக் கொள்வானல்லன்; அவன் மேல் செல்வோனும், ஒரு அளவோடு நிறுத்திக் கொள்வானல்லன்; மேலும் காட்டக் கூடியது ஒன்றும் இல்லை; தன் ஆண்மை அவ்வளவையும் காட்டி நிலை நாட்டியாயிற்று என்ற நிலை பிறக்குமளவு வருவோனும் போராடித் தீர்ப்பான்; ஆணவம் கொண்டு வந்தானின் ஆற்றல் ஆண்மைகளில் இனி அழிப்பதற்கு எதுவும் இல்லை; அனைத்தும் அழித்தாயிற்று என்ற நிலை பிறக்குமளவு அவன் மீது சென்றோனும் போராடித் தீர்ப்பன். அதனால் இருவர் தம் நாற்படைகள் அழிவுற்ற நிலையிலும் போர் ஓயாது; இருவர் தம் கைப்படைகள் அழிவுற்ற நிலையிலும்போர் ஓயாது; இருவர் தம் உடல் உறுப்புக்களில், ஒன்றோ பலவோ அற்று வீழ்ந்த நிலையிலும் போர் ஓய்ந்துவிடாது; ஆணவத்திற்கு அடிபணிந்துபோன உயிர், அவர் உடலை விட்டுப் பிரியும் வரையும், அவர்கள் போரிட்டுக் கொண்டேயிருப்பர்; ஒரோ வழி, அவர்கள் தலை வேறு உடல் வேறாக வீழ்ந்துவிட்ட நிலையிலும், ஆணவம் இருந்து ஆட்சி புரிந்த இடம் என்ற தொடர் புண்மையால், தலை துள்ளுவதும், உடல் எழுந்து ஆடுவதும் உண்டு; அந்நிலை பிறக்கும்வரையும் போர் நிகழ்ந்து கொண்டேயிருக்கும்.

தம் ஆண்மையை நிலைநாட்டக் களம் புகும் போர் மறவர்கள் நாற்படைகளும் தம்மைச் சூழ்ந்து கொண்டு, வாள் கொண்டும் வேல் கொண்டும், வில்லும் அம்பும் கொண்டும் தாக்க, வாள்பட்ட புண்கள் உடலெலாம் காட்சி அளிக்கினும், காணும் இடம் எங்கும் கருக்குகளே காட்சி அளிக்கும் பனைமரம் போலவும், உடலெலாம் முள் முளைத்துக் கிடக்கும் முள்ளம் பன்றி போலவும் காட்சி அளிக்குமாறு பகைவர் வீசிய வேல்களும் அவர்தம் வில்களிலிருந்து விரைந்து வெளிப்படும் அம்புகளும் உடலெலாம் பாய்ந்தாலும் கலங்காது கடும் போர் செய்வதையே விரும்புவர். அத்தகைய வீரர் சிலரையும், புலவர்கள், நமக்கு அறிமுகம் செய்து பாராட்டி யுள்ளார்கள்.

போர்க்களத்தில் குறியவும் நெடியவுமாகப் பகை வர்கள் எறிந்த வேற்படைகள் பலவும் தன் மார்பில் பாயப்பெற்று, எருமையின் கரிய பெரிய கொம்புகளோ என மருளுமளவு பருத்த பயற்றின் நெற்றுகளை அடித்துப் பயிற்றினைப் பிரித்து எடுத்துக் கொண்டு கழித்து விடப் பட்ட சக்கைக் குவியலைப் படுக்கையாகக் கொண்டு காட்டுப் பசு தன் கன்றோடு கிடந்து உறங்குமளவு வளம் சிறந்ததேயாயினும், அது வன்னிலத்துச் சிற்றூர் ஆதலின், போர்க்களத்தில் குறியவும் நெடியவுமாகப் பகைவர்கள் எறிந்த வேற்படைகள் பலவும், தன் மார்பில் பாயப்பெற்று, அடிமுதல் முனைவரையும் கருக்கு மட்டைகளைக் கொண்ட வலிய பெரிய பனைபோல் காட்சி அளிக்கும் நிலையிலும் கலங்காது நின்று போரிட்டு வெற்றி பெற்ற வீரனுக்கு அது, பரிசுப் பொருளாதல், தகுதியுடையதன்று எனக் கருதி, நீர்ப் பறவைகள் கூட்டங் கூட்டமாக வந்து கூடு

கட்டி முட்டையிட்டுக் குஞ்சு பொறித்து நிலையான வாழ்வு வாழுமளவு நிறை நீர்வளம் செறிந்த வயலகத்துப் பேரூர்களையே தேர்ந்து பரிசளிக்கும் பெருமை புறத்தில் பாராட்டப் பெற்றுள்ளது.

> "பெருநீர் மேவல் தண்ணடை எருமை
> இருமருப்பு உறழும் நெடுமாண் நெற்றின்
> பைம் பயறு உதிர்த்த கோதின் கோலனைக்
> கன்றுடை மரையாத் துஞ்சும் சீறூர்க்
> கோள் இவண் வேண்டேம் புரவே; நாரரி
> நனைமுதிர் காடி நறவின் வாழ்த்தித்
> துறை நனி கெழீஇக் கம்புள் ஈனும்
> தண்ணடை பெறுதலும் உரித்தே, வைந்நுதி
> நெடுவேல் பாய்ந்த மார்பின்
> மடல்வன் போந்தையின் நிற்கு மோர்க்கே."

—புறம்: 297.

தந்தை, களத்தில் மாண்டு கல்லறை புகுந்து நடுகல் வீரனாயினனாகவும், காதற் கணவன் களத்தில் உயிர் விட்டானாகவும், உடன் பிறந்தார் பகைவர் படையால் நெருக்குண்டு பிறவாப் பெருநிலை பெற்றனராகவும், அந்நிலையிலும், தன் படையெலாம் புறக்கிட்டு அழியவும், பகைவர் படைப் பெருமை கண்டு கலங்காது நின்று கடும் போரிட்டு, அப்பகைவர் ஏவிய அம்புகளையெல்லாம், தான் ஒருவனாகவே தன் மெய்யில் ஏற்று, முள்ளம் பன்றிபோல் வீழ்ந்து கிடக்கும் தன் மகனின் ஆண்மை கண்டு உவகைக் கண்ணீர் சொரிந்து உளம் மகிழும் தாய் ஒருத்தியை அறிமுகம் செய்துள்ளார் ஐயன் ஆரிதனார்.

> "கல்நின்றான் எந்தை; கணவன் களப்பட்டான்;
> முன் நின்று மொய் அவிந்தார் என்னையர்; பின் நின்று

கைபோய் கணை உதைப்பக் காவலன் மேல் ஓடி
எய்போல் கிடந்தான் என் ஏறு."

—பு.வெ. மாலை: 176.

"போர் என்றதும் பூரிக்கும் தோளினன்; எளியார் மீது வலியச் சென்று தாக்கும் வன் போரை விரும்பான் எனினும், தன்னை எளியன் எனக்கொண்டு தன்னை வந்து தாக்கும் போரை விடுவானல்லன்; அவ்வாறு வந்தாரை, வெற்றி கொண்டு விரட்டி வாகை சூடுவதல்லது, அவர்க்குத் தோற்றுத் தாள் பணிவது செய்தறியான்; வெற்றியைத் தன் நாற்படை பெற்றுத் தருக எனப் போர்க்கள நிகழ்ச்சிகளை அப்படைகள்பால் ஒப்படைத்து விட்டுப், போர் ஒலி கேளா இடம் தேடிச் செல்லும் ஒளிந்துறை வாழ்வை விரும்புவானல்லன்; மாறாக, வந்த படையை, முதற்கண், தன் நாற்படை சென்று தாங்கிச் சமர் புரிக; அது தளர்ந்த நிலையில் நாம் சென்று போரிடுவோம் எனக் காத்திராது, படையைப் பின்னர்த் தள்ளி முந்திச் சென்று, முன் சமத்து நின்று போராடுவன்!" எனக் கேட்கக் கேட்க இனிக்கும் வெற்றிப் புகழ் உடைமையால், புலவரும், பொருநரும், பாணரும், கூத்தரும் கூட்டம் கூட்டமாய் அவன் அவை நோக்கி விரையுமளவு வீரப் புகழால் வீறு கொண்டவன் சோழர் படைத் தலைவன் திருக்கிள்ளி என்பவன். ஆனால், அவனைக் காணத் துடிக்கும் உளத்தோடு அவன் அரண்மனை வாயில் முன் குவிவாரின் ஆர்வம் அவ்வளவும், அவன் அமர்ந்திருக்கும் அவை புகுந்து, அவனை ஒருமுறை நோக்கிய அக்கணமே மறைந்துவிட, ஆண்டு ஒரு கணமும் நிற்க விரும்பாது வெளியேறி விடுவர். அவர்களின் காதினிக்கும் வெற்றிப் புகழ் உடையவனாகிய அவன் மேனி, அவர்தம் கண்கள் காணக் கூசுமளவு உருக்குலைந்து கிடக்கும். போர்க்கள நிகழ்ச்சிகளை

யெல்லாம் தானே ஏறிட்டுக் கொள்வதால் வாள்பட்டும், வேல் பாய்ந்தும் ஆன வடுக்கள், அவன் மேனியெலாம் நிறைந்து அவன் மெய்வனப்பை அறவே கெடுத்துக் காண வெறுக்கும் கொடுங்காட்சி யுடையதாக மாற்றிவிட்டன. அதனால், அவன் புகழ் கேட்டு அவனை நாடி வருவோர் அனைவரும் அவ்வடுவாழ் அவன் வடிவைக் காண வெறுத்து ஓடி விடுவர். இவ்வாறு தன்னை விரும்புவோரும், தன்னை வெறுப்பதற்குக் காரணமாகும் அப்போர்ப் புண்களைப் புண் எனக் கருதாது, புகழின் கண் என மதிக்கும் அவன் போர்க்களப் புகழ் வேட்கையினைப் பாடிப் பாராட்டியுள்ளார் புலவர் எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார்.

"நீயே, அமர் காணின் அமர் கடந்து, அவர்
படை விலக்கி எதிர் நிற்றலின்,
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக்கு இனியை கட்கு இன்னாயே."

—புறம்: 167.

போர்ப் புகழ் விரும்பும் வீரர்களின் உளப்பாங்கு இதுவே ஆதலின், அது காரணமாக எழும் போர் நிகழ்ச்சியைக் கூறும் தும்பைத் திணையின் விளக்கம் கூற வந்த ஆசிரியர் தொல்காப்பியனார், களத்தில் பகைவர் எறிந்த எண்ணிலாக் கணைகளும் வேல்களும் தன் மேனியெங்கும் பாய்ந்ததன் காரணமாக உயிர் பிரிந்த நிலையிலும், உடல் நிலை குலைந்து வீழாதே நிற்பதும், பகைவர் வாளேறுண்டு இரண்டாக வெட்டுண்டு தனித் தனியே வீழ்ந்த தலையும் உடலும், அட்டையின் அறுபட்ட இரு கூறுகளும் ஆடுவது போல், மண்மீது செயலற்று வீழ்ந்து விடாது, தலை துள்ளுவதும், உடல் எழுந்து ஆடுவதும்

ஆகிய அந் நிகழ்ச்சிகளெல்லாம் தும்பைத் திணைக்குச் சிறப்பளிக்கும் நிகழ்ச்சிகளாம் எனக் கூறியுள்ளார்.

"கணையும் வேலும் துணையுற மொய்த்தலின்
சென்ற உயிரின் நின்ற யாக்கை
இருநிலம் தீண்டா அரு நிலை வகையோடு
இருபால் பட்ட ஒரு சிறப்பின்றே." —தொ. பொ. புறம்: 16.

தும்பைத் திணையின் பொது இயல்பினைக் கண்டோம். இனி, அத்திணை துறைகளின் இயல்புகளை நோக்குவோமாக.

## தானை நிலை: யானை நிலை: குதிரை நிலை:

மாநிதி, மண், மதில் இவை குறித்த போர் நிகழ்ச்சிகளில், மன்னர்களின் எண்ணமெல்லாம், அவற்றைக் கைக்கோடல் ஒன்றிலேயே குறியாக நிற்குமாதலின், போர் தொடங்குவதற்கு முன்பாகவோ, அல்லது போர் தொடங்கி நிகழ்ந்து கொண்டிருக்கும் நிலையிலேயோ அவை கிட்டி விடுமாயின், மன்னர்கள் மேற்கொண்டு போரிடார். ஆனால், தம் ஆற்றலை நிலைநாட்ட மேற்கொள்ளும் ஆணவப் போரில் மன்னர்கள் அம்முறையை மேற்கொள்ளார். மாறாக, மாற்றானும் அவன் நாற்படையும் அறவே மடிந்து மண்ணாகும் வரையும், போரைக் கைவிடாதே மேற்கொள்வர். அதனால், முன்னைய மூவகைப் போரினும் இப்போர் நிகழ்ச்சியில், நாற்படைகளுக்குப் பெரும் பங்கு உண்டு. ஆகவே, அவற்றைப் பாராட்டும் துறைகள், இத்திணையின் முதற்கண் இடம் பெற்றுள்ளன.

தன் ஆண்மை ஆற்றல்களை அண்டை அரசுகளெல்லாம் அறிந்து அஞ்சி அடிபணிய வேண்டும் என

விரும்பும் வேந்தனோ, அல்லது வீரனோ, அந்நிலையைப் போராடியே பெறுதல் வேண்டும் என்பதில்லை. அந்நிலை, அவர்தம் உண்மை வீரத்தை உணர்த்துவதாகாது. யாரேனும் ஒரு வேந்தன் அல்லது வீரன் அத்தகைய எண்ணங்கொண்டு விட்டான் என்பதை அவன் அண்டை நாட்டு அரசுகள் அறிந்த அளவே, அவன் தம்மீது படை யெடுத்து வாரா முன்பே சென்று அடிபணிதல் வேண்டும். அதுவே, அவ்வீரனின் உண்மை வீரத்தை உணர்த்து வதாகும். பகைவரின் படையும் படைக்கலமும் பாழ்படுமாறு பெரும் போர் செய்து பெறும் வெற்றியை எவர் வேண்டுமாயினும் எளிதில் பெற்றுவிடுதல் இயலும். ஆனால், பாம்புறையும் புற்றையும் கொல்லேறு திரியும் ஊர் மன்றத்தையும் மக்கள் அணுகவும் அஞ்சுவது போல், பெரும் வீரன் வாழும் பாசறை இது, இப் பாசறைக்கண் அப்பெரு வீரன் உளன் என்பது அறிந்தே அஞ்சி அடிபணியப் பெறும் வெற்றியே, உண்மையில் பெரு வெற்றியாகும் என, உண்மை வீரத்துக்கு உரை வகுக்கும் மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் பாட்டைக் காண்க.

"இரும்பு முகம் சிதைய நூறி, ஒன்னார்
இருஞ்சமம் கடத்தல் ஏனோர்க்கும் எளிதே;
நல் அரா உறையும் புற்றம் போலவும்,
கொல்லேறு திரிதரும் மன்றம் போலவும்
மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
உளன் எனவெரூஉம் ஓரொளி
வலன் உயர் நெடுவேல் என்ஐ கண்ணதுவே."

—புறம். 309.

ஒரு வீரனுக்கு, அத்தகைய பெரு வெற்றியைப் பெற்றுத் தருவது, அவன் நாற்படை. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு

போராடத் துணிந்த வேந்தர்களுக்கு அத்துணிவை அளித்தது, இருபுறமும் தொங்கி, மாறி மாறி ஒலிக்கும் மணிகளையும், பரந்த அடிகளையும், வலிய பெரிய கால்களையும், மலையென மருளும் உயர்ச்சியினையும் உடைய யானைப் படைகளையும், தேர்ப் படைகளையும், குதிரைப் படைகளையும், படைக்கலத் தொழில் பயின்ற பெரு வீரர்களையும் கொண்ட நாற்படையினை நனிமிகப் பெற்றுள்ளோம் நாம், என்ற செருக்கே யாதல் அறிக.

"படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம் என்று
உறுதுப்பு அஞ்சாது உடல் சினம் செருக்கிச்
சிறு சொல் சொல்லிய சினங்கெழு வேந்தர்." —புறம்: 72.

ஆக, ஆற்றல் மிகு மறவரின் ஆற்றலை மேலும் ஆற்றல் உடையதாக்குவதும், அவர் ஆற்றலைப் பிறர் கண்டு அஞ்சப் பண்ணுவதும், அம் மறவரின் நாற்படையே ஆதலின், தம் ஆற்றலை நிலை நாட்ட முனைவாரின் செயல் முறைகளைக் கூறுவதன் முன்னர், அவர் தம் நாற்படைப் பெருமை பாராட்டப் பெறுவதே முறையாதலின், "தானை, யானை, கதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும்" என அவற்றின் நிலைகளைக் கூறினார் ஆசிரியர் தொல் காப்பியனார். பு.வெ. மாலையார், இவற்றிற்கே, முறையே தானை மறம், யானை மறம், குதிரை மறம் எனப் பெயர் சூட்டி வாழ்த்தியுள்ளார்.

தானை, யான்ன, குதிரைப் படைகளோடு, தேர்ப் படையும் இணைத்தே எண்ணப்படுமாதலின், பு.வெ. ·ார், தேர் மறம் என்ற துறையையும் கொண்

## தார் நிலை:

தானை, யானை, குதிரை, தேர் என்ற நால்வகைப் படைகளும் எண்ணாலும் பெரியவை; எண்ணிய எண்ணியாங்கு முடிக்கும் திண்மையும் வாய்ந்தவை என்றாலும், அவற்றை இடமும், காலமும், களமும் அறிந்து ஏவல் கொள்ளவல்ல படைத் தலைவன் ஒருவன் இல்வழி, அப்படை, பயனுறுவதற்கு மாறாகப், பாழ்பட்டே போகு மாதலின், நாற்படையினும் நனிமிக இன்றியமையாதவன் நல்ல படைத் தலைவனாவன். "நிலைமக்கள் சால உடைத்து எனினும், தானை தலைமக்கள் இல்வழி, இல்" என்றார் திருவள்ளுவர். அதனால் நாற்படைகளைக் கூறும் துறைகளை அடுத்துப் படைத் தலைவன் பெருமை பாராட்டும் தார்நிலை என்ற இத்துறை கூறப்பட்டுள்ளது.

புகழாசை மிக்குப் போருக்கு எழும் வேந்தன், புகழாசைக்கு அடிமைப்பட்டுவிட்ட மனம் உடையனாகி விடுவதால், களத்தின் நிலையறிந்து போராடுவது இயலாது; புகழாசையால் கொண்டு விட்ட கட்டுக் கடங்கா வெறியுணர்வோடு பகைவர் அனைவரையும் ஒருசேர அணுகித் தாக்குவன்; அல்லது, தன் நாற்புறமும் பகைவர் படை வந்து சூழ்ந்து கொண்டு, தன்னைச் செயலற்ற வனாக்கும் நிலை எழுவதையும் நினையாதே நின்று போராடுவன். அதனால், அவன் கருதி வந்தது கை கூடாது போவதோடு நில்லாமல், அவன் அழிந்து போவதும் நிகழும். அதனால், அந்நிலை உண்டாகி விடாவாறு, அரசன், அவ்வாறு ஆராயும் திறமற்றுப் போகும் நிலையிலும், களத்தின் நிலையறிந்து போராடும் நல்லறிவும், வேந்தன் வேட்கையைக் குறைவற நிறைவேற்றித் தருவதே தன் கடனாம் என எண்ணும் நல் உள்ளமும், அதைச்

செயல் முறையால் செய்து காட்டும் நல்லாண்மையும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஒப்பற்ற படைத்தலைவனைப் பெற்றிருப்பது இன்றியமையாதது ஆதலின், அது கூறும் இத்துறை ஈண்டு வைக்கப்பட்டுளது.

யானையின் கால்களைத் தளைக்கும் சங்கிலித் தொடர் போல், போராடி மாண்ட வீரர்களின் உடலினின்றும் சரிந்து வீழ்ந்த குடர்கள் தளைத்து, தன் கால்களை ஒரு பக்கம் பிணிக்க, "இவனை ஆங்குப் போகவிடன்மின்!" எனக் கூறியவாறே, பகைவீரர் பலரும் ஒருபுறம் வளைத்துக் கொள்ளவும், அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல், வடித்துக் கூராக்கிய வாளைக் கையில் கொண்டு, கன்றைக் காக்க விரையும் கறவைபோல், களத்தின் முன்னிடத்தே தனித்து நின்று போராடும் தன் தோழனுக்குத் துணை போகும் வீரன் செயல் இத்துறைக்கு நல்ல எடுத்துக்காட்டாம்.

"வடிமாண் எஃகம் கடிமுகத்து ஏந்தி,
ஓம்புமின் ஓம்புமின் இவண் என ஓம்பாது
தொடர்கொள் யானையின் குடர்கால் தட்பக்
கன்றமர் கறவைமான
முன்சமத்து எதிர்ந்த தன் தோழற்கு வருமே." —புறம்: 275

பெரு மழைத் தாரையின் சிறுதளிதானும் மேனியில் படாவாறு காக்கும் குடைபோல், பகைவர் ஏவும் கணைகளில் ஒன்று தானும் தன் தலைவன் மீது படாவாறு, அனைத்தையும் தன் மெய்யில் தாங்கிக் கொள்ளும் வீரன், தான் அவ்வாறு நின்று காப்பதற்கு முன்பே, "அவ்வாறு காப்பேன்!" எனக் கூறுவதும் உண்டு ஆதலின், பு.வெ. மாலையார், "ஒரு குடை மன்னனைப் பல குடை நெருங்கச் செருவிடைத் தமியன் தாங்கற்கும் உரித்தே!" என்ற

விளக்கத்தோடு, "முன் எழுதரு படை தாங்குவன் என மன்னவற்கு மறம் கிளந்தன்று" என்ற விளக்கத்தையும் இத்துறைக்குப் பொருந்தும் எனக் கொண்டுள்ளார்.

## தபுதிப் பக்கம்:

தும்பைப் போர், வெற்றிப் புகழ் மீது கொண்ட வேட்கை மிகுதியால் எழும் போராதலின், இரு திறத்தவரும் தம் உயிர் உள்ளளவும் நின்று போராடவே விரும்புவர். தாம் உயிரோடிருக்க, பிறர் தம்மை வெற்றி கொள்வதை அவர் விரும்பார். இது இரு திறத்து வேந்தர்க்கும் பொதுவியல்பாம் ஆதலின், தும்பைப் போரின் முடிவு, பெரும்பாலும் இரு வேந்தர்களும் ஒரு களத்து அழிவதாகவே இருக்கும்.

படைத் தலைவராகத் தாம் பணியாற்றியிருக்கும் போது, தம் வேந்தர்க்கு இழப்பு நேர்வதைப் படைத் தலைவர் பொறார் ஆதலின், வேந்தர் களம் புகுந்து போராடத், தாம் வாளா இருப்பது செய்யார். படைத் தலைவர் பண்பு இதுவாகவே, ஒரு வேந்தனைக் காக்க, அவன் படைத் தலைவன் களம் புகுந்து கடும் போர் இடுகின்றனன் என்றால், மாற்றார் படைத் தலைவனும் களம் புகுந்து போராடுவான் என்பது சொல்லாதே அமையும். ஆகவே ஒரு வேந்தனை, மற்றொரு வேந்தன் அழிக்க எண்ணினால், அது, அவன் படைத் தலைவனை அழித்த பின்னரே இயலும்; ஆகவே, வேந்தர் இருவரும் அழிவதன் முன்னர், அவ்விரு வேந்தர்களின் படைத் தலைவர்களும் போராடி அழிவர்.

கழுமலம் என்னும் இடத்தில், சேரமான் கணைக் கால் இரும்பொறைக்கும், சோழன் செங்கணானுக்கும் நடைபெற்ற போரில், செங்கணான், சேரனை வென்று

சிறை செய்வதன் முன்னர்ச் சோழர் படை முதலிகளாம் நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை முதலியோரும், சேரர் படை வீரரால் அப்பழையனும் இறந்து வீழ்ந்த நிகழ்ச்சி இத்துறைக்குச் சாலும் சான்றாகும்.

"நன்னன் ஏற்றை, நறும் பூண் அத்தி,
துன்னரும் கடுந் திறல் கங்கன், கட்டி,
பொன்னணி வல்வில் புன்றுறை, என்றாங்கு
அன்றவர் குழீஇய அளப்பருங் கட்டூர்ப்
பருந்து படப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டு அது நோனான் ஆகித் திண்தேர்க்
கணையன் அகப் படக் கழுமலம் தந்த
பிணையலம் கண்ணிப் பெரும்பூண் சென்னி." –அகம்: 44.

போர்க்களத்தின் முன் வரிசையில் நின்று போராடும் வேந்தரைக் காக்க விரையும் படைத் தலைவர் பெருமையைப் பாராட்டியதை அடுத்து, அவர் அப்போரில் பட்டுப் பெருமை பெற்ற நிலையைப் பாராட்ட வேண்டுவது முறையாம். ஆதலாலும், புகழாசை கொண்டு களம்புகுந்த வேந்தர்களின் முடிவைக் கூறுவதன் முன்னர், அவர் தம் படைத் தலைவர்கள் முடிவுறும் நிலையினைக் கூற வேண்டுவது முறையாம். ஆதலாலும், இத்துறை படைத் தலைவர் பெருமை பாராட்டும் துறையாம் தார் நிலைக்குப் பின்னும், இரு வேந்தரும் ஒரு களத்து அவியும் மாண்பினைக் கூறும் துறையாம் தொகை நிலைக்கு முன்னும் கூறப்பட்டுள்ளது.

படைத்தலைவர் களம்புகும் நிகழ்ச்சியைக் கூறும் துறையினை அடுத்து, அவ்வீரர் அழிவுற்ற நிலைகூறும் துறை வருவது முறையல்லது. அவ்வேந்தர் அழிவுற்ற நிலை கூறும் துறை வருவது முறையாகாது. ஆதலாலும், இரு

பெருவேந்தரும் அழிவுறும் அந்நிலை, "இரு பெரும் வேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகை நிலை" என்ற விளக்கத்தோடு, தொகை நிலை என்ற பெயரால், பின்னர்த் தனியே கூறப் பெறுதலாலும், தார்நிலை என்ற இத்துறை, படைத் தலைவர்கள் படுவதைக் கூறுவதேயாம். "இருவர் தலைவர் தபுதிப் பக்கம்" என இப்பொருள் தெளிவாகப் புலப்படும் வகையில், தொல்காப்பியர் விளக்கியிருப்பதும் உணர்க. ஆகவே, தொல்காப்பியனாரின் இவ்விளக்கத்தை உணர மாட்டாது, இருவரும் தபுதி நிலையாவது, 'பொருபடை களத்து அவிய இரு வேந்தரும் இயல் அவிந்தன்று" (பு.வெ. மாலை: கொளு. 138) என ஐயன் ஆரிதனார் கூறும் விளக்கம் தும்பைத்திணை இயல்பிற்கே முற்றிலும் முரண்பட்டதாம் எனக் கொள்க.

## கூழை தாங்கிய எருமை:

வேந்தர்க்குத் துணை போகும் வீரர்கள் அவ் வேந்தர்கள் உயிரிழந்து போகும் நிலை பிறப்பதன் முன்னர்த் தாம் அவர் பெருட்டுப் போராடி உயிரிழந்து போவது, புகழ்மிகு செயலே ஆயினும், அவ்வாறு அவர் உயிரிழந்து போவதற்கு மாறாக, அவரும் தாமும் உயிரோடிருந்து, எண்ணியாங்கு முடிக்கும் திண்மை யுடையவராய் விளங்கும் வகையில், மாற்றார் படையை வென்று மண்ணாக்குவதே மாண்புடைமையாம் ஆதலின் அவ்வாறு உயிரிழந்து செஞ்சோற்றுக் கடன் கழித்துச் சிறப்புறும் நிலையினைக் கூறும் துறையினை அடுத்து, அவ்வீரர்கள் தம் படையைக் காப்பதும், பகைப் படையைப் பாழ் செய்வதுமாகிய வீரச் செயல்களை விளக்கும் துறைகளைக் கூறுவது முறையாம் ஆதலின், தபுதிப்

பக்கத்தை அடுத்து எருமை முதலிய துறைகளை வைத்துள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

அவ்வீரச் செயல்களுள்ளும், பகைவர் படையை வென்று அழிப்பதன் முன்னர், அப்படை, தம்படை மீது மேற்கொண்ட தாக்குதலைத் தாங்கி, அத்தாக்குதலால் தம் படை அழிவுற்றுப் போகாவாறு காப்பதே முதற் கண் நிகழ வேண்டிய செயலாமாதலின், அது கூறும் எருமை எனும் இத்துறை, அத்துறைகளுள் முதற்கண் கூறப் பட்டுளது.

பகைவேந்தன் தன் பெரும்படை, தன் படையின் முன் வரிசை அழிந்து பின்னிடுமாறு அலை அலையாக வந்து நெருக்கிய போது, பெருங் கடல்நீர், தன்னைக் கடந்து அகநாடு புகாவாறு நின்று, அந்நீரைத் தடுத்து நிற்கும் கரைபோல், பகைப் படைவரால் தன் படை அழிந்து படாவாறு வாள் ஏந்தி விரைந்து, களத்தின் முன் வரிசைக் கண்தான் ஒருவனாகவே நின்று, பகைவர் படை வெள்ளம் தன்னைக் கடந்து தன் படை மீது பாயாவாறு காத்து, மதுரைக் கணக்காயனாரின் பாராட்டினைப் பெற்ற பெருவீரன் செயல் இத்துறைக்குப் பொருந்தும் சான்றாகும் என்க.

> "வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
> ஏந்துவாள் வலத்தன் ஒருவனாகித்
> தன் இறந்து வாராமை விலக்கலின், பெருங்கடற்கு
> ஆழி அனையன் மாதோ!"
>
> —புறம்: 330

தான் பிறர் மீது படையெடுத்துச் செல்லுங்கால், அப்படையைத் தடுத்து நிறுத்துவான் வேண்டிப் பகைப் படை வீசும் படைக்கலம் எதுவும் தன்மீது பாயப் பெறாது தன் நாற்படை மேலும் மேலும் முன்னேறற் பொருட்டுத், தன் படைக்குக் கவசமாகத் தன் படையின் முன்

வரிசையில் நின்றும், பகைப்படை பாய்ந்து வருங்கால், அப்படையால் தன் படையின் முன் அணி கெட்டழியா வாறு காத்தற் பொருட்டு, வெள்ளம் பெருகிப் பாயும் பேராற்றின் இடையில் கிடந்து அவ்வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தும் அணைபோல், பகைப் படையின் முன் நின்றும் போராடும் பெருமை வாய்ந்த பிட்டங் கொற்றன், இத்துறை வீரனுக்கு நல்ல சான்றாகுவன்.

> "நும்படை செல்லுங்காலை அவர்படை
> எடுத்தெறி தானை முன்னரை எனாஅ
> அவர்படை வரூஉங்காலை நும்படைக்
> கூழை தாங்கிய அகல் யாற்றுக்
> குன்று விலங்கு சிறையின் நின்றனை எனாஅ
> அரிதால், பெரும! நின் செவ்வி."
>
> —புறம்: 169.

பு.வெ. மாலையார் இதற்கு எருமை மறம் எனப் பெயர் சூட்டியுள்ளார்.

## ஏமம்:

பகைப் படையால் தாக்குண்டு தன் படை பின்னிடாவாறு முன்னின்று தன் படையைத் தாங்கியும், தன் படை வரிசையுள் தானே முன் நின்று பகைப் படையைத் தாக்கியும் வெற்றி காண்பதில் கருத்துடைய ஒரு வீரன், அதற்குத், தன் கையில் ஏந்தி நிற்கும் வில் அம்புகளின் வன்மையை மட்டுமோ, வேல் வாட்படைகளின் திண்மையை மட்டுமோ நம்பிப் பயனில்லை. அவை பகைவர் படை வன்மையால் பாழுற்றுப் போகும் நிலையிலும், தான் கருதியதை முடிக்கவல்ல மெய்யாற்றல் அவன்பால் அமைந்திருத்தல் வேண்டும். அத்தகைய ஆற்றல் வாய்ந்த ஒருவனால் மட்டுமே வெற்றிப் புகழை

நிலை நாட்டுதல் இயலும். ஆகவே, அவ்வாற்றல் வாய்ந்த வீரனைப் பாராட்டும் ஏமம் என்ற இத்துறை எருமைத் துறையை அடுத்து இடம் பெற இலக்கணம் வகுத்தார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

பூத்தொழில் செய்யப்பட்ட ஆடை மீது நீல நிறக் கச்சு கட்டி, மயிற் பீலிக் கண்ணி சூடிக் களம் புகுந்து போராடுங்கால், தான் கையிலேந்தி வந்த வேற்படையைக் கடுஞ்சினத்தோடு தன்மீது பாய வந்த கொல்களிற்றின் மீது எறிந்து வெற்றி கொண்டு கைப்படையின்றிக் களத்தில் நின்ற தன்மீது, பகைப் படையணியைச் சேர்ந்த வேல் வீரர்கள் களிற்றுப் படையோடு பாயக் கண்டும் கலங்காது நின்று, அவர் எறியும் வேல்களைப் பற்றி அவர் மீதே எறிந்தும், அவர் தம் தானைத் தலைவனைத் தன் தோளோடு தோளாகத் தழுவித் தன் மெய் வலியால் உயரத் தூக்கி நிலத்தில் மோதியும் அவன் உயிரைப் போக்கி, உயிர்போன அவ்வுடலைச் சுமந்தவாறே களத்தில் வேள்வி செய்து, புலவர் உலோச்சனாரின் பாராட்டைப் பெற்ற வீரன் இத்துறைக்கு இணையிலா எடுத்துக் காட்டாவன்.

"நீலக் கச்சைப் பூவார் ஆடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்,
மேல்வரும் களிற்றொடு வேல் துரந்து, இனியே
தன்னும் துரக்குவன் போலும்! ஒன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பின் ஊக்கி மெய்க் கொண்டனனே."
—புறம்: 274

பு.வெ. மாலையார், இதற்கு ஏம எருமை எனும் பெயர் சூட்டி, "குடை மயங்கிய வாளமருள் படை மயங்கப் பாழி கொண்டன்று," என விளக்கம் கூறுவர்.

பாடு:

*படைக் கலத் துணையற்ற போதும் வெற்றி காண்பது வீரனுக்கு அழகாம் என்ற உயர்ந்த உணர்வோடு களம் புகும் வீரன், ஆங்குப் பகைவனின் நால்வகைப் படையணிகளுள், வேழப் படை அழிந்தால் பிற படையணி இல்லாகி விடும் என்னுமளவு தலை சிறந்ததும், தாக்கும் போரேயாயினும் தாங்கும் போராயினும் முன் அணியுள் நின்று போராடுவதும் ஆகிய களிற்றுப் படையினை வெற்றி கொள்ளவே விரும்புவன். ஆகவே, அவ்வெற்றியைப் பாராட்டும் மாடு என்ற துறை, ஏமம் துறையை அடுத்து இடம் பெற விதி வகுத்துள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார்.*

*“இந் நிலவுலகத்தையே அளந்து காணப் புறப்பட்டது போல், மிகக் குறுகிய வழியிலும், நில்லாது விரைந்தோடும் தன் குதிரையின் போர்ப் பண்புகளைப் பாராட்டியவாறே, இரவுப் போது வந்துற்றமையால் தன் பாசறை புகுந்த அவ்வீரன், உங்கள் வேந்தன் ஊர்ந்து வரும் அரச யானையை வீழ்த்துவதற்கல்லது, அதற்குக் குறைந்த ஆற்றல் உடைய பிற படைமீது படைக்கலம் தொடாப் பெருவீரன் ஆவன்; ஆகவே, பகைவர்காள்! நால்வகைப் படைகளை நனிமிகப் பெற்றவர் யாம் எனச் செருக்கித் திரியாதீர்கள்!” என ஆவூர் மூலங்கிழாரால் பாராட்டப் பெறும் அவ்வீரன்பால், தொல்காப்பியர் கூறும் பேராண்மை பொருந்தியிருப்பது உணர்க.*

“பலம் என்று இகழ்தல் ஓம்புமின்; உதுக்காண்;
நிலன் அளப்பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்பு பாராட்டி
எல்லிடைப் படர் தந்தோனே; கல்லென

வேந்தூர் யானைக் கல்லது
ஏந்துவன் போலான், தன் இலங்கு இலைவேலே."–புறம் 301.

ஆற்றலை நிலை நாட்ட மேற்கொள்ளும் போர் நிகழ்ச்சிகளைக் கூறவந்ததே தும்பைத் திணையாதலின், களத்தில் களிற்றையும் கொன்று, அப்போரில் தன் உயிரையும் இழந்த வீரன் மறைவைக் கூறும் களிற்றுடனிலை, அவ்வீரனைப் பாணர் பாராட்டுவதைக் கூறும் பாண் பாட்டு ஆகிய துறைகளையும் இத்திணைக்கு உரியவாகக் கொண்டு "ஒளிற்று எஃகம் படவீழ்ந்த, களிற்றின்கீழ்க் கண் படுத்தன்று" எனவும், "வெண் கோட்டக் களிறு எறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக் கைவல் யாழ்ப்பாணர் கடன் இறுத்தன்று!" என அவற்றிற்கு முறையே விளக்கமும் அளிக்கும் பு.வெ. மாலையார் கூற்று அறவே பொருந்தாது என அறிக.

## அமலை:

வேழம் வீழ, வேழத்தோடு வேந்தனும் வீழ்ந்து படுவதும் உண்டு என்பது கொண்டு, அவ்வாறு வீழ்ந்த நிலையை விளக்குவதும், வீழ்ந்தானைப் பாராட்டுவதும் செய்யும் பு.வெ. மாலையார் கொள்கையை ஓரளவு ஏற்றுக் கொண்டு, அந்நிகழ்ச்சியை, ஆசிரியர் தொல்காப்பியனார் தாமும், இத்திணைக்கண் கூறியுள்ளார் என்றாலும், அவர் அதைப் பாராட்டுக்குரிய நிகழ்ச்சியாகக் கொண்டிலர்.

தன் ஆற்றலை அனைவரும் ஏற்றுப் போற்ற வேண்டும் என்ற ஆணவ மிகுதியால் படையெடுத்து வந்தானின் செருக்கழித்து வென்று புகழ் பெறுவதே தும்பையாம் ஆதலின், அப்போரில் இறந்த ஒருவனை, அதிலும் ஒரு வேழத்தோடு போராடி விழ்ந்த ஒருவனைப்

பழிப்பது முறையேயல்லது பாராட்டுவது முறையாகாது. தும்பைத் திணையின் இவ்வியல்புணர்ந்தவர் தொல் காப்பியர் ஆதலின், வேந்தன் வேழத்தோடு வீழ்ந்து இறக்கும் செயலையும், அவ்வாறு வீழ்ந்தானை வளைத்துக் கொண்டு வென்ற வீரர் பாடி ஆடும் செயலையும் ஒரு துறையிலேயே அடக்கித் தும்பைத் திணையின் பண்பு கெடாவாறு காத்துள்ளார்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் படைப் பெருமையினையும், தம் அறியாமையினால் தம் படைச் சிறுமையினையும், உணரமாட்டாது, போர் முரசு முழக்கி, வாளேந்திக் களம் புகுந்த வேந்தர்கள் அவனால் அழிவுண்டு, இவ்வுலக வாழ்வை மறந்து, மடிந்து வீழ்ந்து கிடக்கும் போர்க்களத்தில், அவரை வெற்றி கொண்ட களிப்பால் ஆடவும் பாடவும் வல்லவனேயல்லது, விழா நிகழும் தலைநகரில், கூத்தாடுவார் எழுப்பும் முழவோசைக்கு ஏற்ப அடியிட்டு ஆடவும் பாடவும் வல்லனல்லன் எனக் காக்கைப் பாடினியார் நச்செள்ளையாரால் பாராட்டப் பெறும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், தொல்காப்பியர் வகுத்த இத்துறையின் இலக்கணத்திற்கு இனிய இலக்கியமாதல் காண்க.

“விழவு வீற்றிருந்த வியலுள் ஆங்கண்
கோடியர் முழவின் முன்னர் ஆடல்
வல்லான் அல்லன்: வாழ்க அவன் கண்ணி!
வலம்படு முரசம் துவைப்பவாள் உயர்த்து
இலங்கும் பூணன் பொலங்கொடி உழிஞையன்,
மடம் பெருமையின் உடன்று மேல்வந்த
வேந்து மெய்ம்மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத்து ஆடும் கோவே!”

—பதிற்றுப்பத்து: 58.

வந்து போராடி வீழ்ந்த வேந்தனை, வென்ற வாள் வீரர்கள் சூழ்ந்து ஆடுவதே இத்துறையின் இயல்பாம் என்றாலும், பு.வெ. மாலையார், வீழ்ந்தானைப் பாராட்டும் துறையினைத் தனியே கொண்டு விட்டமையால், ஈண்டு, வென்றவர், வீழ்ந்தானைச் சூழ்ந்து கொண்டு ஆடிப் பாடுவது என விதந்து கூறாமல், வென்றவர் ஆடிப்பாடுவது என வாளா கூறி இடர்ப்படுவாராயினர்.

## தொகை நிலை:

இருவர் தலைவர் தபுதிப் பக்கம் என்ற துறை விளக்கத்தின் கண் கூறியவாறு, தும்பைப் போர் மேற் கொண்ட இரு திறத்தவருமே தம் ஆண்மை ஆற்றல்கள் மட்டுமே உலகோரால் போற்றப்படுதல் வேண்டும், தமக்கு ஒப்பாகவோ உயர்ந்தோ பிறர் எவரும் வாழ்தல் கூடாது என்ற உணர்வினால் உந்தப்பட்டவராதலின், ஒருவர் வெற்றி பெற, மற்றொருவர் தோல்வியுறும் நிலை, இப்போர் நிகழ்ச்சியில் உண்டாதல் இல்லை. அதனால், போர் நிகழ்ச்சியின் இடையிடையே வெற்றி தோல்விகள் மாறி மாறிவரினும், போரின் முடிவு இரு திறத்துப் படைகளும், இரு திறத்துப் படைத் தலைவர்களும், இரு திறத்து அரசர் களும் அறவே அழிவதாகவே அமையும். அந்நிலையைக் கூறுவதே இத்துறை.

தும்பைத் திணை தம் ஆற்றல் காட்ட மேற்கொண்ட போராதலின், களம் புகுந்தாருள், எவரும் பிறர்படை கண்ட அளவே, கலங்கி உயிர் விடுவாரல்லர்; தம்மால் பகைப் படையை எவ்வளவு அழிக்க இயலுமோ அவ்வளவும் அழித்துவிட்டுத், தம் கைப்படை அற்றுப் போன நிலையிலும் புறங்காட்டிவிடாது, தம் மெய்வலி கொண்டு,

உணர்வற்று உடல் சாயும் வரையும் போராடுவராதலின், அக்களப் போர் ஆற்றிய ஒவ்வொருவரும் வாளால் வெட்டுண்டும், வேலால் எறியுண்டும் பெற்ற புண்ணிறை மெய்யினராகவே வீழ்ந்து கிடப்பர். இந்நிலையெலாம் நன்கு விளங்கும் வகையில், "வாள் வாய்த்து இரு பெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகை நிலை" என இத்துறைப் பொருளை விளக்கியுள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

"களம் புகுந்த களிறுகளின் எண்ணிக்கை எவ்வளவு பெரிதாகியும் என்ன பயன்? பகை வீரரின் வேலேறுண்டு, வீறு இழந்து வினையாற்ற இயலாது, ஒன்று ஒழியாது வீழ்ந்து விட்டனவே! காற்றெனக் கடுகிக் களம்புகுந்த குதிரைகள் தாம், எவ்வளவு போர் மாட்சியுடையவாயிருந்தும் என்ன பயன்? நம் மீது ஊர்ந்து வந்த ஆற்றல் மிகு மறவர்களோடு தாமும் இறந்து வீழ்ந்து விட்டனவே! தேரேறி வந்த தலைவரெல்லாம் எவ்வளவு பேராற்றல் உடையவராகியும் யாது பயன்? தம் கையில் தாங்கிய தோற் படைகள் தம் மெய்களை மறைக்கத் தத்தம் தேர்த்தட்டுகளிலேயே இறந்து வீழ்ந்து விட்டனரே! போர் முரசு, கொல்லேறு இரண்டைப் பொரவிட்டு, வென்றதைக் கொன்று கொண்ட தோலை வார் கொண்டு ஈர்த்து வலித்துப் பண்ணிய பெருமை யுடையதாகியும் என்ன பயன்? முழக்குவாரின்றி முடம்பட்டுக் கிடக்கலாயிற்றே! போர் மேற்கொண்டு வந்த அரசர்கள் தாமும், மார்பில் மணங்கமழும் சாந்து பூசி மகிழும் முடிமன்னராயிருந்தும் என்ன பயன்? வேலெ றுண்ட மார்பினராகி ஒரு சேரமடிந்து மண்ணில் சாய்ந்து விட்டனரே! இனிக், கன்னி இளம் மகளிர், ஆம்பல் கொடியை அழகு வளையலாக்கி அணிந்தும், பதம் பெற

இடித்துப் பெற்ற அவலை வாயில் அடக்கிக் கொண்டு குளிர்ந்த புனலில் புகுந்து ஆடியும் மகிழ்தற்கேற்ற வளமும் வனப்பு மிக்க அவ்வேந்தர்களின் வளநாட்டு நிலை என்னாகுமோ" எனப் பரணர் புலம்பிப் பாடுமாறு, சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் ஒரு களத்தில், ஒரு சேர மடிந்த நிகழ்ச்சி, இத்துறைக்குச் சாலச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

"எனைப் பல்யானையும் அம்பொடு துளங்கி
விளைக்கும் வினையின்றிப் படைஒழிந்தனவே!
விறற் புகழ்மாண்ட புரவியெல்லாம்
மறத்தகை மைந்தரொடு ஆண்டுப் பட்டனவே!
தேர்தர வந்த சான்றோரெல்லாம்
தோல்கண் மறைப்ப ஒருங்கு மாய்ந்தனரே!
விசித்து வினைமாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குநர் இன்மையின் இருந்து விளிந்தனவே!
சாந்தமை மார்பின் நெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருது களத்து ஒழிந்தனர்! இனியே,
என்னாவது கொல்தானே, கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவல் முக்கித் தண்புனல் பாயும்
யாணர் அறாஅ வைப்பின்
காமர் கிடக்கை அவர் அகன் தலைநாடே."

—புறம்:63.

தம் உடல் அழிவுற்றதேனும், தம் உள்ளம் விரும்பிய வீரப் புகழை நிலைநாட்டித் தும்பைப் போரின் பயன் கண்டார் என்னும் பொருள் தோன்ற, இத்துறைக்கு, "அழிவின்று புகழ் நிறீஇ, ஒழிவின்று களத்து ஒழித்தன்று,"

என விளக்கம் அளிக்கும் பு.வெ. மாலையார் சொல் நயம் சுவைத்து இன்புறுதற்கு உரியதாம்.

## நல்லிசை நிலை:

தன் ஆற்றல் ஆண்மைகளை அனைவரும் ஏற்றுப் போற்ற வேண்டும் என்ற புகழாசை காரணமாக எழுந்த போர், அவ்வுணர்வோடு களம் புகுந்தார் மாண்ட அக்கணமே முடிந்து விட்டது என்றாலும், அவர்கள் போர்க்களம் புகுந்து போராடி முடிவுற்ற செய்தியைப் போராடும் நிலையில் அறியாது, அவர் மாண்ட பின்னரே அறிந்த அவர் உற்றாரோ உறவினரோ, அவரை அவ்வாறு அழித்தார் மீது அடங்காச் சினம் கொண்டு, தாம் விரும்பும் அத்தலைவனுக்கு வந்துற்ற தோல்விப் பழியைத் துடைப்பான் வேண்டி, அவன் பகைவன் மீது படை யெடுத்துச் சென்று அவனை அழிப்பதன் முகத்தான் அத்தலைவன் பெருமையினையும், நண்பனுக்குத் துயர் உற்றவிடத்தில் முன்வந்து உதவிய தன் பெருமையினையும் நிலை நாட்டுவதும் உண்டு. அதைக் கூறுவதே இத்துறை.

பாண்டியர் படை முதலியாம் பழையனுக்குரிய மோகூர் அரணை அழித்துப் புகழ் நாட்டும் நாட்டத்தோடு சென்று போராடி, ஆங்கு அப்பழையனுக்குத் தோற்று, தோற்ற அப்பழிபொறாது, தலைமறைவாகி விட்ட அறுகை என்பான் தன் நண்பனாதலின், அந்நண்பனுக்குற்ற அப்பழி துடைக்க வேண்டுவது தன் கடனே எனக் கொண்டு அம்மோகூர் மீது படையெடுத்துச் சென்று, அம்மோகூர் அரணையும் அழித்து, பழையன் காவல் மரமாம் வேம்பினையும் வெட்டிப் போர் முரசு பண்ணற்கு உதவும் வகையில், அதைச் சிறுசிறு துண்டுகளாக்கி, அவற்றைப்

பழையன் உரிமை களிறின் மயிர்கொண்டு திரித்த கயிற்றினால் பிணித்துப் பழையன் பட்டத்து யானைகளைக் கொண்டே ஈர்த்துச் சென்ற செங்குட்டுவன் செயல் இத்துறைக்குச் சாலப் பொருந்தும்.

"நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை
சேணன் ஆயினும்கேள் என மொழிந்து
புலம்பெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு
அரண் கடாவுறீஇ அணங்கு நிகழ்ந்தன்ன
மோகூர் மன்னன் முரசம் கொண்டு
நெடுமொழி பணித்து அவன்வேம்பு முதல் தடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை உய்த் தோய்!"

—பதிற்றுப்பத்து: 44.

தன் வேந்தன் மாண்ட பின்னர்த் தான் இருந்து உயிர் வாழ்தல் தகாது என்பதால், ஒரு வீரன் தன் உயிரையும் மாய்த்துக் கொள்ளத் துணிந்து, தன் வேந்தன் மறைவிற்குக் காரணமாயிருந்தாரோடு தனித்துப் போராடி உயிர் துறக்கும் நிலையும் முன்னர்க் கூறிய நிலையோடு ஒப்புடையதாகலின், "தம் இறைவன் விசும்பு அடைந்தென, வெம்முரணான் உயிர்வேட்டன்று," என்ற விளக்கம் உடையதாகப் பு.வெ. மாலையார் கூறும் தன்னை வேட்டல் எனும் துறையும் இதன் பாற்பட்டதே எனக் கொள்க.

## நூழில்:

தன் வேந்தன் வீழ்ந்துவிட்டான் என்ற செய்தி கேட்ட அவ்வேந்தன் படைத் தலைவன் ஒருவன், அவ்வேந்தன் பால் கொண்ட பெருங்காதலால், அத்தகையானைக் கொன்ற பகைவர் மீது பெருஞ்சினங் கொண்டமையால், தன் வேந்தன் இறத்துத் தான் ஒருவன் மட்டுமே உளன்

என்பதை உணராதே களம் புகுந்து விட்டான். ஆனால், ஆங்குச் சென்ற பின்னர்த், தன் வேந்தனையும் அவ்வேந்த னுக்குத் துணை நின்ற பெரும் படையையும் பாழ்செய்த அப்பகை வேந்தன், பெரும் படை கொண்டு போரிட்டா னல்லன்; அதை அவன் ஒருவனாகவே நின்று முடித்து விட்டான் என்பதை அறிந்தான். அஃதறிந்த அவனுக்குத் தன் வேந்தன் பெரும்படை ஒருவனால் அழிவுற்றுப் போவதா என ஒரு பால் ஆறாச்சினமும், தன் வேந்தன் பெரும் படையைப் பகை வேந்தன் ஒருவனால் அழிக்க முடிந்தது என்றால், அப்பகைவனின் இப்படையை நான் ஒருவனாகவே நின்று வெற்றி கோடல் இயலாதோ என ஒரு பால் அளக்கலாகாத் துணிவும் ஒரு சேரக் கொண்டான். அவ்விரு உணர்வும் அவன் உள்ளத்தேயிருந்து ஊக்கியதன் பயனாய், வாள் துணையல்லது வேறு துணையில்லா அவன், பகைப் படை அனைத்தையும் கொன்று குவித்து விட்டான். அதைக் கூறுவதே நூழில் என்னும் இத்துறை.

தலையாலங் கானப் போரில், தான் ஒருவனாகவே இருந்து ஏழு அரசர்கள் கூடி வந்தெதிர்ந்த கூட்டணியை முறியடித்து வெற்றி கொண்ட நெடுஞ்செழியன் செயல் இத்துறைப் பாற்பட்டதாம் எனக் கொள்க.

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று; இவ்வுலகத்து இயற்கை;
இன்றின் ஊங்கோ கேளலம்,...
பொருதும் என்று தன்தலைவந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க,
ஒருதான் ஆகிப் பொருது களத்து அடலே."

–புறம்: 76.

தும்பைத் திணையைச் சார்ந்தனவாகத் தொல் காப்பியனார் கொண்ட இத்துறைகளோடு ஒட்டிய துறை

களைத் தாமும் கொண்ட பு.வெ. மாலையார், இத் திணைக்கு உரியவாக, வேறு சில துறைகளையும் கொண்டுள்ளார்; ஆனால், அத்துறைப் பொருளை நோக்கின், அவையெல்லாம் வாகை, பாடாண், காஞ்சி போலும் பிற திணைகளுக்கு உரியனவே யல்லது, இத் தும்பைத் திணைக்கு உரியனவாகா என்பது தெள்ளிதின் புலனாம்.

5

## வெற்றியும் பாராட்டும்

பகைவன் கவர்ந்து சென்ற தன் நாட்டு ஆனிரைகளை மீட்டுக் கொண்டு வர மேற்கொண்ட போரில் பெற்ற வெற்றி, பகைவன் தனதாக்கிக் கொண்ட தன் நாட்டு எல்லைப் பகுதிகளை மீட்க மேற்கொண்ட போரில் பெற்ற வெற்றி, பகைப்படை மேற்கொண்ட முற்றுகையை முறி யடித்துத், தன் அரணை அழிவுறாது காக்க மேற்கொண்ட போரில் பெற்ற வெற்றி, ஆணவம் கொண்டு வந்தானின் செருக்கடக்க மேற்கொண்ட சமரில் பெற்ற வெற்றி என்ற, தொடக்க நிலை காலத்தனவாய வெற்றிகளும், தன் நாட்டவர் பசி போக்குவதும், தன் நாட்டில் பெருகிய மக்கள் தொகைக்கு இடம் தேடுவதும், பிறர் நாட்டுப் பொன்னாலும் நவமணிகளாலும் தன் நாட்டுச் செல்வத்தைப் பெருக்க வேண்டுவதும், தன ஆற்றலை உலகமெல்லாம் போற்றச் செய்வதும் ஆகிய இவைபோல் வனவும் அரசர்களின் கடமைகள்தாம் எனக் கருதப்பட்ட காரணத்தால், பகை நாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து வரச்சென்ற போரில் பெற்ற வெற்றி, பகைநாட்டின் ஒரு பகுதியைத் தன் நாட்டோடு இணைத்துக் கொள்ள மேற்கொண்ட போரில் பெற்ற வெற்றி, பொன்னும் நவமணியும் போலும் அரும் பொருள்களை ஈட்டி

வைத்திருக்கும் பகை நாட்டு அரணைக் கைப்பற்றிக் கொள்ள மேற்கொண்ட போரில் பெற்ற வெற்றி, தன் ஆண்மை ஆற்றல்களை உலகத்தவரெல்லாம் கண்டு உளம் நடுங்க வேண்டும் என்ற கருத்தோடு மேற்கொண்ட போரில் பெற்ற வெற்றி என்ற பிற்காலத்தனவாய வெற்றிகளும் மெய்வலி காட்டிப் பெற்ற வெற்றிகளாம்.

வெற்றியாவது தனக்கு ஒத்தது என ஏற்றுக் கொண்ட ஒரு கொள்கையில்-ஓர் ஒழுக்கத்தில் அக்கொள்கையும் ஒழுக்கமும் உடைய பிறரைக் காட்டிலும் தானே உயர்ந்தவனாம் என்ற சிறப்புடைமையாகும். அச்சிறப்பு, மெய்வலி காட்டுவது ஒன்றை மட்டுமே ஒழுக்கமாகக் கொண்ட அரசர்கள் மேற்கொள்ளும் போரில் மட்டுமே பெறலாகும் ஒன்றன்று; மக்கள் வாழ்வின் தொடக்க நிலையில், அம் மக்களின் தேவை, உணவு உறையுள் என்ற அளவிலேயே நின்று விட்டமையால், அவற்றைக் காப்பது ஒன்றே கடமையாம் என மன்னனும் மக்களும் கருதினர்; அதனால் காத்தல் தொழிலுக்கு வேண்டிய மெய்வலியை அக்கால மக்கள் பெரிதும் மதித்தார்கள். அத்துறையில் ஒருவரின் ஒருவர் உயர்ந்து விளங்க விரும்பினார்கள்; அதனால் அத்துறையில் பெறலாகும் உயர்வு ஒன்றிற்கே, அக்கால மக்கள், வெற்றியெனும் பெயர் சூட்டினார்கள்.

ஆனால், காலம் செல்லச் செல்ல மக்களின் தேவைகள் வளர்ந்தன; அவை வளரவே, அவர்களின் கடமையும், அக்கடமைகளை நிறைவேற்றும் வாயில்களும் வளர்ந்தன. அதனால் அந்தத் துறைகளிலும் சிறந்தாராய் விளங்க வேண்டும் என்ற வேட்கை யுடையராகி, அவற்றிலும், ஒருவரின் ஒருவர் உயர்ந்து விளங்க முனைந்ததன் பயனாய்ப் போரில் பெறலாகும் சிறப்பு

ஒன்று மட்டுமே யல்லாமல் அவை போல்வனவற்றில் பெறலாகும் சிறப்புக்களும் வெற்றிகளே என்ற உணர்வு எழுந்தது. அவ்வுணர்வு எழுந்த காலத்தவராகிய தொல் காப்பியர், மெய்வலியால் பெறலாகும் சிறப்புக்களோடு அறிவுத் துறையில் பெறும் சிறப்பு, உழவு முதலாம் தொழில்களில் பெறும் சிறப்பு, வரையாது வழங்கும் கொடையால் பெறும் சிறப்பு, அரச வாழ்வையும், அரசு நிகர் பெரும் வாழ்வையும் வெறுத்து வெளியேறும் துறவு நிலையால் பெறும் சிறப்பு, அன்பு, அருள் உடைமைகளால் பெறும் சிறப்பு, பிழைத்தார் பொறுத்தல் போலும் பண்பாட்டு நிலைகளால் பெறும் சிறப்பு, கேடு செய்தார்க்கும் கேடு செய்ய நினையாது, அக்கேடு செய்தார் நாண, உண்ணா நோன்பிருந்து உயிர் விடுதல் போலும் தியாகத்தால் பெறும் சிறப்பு ஆகியவைகளும் வெற்றிகளே யாம் என விதி வகுத்துள்ளார்.

வெற்றிக்குத் தொல்காப்பியர் வைத்து வழங்கும் பெயர் வாகை என்பதாம். வாகை, பாலை நிலத்து மர வகையுள் ஒன்று; அதன் முற்றி உலர்ந்த நெற்றுக்கள், அந்நிலத்தில் வீசும் கோடைக் கடுவளியால் அலைப்புண்ட வழி எழுப்பும் ஒலி, பறையொலியோடொத்துப் போர்க்கள நினைவூட்டு மாதலாலும், பறவை இனத்துள் பாராட்டற் குரியதாகிய மயிலுக்கு அம்மாண்பு தருவனவற்றுள் தலையாயது உச்சிக் கொண்டையே ஆதலின், அக் கொண்டைக்கு நிகரான காட்சி நலம் வாய்ந்திருத்தல் கருதி, மக்கள் இனத்துள் உயர்ந்து விளங்கும் வெற்றி வீரர்கள், வாகை மலர் சூடி மகிழ்வதில் ஒரு பொருத்தம் இருப்பதாலும், வெற்றி ஒழுக்கம், வாகை ஒழுக்கம் எனப்பட்டது.

வாகை என்ற இப்புறத்திணையைப், பாலை என்ற அகத்திணைக்குப் புறமாகக் கொண்டார் ஆசிரியர் தொல்காப்பியனார். வெற்றி, தனக்கென ஒரு தனி நிலையோ, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்ற இப்புறத்திணை வகைகளுள், ஒரு திணை நிகழ்ச்சிக்கு மட்டும் தனி உரிமையோ உடையதாகாது, அத்திணை களின் முடிவாகவும், அத்திணைகள் அனைத்திற்கும் உரியவாகவும் வரும் ஆதலின், அவ்வெற்றியாம் வாகையைத் தனக்கென ஒரு நிலம் பெறாமல், "முல்லையும், குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்கு துயர் உறுத்துப் பாலை என்பதோர் படிவம் கொள்ளும்!" என்பது போல் முல்லை முதலாம் நிலங்களின் திரிபாகவும், அத்திணை ஒழுக்கங்கள் ஒவ்வொன்றோடும் கலந்திருப்பதாகவும் விளங்கும் பாலை என்ற திணையின் புறத்திணையாகக் கொள்வது சாலவும் பொருத்தமே.

இளமைப் பருவம், காமம் காழ்க் கொண்டு நிற்கும் பருவமாம். அவ்வாறு காமம் காழ்க் கொண்டவரிடத்து, அறிவு ஆட்சி செய்வது இயலாது. ஆனால், அவ்வாறு காமம் காழ்க் கொள்ளும் கட்டிளம் பருவத்திலும், கடமை யுணர்வில் பிறழாது நிற்பவர், செயற்கரிய செய்யும் பெரியவராவர். காதலால் கட்டுண்டு கடிமணம் புரிந்து கொண்டு பேரின்பம் நுகர்ந்து வாழும் இளங் காதலருள், இளையவன், "ஈதல், இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு", ஈதலும் இசைபட வாழ்தலுமே உயிர்க்கு ஊதியமாம் என்ற கடமையுணர்வும், "இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும் அசையுடன் இருப்போர்க்கு ஆகாது; 'இல் இருந்து மகிழ்வோர்க்கு இல்லையால் பொருள்'' என்ற பொருள் அறிவும் உடையனாகிக் காதலையும் மறந்து, காடு மலைகளைக் கடந்து சென்று

பொருள் ஈட்டும் கடனறி காளையாம் என்பதையும், இளையவள், காதலன் தன்னை விட்டு இமைப் பொழுதும் பிரியாது இருக்க வேண்டும் என்ற காமவெறியுடையவளாகி விடாது, "அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர்கோடலும்" மனையற மாண்புகளாம்; "வினையே ஆடவர்க்கு உயிர்!" என இருவர் கடமைகளையும் உணர்ந்தவளாகி, பொருள் ஈட்டும் அத்தகைய வினைமேற் கொண்டு செல்லும் காதலன் இடைவழியில், தன் மேல் கொண்ட காதல் உணர்வு தூண்டக் கடமையைக் கைவிட்டு வறிதே வீடு திரும்பி விடாது, வினை முடித்து வருதல் வேண்டுமே என்ற உணர்வின் துடிப்பு மிகுதியால், பிரிவுத் துன்பத்தையும் தாங்கி உயிர் வாழும் பெரியோள் என்பதையும், உலகிற்கு உணர்த்தக் காரணமாக இருக்கும் பிரிவு ஒழுக்கத்திற்கு நிலைக்களமாகும் பாலைத் திணையும், சென்று போரிட வேண்டிய களம் காடும் மலையும் இடையிட்டு நனிசேய்த்து என இடத் தொலைவு கண்டோ, போரிட்டு வெல்ல வேண்டிய பகைப்படை, நெடு நல் யானையும், தேரும் மாவும் படையமை மறவரும் கொண்டு கடல் போல் பெருகிய பெரும் படையாமே என அதன் பெருமை கண்டோ, அஞ்சிப் போர்க் கடமையைக் கை நழுவ விடாது, போர்ப் புகழ் மீது கொண்ட பெரு வேட்கையால், உற்றார் உறவினர்களையும், ஊர் நாடுகளையும் பிரிந்து போய்ப் போராடி வெற்றி கண்டு புகழை நிலைநாட்டும் வாகைத்திணையும் உறவுடையவாம் என்றும், முன்னது அகப் பொருள் உணர்த்துவதாக, பின்னது அதன் புறமாம் என்றும் ஆசிரியர் தொல் காப்பியனார் விதி வகுத்தார்.

"வாகை தானே பாலையது புறனே;
தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப."

"கூதிர் வேனில் என்று இரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்,
ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும், தேரோர்
வென்ற சேரமான் முன் தேர்க் குரவையும்,
ஒன்றிய மரபின் பின் தேர்க் குரவையும்,
பெரும்பகை தாங்கும் வேலினானும்,
அரும் பகை தாங்கும் ஆற்றலானும்,
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்,
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து
தொல் உயிர் வழங்கிய அவிப்பலி யானும்,
ஒல்லார் இடவயின் புல்லிய பாங்கினும்,
பகட்டி னானும் ஆவினானும்
துகள் தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்,
கட்டில் நீத்த பாலினானும்,
எட்டுவகை நுதலிய அவையத் தானும்,
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்,
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்,
பிழைத்தோர்த் தாங்கும் காவ லானும்,
பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்,
அருளொடு புணர்ந்த அகற்சியானும்,
காமம் நீத்த பாலினானும், என்று
இருபாற் பட்ட ஒன்பதிற்றுத் துறைத்தே."

*பகைவர் கவர்ந்து சென்ற ஆனிரைச் செல்வத்தை மீட்டுக் கொணர்வதும், பகைவர் தமதாக்கிக் கொண்ட தன்*

நாட்டு எல்லையை மீட்டுத் தன் ஆட்சியை நிலை நாட்டுவதும், தன் அரண், பகைவர் கைப்படா வண்ணம் நின்று காப்பதும், போர் வெறி பிடித்து அலைவானை வென்று அடக்குவதும், அரசர்க்கும், அவர் படையில் பணி புரியும் ஆற்றல் மறவர்க்கும் கடமைகளாம் ஆதலின், அவர் செயலைப் பாராட்ட வேண்டுவது வேண்டாச் செயலாம்; பிறர் பாராட்டை எதிர்நோக்கி, அவர்கள் அப்பணி புரிந்தாரல்லர்; பிறர் பாராட்டினாலும், பாராட்டாது போனாலும், அவர்கள் அப்பணி புரிந்தே கிடப்பர்; என்றாலும், அப்பணி புரிந்த பேரரசர்களையும், பெரு வீரர்களையும் நாட்டு மக்கள் பாராட்டக் கடமைப் பட்டவராவர்; பிறர் பாராட்டை எதிர் நோக்காதே, அவர்கள் பணிபுரிவார்கள் என்றாலும், அவர் ஆற்றிய அருஞ்செயலைப் பாராட்டுவது, அவரை மேலும் பல அருஞ்செயல் ஆற்றத் தூண்டுவதாகும்; படை கண்டு தலை வணங்காப் பெருவீரரையும் தலை வணங்கப் பண்ணும் பேராற்றல் பாராட்டுக்கு உண்டு; அதனால் அவ்வெற்றி வீரர்களின் பணி தொடர்ந்து நடைபெற வேண்டுவதன் இன்றியமையாமையினை உணர்ந்த அக்காலப் புலவர் களும் பொதுமக்களும் அவ்வெற்றி வீரர்களைப் பல்லாற் றானும் பாராட்டிப் பெருமை செய்து வந்தார்கள்.

சேரர் குலத்து வந்து தண்டாரணியத்துக் கொடியவர் கவர்ந்து சென்ற தன் நாட்டு ஆட்டு மந்தைகளை அக்கொடியவரை வென்று அழித்து, மீட்டுத் தந்த சிறப்புடையான் ஒருவனுக்கு, **ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்** என்றே பெயர் சூட்டியும், தன் நாட்டின் வடவெல்லை நிலமாய் நிலவி, பகைவர் கைப்புகுந்துவிட்ட ஒல்லையூர் நாட்டை வென்று மீட்டுக் கொண்ட பூதப்பாண்டியன்

இயற்பெயர்க்கு முன்னர், **ஒல்லையூர் தந்த** என்ற சிறப்படை தந்தும், தமிழகத்தை வென்று அடிமை கொள்ள எண்ணித் தமிழக எல்லைக்கண் பாடி கொண்டிருந்தவாறே, தமிழக அரசர்க்குத் தொல்லை பல தந்து வந்த வடவாரியப் பெரும் படையைப் பாழ் செய்து துரத்தித் தமிழக எல்லை காத்த நெடுஞ்செழியனை, **ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன்** எனப் பெயரிட்டு அழைத்தும், வேளிர் குல வேந்தர்களின் விழுநிதி வைத்துக் காக்கப் பெறும் இடமாகவும், இயற்கை, செயற்கை ஆகிய இருவகை அரண்களையும் ஒருங்கே பெற்றதும், பல சிற்றரசர்களும், பேரரசர்களும் முயன்றும் கைப்பற்ற முடியாப் பெருங்காவல் உடையதும், இறுதியில், தமிழகத்திற்குக் கேடுபுரியும் கருத்துடையோராகிய வம்ப வடுகராம் கோசர் ஆட்சிக் கீழ் வந்துற்றதும், தன் குலத்து முன்னோர் பலர் முயன்றும் கைப்பற்ற மாட்டாக் களங்கத்தைத் தன் குலத்திற்குத் தந்து வந்ததுமான, பாழி நகரை வென்று அழித்த இளஞ்சேட் சென்னி என்ற சோழன் பெயரோடு, **செருப்பாழி எறிந்த** என்ற சிறப்பை இணைத்தும், கடல் இடைச் சிறு நாடுகளை வாழ் விடமாகவும், அக்கடலையே அரணாகவும் கொண்டு, கடல் வாணிகம் கருதி உரோமம், கிரேக்கம், எகிப்து முதலாம் மேனாடுகளிலிருந்து, தமிழகம் வந்து திரும்பும் வங்கங்களை வழிமடக்கிக் கொள்ளையிட்டுத் தமிழக வாணிகத்திற்கு ஊறு விளைத்திருந்த கொள்ளையர் கூட்டத்தைத் தன் கடற் படைத் துறையால் வென்று அழித்துக் கடல் வாணிகம் காத்த செங்குட்டுவனைக் **கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன்** எனச் சிறப்புற அழைத்தும், தமிழகத்தின் ஆட்சிப் பெருமையை வடநாட்டு ஆரிய மன்னரெல்லாம் அறிந்து மதிக்கும் வகையில், அவ்வட

*ஆரியர் பலரையும் வென்று, தன் வெற்றியின் அறிகுறியாக, வடஎல்லையாம் இமயப் பெருமலை மீது, தன் குல இலாஞ்சனையாம் வில்லைப் பொறித்துத் தமிழகம் மீண்ட விழுமியோனாகிய நெடுஞ்சேரலாதனை,* **இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்** *என நெஞ்சார வழுத்தியும், தன் இளமையையும், படைச் சிறுமையையும், அவர்களின் முதுமையையும் படைப் பெருமையையும் பயன் கொண்டு பாண்டி நாடு வென்று, அப்பாண்டியர்க்குப் பெருமை தரும் பொதிய மலைச் சந்தனத்தையும், கொற்கைத் துறை முகத்தையும் கொள்ளையிட்டுச் செல்லும் கள்ள உள்ளம் உடையராகி வந்து எதிர்த்த, இரு பேரரசர்கள் ஐந்து வேளிர்கள் என்ற எழுவர்தம் பேரணியைத் தான் ஒருவ னாகவே போராடி முறியடித்து, அவர்களை, அவர்களில் ஒருவனாம் சோழர்க்கு உரிய தலையாலங்கானம் எனும் இடம் வரை துரத்திச் சென்று வென்று வீறு கொண்ட நெடுஞ்செழியனைத்* **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** *எனும் பெயரால் அழைத்தும், அக்கால மக்கள் ஒருபால் பாராட்ட,*

"வட வாரியர் படை கடந்து
தென் தமிழ்நாடு ஒருங்கு காணப்
புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியன்."

"சோழர் பெருமகன்,
விளங்கு புகழ் நிறுத்த இளம்பெரும் சென்னி
குடிக் கடன் ஆகலின் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசைப் பாழி நூறி

வம்ப வடுகர் பைந்தலை சவட்டிக்
கொன்ற யானை.”

“கோடுநரல் பௌவம் கலங்க வேல் இட்டு
உடை திரைப் பரப்பில் படுகடல் ஓட்டிய
வெல் புகழ்க் குட்டுவன்.”

“ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்று முதிர் வடவரை வணங்குவில் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்.”

“ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து
அரசுபட அமர் உழக்கி
முரசு கொண்டு களம் வேட்ட
அடுதிறல் உயர் புகழ் வேந்தே!”

எனப் புலவர்கள் ஒருபால் பாராட்டிப் பெருமை செய்துள்ளமை அறிக.

பாக்கள் பல பாடிப் பாராட்டு முகத்தால், அரசர்களின் ஆற்றல் மறவர்களின் வீர உணர்வுக்கு உரம் ஊட்ட எண்ணிய புலவர்கள், தங்கள் பாராட்டு நெறியில் புதுப் புது முறைகளைக் கையாண்டார்கள். நாட்டவர்க்கு வேண்டும் வாழிடங்களையும், அவர்க்கு வேண்டும் உணவுப் பொருள்களை ஒன்று பத்தாக உளவாகித் தரவல்ல விளை நிலங்களையும் வேண்டுமளவு குறைவறப் பெற்றுத் தருவதே வேந்தர்களின் தலையாய கடமையாம் என்பது கொண்டு, காடு கொன்று நாடு காணும் நற்பணியில் நாடாள்வார் ஒவ்வொருவரும் ஊக்கங் காட்டி வரும் நிலையில், பேருழைப்பும் பெருந்துயரும் மேற்கொண்டு காடுகளை அழித்துப் புது நாடு காணுவதிலும், பண்டே செப்பம் செய்யப் பெற்றுச், சிறந்த பல வளம் நல்கும்

நிலையில் கிடக்கும் அண்டை நாட்டு எல்லைப்புற நிலங்களைக் கைப்பற்றிக் கொள்வதே எளிதாம் என்ற உணர்வு ஒரு சில அரசர்க்கு உண்டாக, அதன் காரணமாய்ப் பிற நாட்டு எல்லைப்புற நிலங்களைக் கைப்பற்றிக் கொள்ளும் நிலை எங்கும் இயல்புடையதாகி விடவே, வளமார் நாடு பெற்று ஆளும் அரசர்கள், பகைவர் கைப் புகாதவாறு, தங்கள் எல்லைப்புற நிலங்களைக் காக்க வேண்டுவது இன்றியமையாக் கடனாகி விட்டது. அதனால், மன்னர்களின் போர் முயற்சியெல்லாம், பிறர் நாட்டு மண்ணைக் கொள்வதாலும், தங்கள் நாட்டு மண்ணைப் பிறர் கைப்பற்றாவாறு காப்பதாலும் நாட்டு எல்லையை விரிவாக்கும் பணியிலேயே முதற்கண் இடம் பெறுதல் வேண்டும் என்ற உணர்வு அக்கால மக்கள் உள்ளத்திலும், மதி நலம் வாய்ந்த புலவர் பெரு மக்கள் உள்ளத்திலும் ஒரு சேர உருப் பெறவே, அக்கால அரசர்களைப் பாராட்டிய பாராட்டுரைகளுள், அவ்வரசர் களின் எல்லைப் பெருமையே பேரிடம் பெறலாயிற்று.

கிழக்கிலும் மேற்கிலும் கடல் நீரையே எல்லையாகக் கொண்ட தமிழ் நாட்டின் மேலைக் கரை நாடாகிய சேர நாடாளும் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் கீழ்க்கரை நாடாகிய சோழ நாட்டையும் கைக் கொண்டு பெரு நாடாண்ட பெருமையன் என்பதைப் பாராட்ட விரும்பிய புலவர் முரஞ்சியூர் முடி நாகராயர், “உன்னால் உன் உடைமையாக்கப்பட்ட காரணத்தால், பண்டு சோழர்க்கு உரியதாயிருந்தும், இன்று உன் கடலாகிவிட்ட கீழ்க் கடலில் தோன்றும் ஞாயிறு, உன் குல முதல்வராம் சேரர்க்கு இயல்பாகவே உரியதான மேல்கடல் நீரிலேயே மறைவன் !” எனப் பாராட்டியுள்ளார்.

"நின் கடல் பிறந்த ஞாயிறு, பெயர்த்தும் நின்
வெண் தலைப் புணரிக் குடகடல் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்நாட்டுப் பொருந." —புறம்: 2.

பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாடிய பாலைக் கௌதமனார் முதலாம் புலவர்கள், மணி முடிசூடி அரியணை அமர்ந்த நாள் தொடங்கி, ஆண்டு தோறும் நிகழும் முடி புனைவிழாவாம் மண்ணு மங்கல நாளன்று மேற்குக் கடல் கிழக்குக் கடல் ஆகிய இரு கடல்களுக்கும், தன் களிற்று யானைக் கூட்டங்களைப் போக்கி, அவை பொற்கலங்களில் முகந்து கொணர்ந்த அவ்விரு கடல் நீரிலும் ஒருசேரப் புனலாடிப் பெருமை கொண்டான் பல்யானைச் செல்கெழு குட்டுவன் எனப் பாராட்டு முகத்தான், அவன் மேற்குக் கடற்கரை தொடங்கிக் கிழக்குக் கடற்கரை வரையும் பரவிய ஒரு பெரு நாடாண்டவன் என, அவன் எல்லைப் பெருமையினையே எடுத்துக் கூறிப் பாராட்டியுள்ளார்கள்.

"கருங்களிற்று யானைப் புணர் நிரை நீட்டி
இருகடல் நீரும் ஒரு பகல் ஆடி." —பதிற்று: பதிகம்: 3.

"இருகடல் நீரும் ஆடினோன்..." —சிலம்பு: 28:146.

'அரசுகளெல்லாம் தன் அடி பணிதல் வேண்டும்; இவ்வுலகம் ஊராள்வார் பலர்க்கும் பொது!' எனும் உரை பொய்யாக, அவ்வுலகம் தன் ஒருவன் உடைமையாதல் வேண்டும் என எண்ணிய வேந்தன், அந்நிலையைக் களம் புகுந்து போராடிப் பெறுவது தன் பெருமைக்கும் பொருந்தாது. தன் ஆற்றல் கண்டு அஞ்சி, அரசரெல்லாம் தாமாகவே வந்து தன் வாள் பணிதல் வேண்டும் என்றும் எண்ணினான். "படைக்கலங்கள் முனை மழுங்கப் பெரும் போர் செய்து வெற்றி காண்பது எல்லோர்க்குமே எளிது.

ஆனால், நான் அது விரும்பேன்; கொல்லேறு உலா வருகிறது என்று கேட்டே அது உலாவும் மன்றத்தை அணுக அஞ்சுவது போலவும், நல்அரா உறையும் என்பது அறிந்தே, அது உறையும் புற்றை அணுக அஞ்சுவது போலவும், நான் படையுடன் பாசறைக் கண் உள்ளேன் என்பது கேட்டே அரசரெல்லாம் அஞ்சி அடிபணிந்து விடுதல் வேண்டும்; அதுவே என் ஆண்மைக்கு ஒளி தருவதாகும்!" எனக் கூறும் ஒரு மாவீரனை, மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் படைத்துள்ளதும் காண்க.

> "இரும்பு முகம் சிதைய நூறி, ஒன்னார்
> இருஞ்சமம் கடத்தல் ஏனோர்க்கும் எளிதே;
> நல்லரா உறையும் புற்றம் போலவும்,
> கொல்லேறு திரிதரும் மன்றம் போலவும்,
> மாற்றரும் துப்பின் மாற்றோர் பாசறை
> உளன் என வெரூஉம் ஒரொளி
> வலன் உயர் நெடுவேல் என்ஐ கண்ணதுவே."
>
> –புறம்:309.

இவ்வாறு எண்ணும் பெருவீரன், அந்நிலை தானே வந்து விடாது என்பதையும் உணர்ந்து, அரசர்கள் உள்ளத்தில் அத்தகைய அச்ச உணர்வை உண்டாக்குவன் வேண்டித் தன் நாற்படையை நனி மிகச் சிறந்த வகையில் பெருக்கி வைத்திருப்பதிலும் நாட்டம் செலுத்தியிருந்தான். அதனால், அரசர்களைப் பாராட்ட விரும்பிய புலவர்களும் அத்தகைய படைப் பெருமையைப் பாராட்டு முகத்தான், அவ்வரசர்களின் பெருமை பாராட்டுவதாகக் கருதிப் பாடியுள்ளார்கள்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடிய புலவர் அரிசில் கிழார், "பகை வேந்தர்காள்! 'சேரலாதன் படை வரிசையுள் எத்தனை தேர்கள் உள்ளன?

எத்தனை குதிரைகள் உள்ளன? எத்தனை யானைகள் உள்ளன? எத்தனை வீரர்கள் உள்ளனர்?' எனக் கேட்பீராயின், அவற்றைக் கணக்கிட்டுக் கூறல் எவர்க்கும் இயலாது. ஆதலின் யானும் அவற்றை எண்ணிக் கணக்கிட்டிலேன்; ஆயினும், யான் ஒன்று கூறுவேன்; அதைக் கொண்டு அவன் படைப் பெருமையை ஒருவாறு உணர்ந்து கொள்ளுதல் இயலும். சேரநாட்டில், ஆனிரை மேய்க்கும் தொழிலுடையாராகிய கொங்கர் என்பார் ஓர் இனத்தவர் உள்ளனர்; அவர்களிடம் பெருந்திரளான ஆனிரைகள் பல உள; தங்கள் ஆனிரைகளை ஒன்று சேர்த்து மேயவிடும் வழக்கத்தினராய அக்கொங்கர்கள், அவ்வாறு, அவற்றை ஒன்று கூட்டி மேய விடுங்கால், அவற்றின் எண்ணிக்கையினை எண்ணிக் காண்பது எவர்க்கும் இயலாது. சேரலாதன் படைகள் நான்கும் ஒன்றன்பின் ஒன்று செல்லுங்கால், இரண்டாவதாகச் செல்லும் அவன் களிற்றுப் படைக் காட்சியைக் காண்பார் மனக் கண்முன், அவன் நாட்டுக் கொங்கர்களின் ஆனிரைக் காட்சியே வந்து நிழலாடும். அவ்வளவு பெருந்திரளாகச் செல்லும் அவன் போர் யானைகள்; அவன் யானைப் படையே அவ்வளவு பெரியதாயின், அவன் தேர், குதிரை, காலாள் படைகளின் பெருமை எவ்வளவு பெரிதாயிருக்கும் என்பதை உய்த்துணர்ந்து கொள்ளுமாறு உங்கள் உள்ளத்திற்கே விட்டு விடுகிறேன்!'' என, அவன் நாற்படைப் பெருமையைப் பாராட்டியிருப்பது காண்க.

"பண்ணமை தேரும் மாவும், மாக்களும்
எண்ணற்கு அருமையின் எண்ணின்றோ விலனே,
கந்து கோள் ஈயாது காழ்பல முருக்கி
உகக்கும் பருந்தின் நிலத்து நிழல் சாடிச்

சேண்பரன் முரம்பின் ஈர்ம் படைக் கொங்கர்
ஆபரந் தன்ன பல்செலவின்
யானை காண்பல அவன் தானையானே.”

*நலங்கிள்ளியின் பெருமை பாட வந்த புலவர் ஆலந்தூர்க்கிழார், “நலங்கிள்ளியின் நாற்படை, பகைநாடு நோக்கிச் செல்லுங்கால், இடை வழியில் ஒரு பனந் தோப்பிடையே நுழைந்து செல்ல வேண்டி நேரின், படை வரிசையின் முதற்கண் செல்லும் தூசிப் படை, அத் தோப்பினுள் நுழையுங் காலம் நுங்குக் காலமாகி அப்படை வரிசையில் உள்ளார் நுங்குண்டு செல்வாராயின், படையின் இடை வரிசைக் கண் உள்ளார் ஆங்கு வருங்காலம், நுங்குக் காலம் கழிந்த பழக் காலமாகிவிடும் ஆதலின், அவர்கள் நுங்குண்ண மாட்டாது பழமே உண்டு செல்வர். படையின் கடை வரிசைக் கண் உள்ளார், அத்தோப்பை அணுகும் காலத்தில், பழக் காலமும் பழங்காலமாகக் கழிந்து போகப் பனங்கிழங்கு தோன்றும் காலமாகி விடுமா மாதலின் கடைப் படையினர், கிழங்கே உண்டு கழிவர். இவ்வாறு ஒரு பனந்தோப்பினுள் நுங்குக் காலத்தில் நுழைந்த படையின் கடைப்பகுதி, கிழங்குக் காலம் தோன்றிய பின்னரே அத்தோப்பைக் கடந்து செல்லுமளவு நனிமிகப் பெரிது நலங்கிள்ளியின் நாற்படை!” என அவன் படைப் பெருமையைப் பாட்டிடை வைத்துப் பாராட்டியிருப்பதும் காண்க.*

“தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய,
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்,
கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்குநுகர,
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்து பீடு அழித்த ஏந்துவேல் தானை”

புறம்: 225.

இவைபோலும் பாராட்டுரைக்குப் பாடாண் எனும் பெயர் சூட்டி விளக்கும் ஆசிரியர் தொல்காப்பியனார், ஒருவன் போரிட்டுப் பெறலாகும் சிறப்பினை மட்டுமே யல்லாமல், கொடையாலும், கொள்கை நலத்தாலும் பெறும் சிறப்புக்களைப் பாராட்டுவதும் பாடாண் என்றே பெயர் பெறும் எனக் கொண்டு, அதற்கேற்ற இலக்கண இலக்கியங்களை விரிவாகக் கூறியுள்ளார்.

# 6

# போர் வெறியும் போர் அச்சமும்

அகப்புறப் பகையற்று நாடு காவல் நன்கு நடைபெறுதல் வேண்டும் என்ற நல் உள்ளத்தோடு, புலவர்கள் வழங்கிய பாராட்டு, அரசர்களுக்குப் போர் வெறியூட்டுவதாகி விட்டது. பெருகும் தன் நாட்டு மக்கட் டொகைக்கு வாழ்விடம் காணுதல் காரணமாகப் பிறர் மண் கொள்ளுதல், பகைவர் கைப்படாவாறு தம் மண் காத்தல் என்ற இன்றியமையாக் காரணங்களுக்காக மட்டு மல்லாமல், மன்னர்கள் தம்மனம் விரும்பும் போதெல்லாம் போரிடத் தலைப்பட்டார்கள். தம் மனம் விரும்பும் நாட்டின் மீதெல்லாம் போர் தொடுக்கத் தலைப் பட்டார்கள். பகைநாட்டுப் படையை வெற்றி கொள்வ தோடு அமையாது, அப்பகைப் படை வீரரைப் பல கொடுமைக்கு உள்ளாக்கினர்; ஏதும் அறியாப் பகை மக்களைப் பெரிதும் கொடுமைப்படுத்தினார்கள்.

தமிழக வரலாற்றை, அதன் தொடக்க கால நிலையி லிருந்து ஆராய்ந்து காண்பார்க்கு, தமிழகம் தன்னேரில்லா அரசு ஓச்சித் தழைத்திருந்த காலம், சேர, சோழ, பாண்டியர் என்ற முடியுடை மூவேந்தர் அரசோச்சிய காலமாம் என்ற பாராட்டினுக்கு இடையே, அத்தமிழகம் அத்தகு பெரு நிலையிலிருந்து தாழ்ந்தமைக்கும் அம்மூவேந்தர்களே

காரணமாம் என்ற பழிதரு உரையினையும் கூட்டி எழுத வேண்டிய நிலையிலேயே அன்றைய அரசியல் சூழ்நிலை அமைந்திருந்தது என்பது தெற்றெனப் புலனாம்.

தமிழரசர் மூவரும் ஒற்றுமை கொண்டு ஊராண்டவர் அல்லர்; அவர்கள் ஒவ்வொருவரும், பிறரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணமுடையவராகவே இருந்தார்கள். ஒரு காலத்தில், அம்மூவேந்தர் குடிகளுள் ஒரு குடியில் ஆற்றல் மிக்க ஒருத்தன் தோன்றிவிட்டால், அவன் பிற அரசுகளை யெல்லாம் பணிய வைத்த ஒப்பற்ற பேரரசனாய் வாழ வேண்டும் என்று எண்ணுவதும், அதைப் போலவே, அவன் ஆற்றலும் செல்வமும் கண்டு மனம் பொறாத ஏனைய அரசர்கள் அனைவரும் ஒன்று கூடி அவனை அழிக்க முனைவதும், அக்கால அரசியல் ஒழுக்கமாகத் திகழ்ந்தன; ஒரு குடியில் பிறந்தவர், தம் குடி ஒழிந்த ஏனைய குடிகளில் பிறந்தாரோடு பகைத்து வாழ்தலோடு மட்டும் நின்றாரல்லர். ஒரு குடியில் பிறந்தவர்களே, ஒருவரேடொருவர் பகைத்துப் போரிட்டு அழித்தார்கள். அது மட்டுமன்று, தந்தை, மகனை எதிர்ப்பன்; மகன் தந்தை மீதே போரிட்டு எழுவான். இதுவே, பண்டைத் தமிழகத்தின் பாராட்டுக்குரிய அரசியல் சூழ்நிலை; தமிழரசர்களின் போர் வெறி, அத்துணை ஆற்றல் கொண்டு தலைதூக்கி ஆடிற்று.

மூவேந்தர்களுள் முதற்கண் வைத்து எண்ணப் படுவோராகிய சேரர் குலத்தில் வந்த இளஞ்சேரல் பெரும் பொறை என்பான், பெரும் படையோடு சென்று, சோழனும், பாண்டியனும், மற்றும் அவர்க்குத் துணை நிற்கும் வேறு சில குறுநிலத் தலைவர்களும் காத்து நின்ற விச்சிமலையையும், அதற்குக் காவலாய் அமைந்திருந்த,

கல்லாலும், மலையாலும் காவற் காட்டாலும் அரண் மிகுந்திருந்த ஐம்பெரும் கோட்டைகளையும் அழித்து, அவ்வரசர்களையும் வென்று அடக்கி வீறு கொண்ட செய்தியைப் பதிற்றுப் பத்து ஒன்பதாம் பத்தின் பதிகம் பாராட்டிக் கூறியிருப்பது காண்க.

"வெருவரு தானையொடு மெய்துறச் செய்து சென்று
இரு பெருவேந்தரும் விச்சியும் வீழ,
அருமிளைக் கல்லகத்து ஐந்து எயில் எறிந்து,
பொத்தி யாண்ட பெருஞ் சோழனையும்,
வித்தை யாண்ட இளம் பழையன் மாறனையும்
வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று..."

சோழர் குலத்து வந்து, காவிரிக்கு அணைகட்டியும், காவிரிப் பூம்பட்டினம் கண்டும், தமிழகத்தின் வளம் பெருக்கித் திருமாவளவன் எனும் புகழ்மிகு பெயர் பூண்ட கரிகாற் பெருவளத்தான், வெண்ணியில் நடந்த கன்னிப் போரில், பனத்தோடு அணிந்து வந்த சேரனையும், வேப்பந்தார் அணிந்து வந்த பாண்டியனையும் ஒரு சேர வென்றழித்த வரலாற்றை, முடத்தாமக் கண்ணியார், பொருநராற்றுப் படையில் வைத்துப் போற்றியிருப்பது காண்க.

"இரும் பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிரும் சென்னி மேம்பட மிலைந்த
இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாள்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவ!" –பொருநர். 143–148.

நிலத்தரு திருவின் நெடியோன் என்ற பாண்டியன் தன் பாண்டி மண்டலத்தின் ஒரு பகுதியைக் கடல்

கொண்டு விட்ட குறையை நிறைவாக்குவான் வேண்டிச் சேர, சோழ மன்னர்களை வென்று, அவர்கள் நாட்டைத் தன் நாட்டோடு இணைத்துக் கொண்ட வரலாற்றினைச் சிலப்பதிகாரமும், கலித்தொகையும் சிறப்புறக் கூறுகின்றன.

“மலி திரை ஊர்ந்து தண்மண் கடல் வெளவலின்,
மெலிவின்றி மேற்சென்று, மேவார் நாடு இடம்படப்
புலியொடு வில் நீக்கிப் புதழ் பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச் சீர்த் தென்னவன்.”

—கலி:140

பொதிகைமலைச் சந்தனத்தாலும் கொற்கைத் துறை முத்தாலும் வளங்கொழிக்கும் பாண்டியர் அரியணையில், நெடுஞ்செழியன் என்ற நனிமிகு இளையோன் ஒருவன் அமரக் கண்டதும், சேரனும், சோழனும், செழியன் வளர்ந்தால் நம்மை வாழவிடான்; இளையனாகயிருக்கும் போதே அவனை அழித்து விடுதல் நலம்; அவனை அழித்தால் நாம் அடையலாகும் செல்வமும் சிறப்பும் அளவிறந்தன; நாமோ நாற்படையால் பெருமை பெற்றவர்; நமக்கிலா அப்பெரு வாழ்வு அவனுக்கு வாய்ப்பதா என்ற காழ்ப்புணர்வால், ஒன்றுகூடி, திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்ற குறுநில மன்னர்களோடு கூடிய ஒரு கூட்டணியும் அமைத்துக் கொண்டு, பாண்டியர் தலைநகரை வளைத்துக் கொண்ட வரலாற்றினையும், அவர் எண்ணத்தில் மண் விழும் வகையில் செழியனை வெற்றி கொள்வதற்கு மாறாக, அவனால், தலையாலங் கானப் போரில் தம் தருக்கிழந்த வரலாற்றினையும் அகமும், புறமும் அழகாக எடுத்துக் கூறுகின்றன.

"கொய்சுவல் புரவிக் கொடித் தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன்தலை சிவப்பச்,
சேரல், செம்பியன், சினங்கெழு திதியன்,
போல்வல் யானைப் பொலம்பூண் எழினி,
நார் அரி நறவின் எருமையூரன்
தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல் தேர்ப் பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க, பகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து உரை செலக்
கொன்று களம் வேட்ட ஞான்றை."

—அகம்: 36.

*கோவூர்க் கிழார் என்ற புலவர் கோமகன் கூறிய பொன்னுரைகளையும் பொருட்படுத்தாமல், ஆவூர்க் கோட்டை, உறையூர்க் கோட்டை காரணமாகப் போரிட்டு அலைந்த நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் ஒரு தாயத்தவர்; ஒரு குடியில் பிறந்தவராவர்; தான் பெற்ற மக்கள், தன்மீதே போர் தொடுத்து வருமளவு தகாதவர் ஆகிவிட்டனரே என்ற மன நோயால், அம்மக்கள் மீதே போர் தொடுத்து எழுந்து, அந்நிலையில் தன் உடன் இருந்த அரும்பெரும் புலவர்களாம் தன் நண்பர்கள் கூறிய அறவுரை கேட்டு, அமரைக் கைவிட்டு, அந்நிகழ்ச்சி தன் உள்ளத்தில் ஆழப் பண்ணிய புண்ணால் வருந்தி வடக்கிருந்து உயிர் துறந்த கோப்பெருஞ்சோழன் வரலாறு, மக்கள் தந்தை மீது போர் தொடுப்பதற்கும், தந்தை மக்கள் மீது போர் தொடுப்ப தற்கும் தலையாய சான்றாகுமல்லவோ?*

*ஒரு நாட்டின் மீது போர் தொடுக்க விரும்பிய ஓர் அரசன், அவ்வாறு போர் தொடுத்துப் போவதன்முன், தான் எந்த நாட்டின் மீது போர் தொடுக்க விருக்கின்றனனோ, அந்நாட்டவர் அறிந்து கொள்ளும்*

வகையில், "பகை நாட்டு மக்காள்! உங்கள் நாட்டின் மீது படையெடுத்து வருகின்றேன் நான்; என் படை புகும் நாள் இந்நாள்; அந்நாளுக்குள், பகை நாட்டு ஆனிரைகாள்! ஆனிரை இயல்பினராம் அந்தணர்காள்! பெண்டிர்காள்! பிணியுடையீர்காள்! ஆண் மக்கட்பேறு பெறா ஆடவர் காள்! போர் நிகழ் இடம் பெயர்ந்து புகலிடம் தேடிப் போய் விடுங்கள்!" எனப் பறையறைந்து அறிவிப்பதைக் கடமை யாகக் கொண்ட பண்பாடு மிகுந்த பழந் தமிழ் நாட்டில், போர் வெறி அளவிறந்து பெருகிவிட்ட காரணத்தால் பகைவரின் பச்சிளங் குழந்தைகளைக் கைப்பற்றிக் கொல்லவும், பகை நாட்டு அரசவையிலிருந்து வந்தவர் என்பதற்காகவே, பாடிப் பிழைப்பதல்லது வேறு பழிமிகு தொழில் புரிந்தறியாப் புலவர் பெருமக்களைக் கொல்ல நினைப்பதும், பகைவரின் குலமகளிரை, மயிர் களைவது போலும் கொடுமைக்கு உள்ளாக்குவ்தும் ஆகிய இழி முறைகளும் இடம் பெறலாயின.

தானும் ஒரு புலவனாய்ப் பதின்மருக்கு மேற்பட்ட புலவர் பெருமக்கள் பாராட்டத்தக்க புரவலனாய்த் திகழ்ந்த குலமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், போர் வெறி கொண்டுவிட்ட காரணத்தால், தன்னைப் போலவே புலவர் பலர் தம் பாராட்டைப் பெருமளவு உயர்ந்த பண்பாடுடையவனும், கடையேழு வள்ளல்களுள் ஒருவனாக வைத்து மதிக்கத் தக்க மாண்புடையவனும் ஆகிய மலையமான் திருமுடிக் காரியின் முள்ளூர் மலையரணை முற்றியழித்ததோடு அமையாது, அவன் விட்டுச் சென்ற, அவனுடைய இரு பச்சிளங் குழவிகளைக் கைப்பற்றிக் கொணர்ந்து, தன் பட்டத்து யானையின் காலின் கீழிட்டுக் கொல்லவும் துணிந்த கொடுமை, புலவர்

கோவூர்க் கிழார் தலையீட்டினால் அல்லவோ நிகழாமல் நின்றது?

உறையூரைத் தலைநகராகக் கொண்ட சோணாட்டு அரியணை மீது கொண்டுவிட்ட அளவிறந்த காதல் உணர்வால், அறிவிழந்து போய், அவ்வரியணையை அடையத் தன்னைப்போலவே ஆராக்காதல் கொண்டு விட்ட நலங் கிள்ளிபால் நெடும் பகையை வளர்த்துக் கொண்ட காரணத்தால், அவன் அரசவை அடைந்து பாடிப் பரிசில் பெற்றுப் பின்னர்த் தன் அரசவை அணுகிய புலவன் இளந்தத்தனை, நலங்கிள்ளியின் ஒற்றனாகப் பிறழ உணர்ந்து, பொருள் அளித்துப் போற்ற வேண்டுவதை விடுத்துக் கொல்ல முனைந்த நெடுங்கிள்ளியின் செயல் நினைக்கும் நெஞ்சையும் சுடும் கொடுமையுடையதன்றோ?

பத்தினிப் பெண்டிர்க்குக் கோயில் அமைத்து வழிபடும் வழக்கத்திற்குத், தமிழகத்தில் கால்கோள் விழாக் கண்டவிழுமியோனாகிய செங்குட்டுவன், அத்தகு போர் வெறிக்கு அடிமைப்பட்டுப் போய்விட்ட காரணத்தால், மோகூர்ப் பழையனை வெற்றிகொண்டு கொன்றுவிட்ட பின்னர், பற்றுக் கோடற்றுப் போன அவன் உரிமை மகளிரைப் பாதுகாக்க வேண்டும் என்றகடமையுணர்வைக் கைவிட்டதோடு அமையாது, போரில் வெட்டி வீழ்த்திய பழையன் காவல் மரமாம் வேம்பினைக் கட்டி யீர்த்துச் செல்வதற்கு வேண்டும் கயிறு திரிப்பதற்காகவே, அம் மகளிரின் மயிரைக் கழித்துக் கொடுமைப்படுத்தினான் என்றால், அப்போர் வெறியின் கொடுமையை என்னெனப் புகல்வது?

அரசர்களின் போர்வெறி, இவ்வாறு, தனிப்பட்ட ஒரு சிலரைக் கொல்வதும், கொடுமை புரிவதும் ஆகிய அந்த

அளவோடு அடங்கி விடவில்லை; பகையரசனின் நாடு நகரங்களை அறவே அழித்து, அவ்வழிவு கண்டு அகங்களிக்குமளவு வளர்ந்து பெருக நின்றது. புறத்தே, பகைவர் புகுவதற்கும் அஞ்சும் காவற் காட்டையும், அகத்தே, உழவர்கள் ஏர்பல கொண்டு உழுது தொழி லாற்றியதன் பயனாய்ச் செந்நெல்லும் கரும்பும் செழித்து வளர்ந்து கண்கொள்ளாக் காட்சி நலம் நல்கும் நன் செய்களையும், கழுநீர் முதலாம் மலர்கள் மலர்ந்து கவின் பெறத் தோன்றும் பொய்கைகளையும் நிரைநிரையாகச் சென்று நிறைபுல் மேய்ந்து பெரும் பால் நல்கும் பசுக் கூட்டங்களையும், ஊர் மகளிர் ஒன்று கூடிக் குரவையும் துணங்கையும் ஆடிமகிழும் மன்றங்களையும், ஆன்றோரும் சான்றோரும் அமர்ந்து, நகரில் அறனல்லன நிகழா வண்ணம் காத்து நிற்கும் அறங்கூர் அவைகளையும், தங்கள் வாழிடங்களில் வாழ வாய்ப்பற்றுப் போன காரணத்தால், தம் நாடு வந்து புகும் வேற்று நாட்டவரை வரவேற்று ஓம்பித் தாமும் வாழ்வாங்கு வாழும் செழுங்குடிச் செல்வர் களையும், தங்கள் மனை நோக்கி வரும் விருந்தினர்களை அகமும் முகமும் மலர வரவேற்று விருந்தோம்பும் உயர்குடி மகளிரையும், நெல் முதலாம் ஒன்பான் வகை உணவுப் பொருள்களைக் குவித்து வைத்திருக்கும் குதிர்கள் குன்றுகள் போல் ஆங்காங்கே காட்சி அளிக்கக் கட்டி வைத்திருக்கும் எழுநிலை மாடங்களையும், பல்வேறு நறுமணங்களை வாரி அளிக்கும் நாளங்காடிகளையும் கொண்டு, நவநாகரிகத்தின் இருப்பிடமாய்க் காட்சி அளித்த ஒரு பெருநகரம், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனின் நாற்படையால் தாக்குண்ட காரணத்தால், காவற் காடுகள் அழிவுறவும், வயல்களில்

விளைந்திருந்த பயிர் வகைகள் நெருப்பிட்டு எரிக்கப் பெறவும், பசு நிரைகள் மேய்ந்த இடங்களில், காட்டுக் கொடு விலங்குகள் உலா வரவும், ஊர் மன்றங்கள் மகளிர் ஆடிமகிழ்ந்த குரவை துணங்கைகளை இழந்து ஒளி இழப்பவும், ஆன்றோர் இருந்த அவைகளில் பேய்க் கூட்டத்தின் ஆட்டம் பெருகவும், அகமும் முகமும் மலர, விருந்தினரை வரவேற்ற மகளிர், மக்களையும் மனை களையும் இழந்து வாய்விட்டுப் புலம்பி அலையவும், வருவார்க்கு வாழ்வளித்த பெருங்குடிச் செல்வர், தம் வளம் இழந்து, வாழ்வு இழந்து, வாழ்விடம் தேடிப் பிறநாடு நோக்கிப் புறப்படவும், நெற்குதிர்கள் எரிந்து கரியாக, பாழுற்ற அவ்விடங்களைக் கோட்டான்கள் தம் வாழ்விட மாக்கிக் கொள்ளவும், எழுநிலை மாடங்கள் இடியுண்டு, கழுதை வழங்கும் கொடுமையவாகவும் கழுநீர் மலர்ந்த பொய்கைகள் கோரை வளரும் பாழுங் குளமாகிப் போகவும், நல்லேர் பல நடந்த நன்செய்கள் பன்றிக் கூட்டத்தின் வாழ்விடமாகிப் போகவும் பாழ்பட்டு, நாடு எனும் பெயர் இழந்து, காடு எனும் பெயர் பெற்றுவிட்ட கொடுமையைப் புலவர் மாங்குடி மருதனார், கண்ணீர் மல்கக் காட்டியுள்ளார்.

"உறுசெறுநர் புலம்புக்கு, அவர்
கடிகாவின் நிலை தொலைச்சி,
இழிவு அறியாப் பெருந்தண்பணை
குரூஉக் கொடிய எரிமேய
நாடு எனும்பேர் காடு ஆக,
ஆசேந்த வழி மாசேப்ப,
ஊர் இருந்த வழி பாழாக,
இலங்குவளை மடமங்கையர்

துணங்கை அம்சீர்த் தழூஉ மறப்ப,
அவை இருந்த பெரும் பொதியில்
கவைஅடிக், கடிநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பு ஆட,
அணங்கு வழங்கும் அகலரங்கண்
நிலத்தாற்றும் குழூஉப் புதவின்
அரந்தைப் பெண்டிர் இனைந்தனர் அகவக்,
கொழும்பதியக் குடி தேம்பிச்
செழுங்கேளிர் நிழல் சேர,
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலோடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியோடு சண்பமன்று ஊர்தர,
நல்லேர் நடந்த நகைசால் விளைவயல்
பன்மயிர்ப் பிணவோடு கேழல் உகள,
வாஅழாமையின் வழிதவக் கெட்டுப்
பாழாயின நின் பகைவர் தேஎம்." —மதுரைக்காஞ்சி: 152–176.

*அரசர்களின் போர் வெறி இவ்வாறு அணை ந்தமாகி விடவே, அன்று நாடாண்ட மன்னர்களும், ி வாழ் மக்களும் போர்க் கொடுமைக்குப் பெரிதும் ங்கத் தலைப்பட்டார்கள்; அண்டை நாட்டு அரசன் ரும்படை, எந்த நாழிகையில், நம் நாட்டுள் அடியெடுத்து த்து, அழிவுத் தொழில் மேற்கொண்டு விடுமோ என்ற ச உணர்வால், மன்னனும் மக்களும், இரவில் ்குவதையும் மறந்து துன்புற்றார்கள்; தன் மகளின் ும் நாணமும், அவள் மணங்கொண்டு கணவன் ்பிடிக்கும் வரை காப்பாற்றப் பட வேண்டுமே; பருவம் ற்ற ஒரு பெண்ணின் பண்பு நலம் எந்நேரத்திலும் -டு விடக்கூடிய வாய்ப்புக்கள் மலிந்த சூழ்நிலையில்,*

யான் சிறிது கண்ணயர்ந்தாலும், அவை கெட்டுவிடக் கூடுமே என்ற கவலையுணர்வால், ஒரு கன்னிப் பெண்ணின் தாய், எவ்வாறு ஒவ்வோர் இரவையும் அஞ்சி அஞ்சிக் கழிப்பாளோ, அவ்வாறு பகை நாட்டுப் படை பாசறை கொண்டிருக்கும் இடத்திற்கு அணித்தான ஊரினர், அப்படையால் தம் ஊருக்கு வர இருக்கும் கேடுகளை எண்ணி எண்ணி அஞ்சி உறக்கம் மறக்கும் கொடுமையைப் புலவர்கள் நன்கு எடுத்துக் கூறியுள்ளார்கள்.

"போர்எனில் புகலும் புனைகழல் மறவர்,
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வலமுறை வருதலும் உண்டென்று அலமந்து
துஞ்சாக் கண்ண வடபுலத்து அரசே.' —புறம்: 31

"ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே!" —குறுந்: 292.

"கொன்முனை இரவூர் போலச்
சிலவாகுக நீ துஞ்சும் நாளே." —குறுந்: 91.

7

# போர் ஒழிப்பு

நாடு காவலுக்கு, ஆண்மையும் ஆற்றலும் இன்றி யமையாதன என்பதால், மன்னர்களின் ஆண்மையை, மாவீரர்களின் ஆற்றலைத் தம் பாவிடை வைத்துப் பாராட்டிய புலவர்கள், அப்பாராட்டு, அவர்களின் போர் உணர்வைப் போர் வெறியாக மாற்றவும், அறவழிப்போர் புரிந்த அவர்களை மறவழிப் போக்கவுமே துணை புரிந்தது என்பதைக் கண்டு கொண்ட பின்னர், அவை போலும் பாராட்டுரைகளைப் பெருமளவு கைவிட்டு, அவர்கள் உள்ளத்திலிருந்து, போர் உணர்வு பையப் பையக் குறையும் வகையில் அறிவுரை கூறத் தொடங்கினார்கள்.

மன்னர்களின் இயல்பு உணர்ந்தவர்கள் புலவர்கள், போர் வெறியால் காழ்ப்பேறிவிட்ட அவர்கள் உள்ளத்தில் அறவுணர்வைக் குடியேற்றுவது அத்துணை எளிது அன்று என்பதை அவர்கள் அறிவார்கள்; அதனால், அறங்காட்டி, அரசர்களின் மறவுணர்வை மங்க வைக்க முயலாது, அதற்கும் மறத்தின் துணையையே நாடினார்கள்; மன்னர்கள், தங்கள் மறவுணர்வு பழி பெறவோ, குடிப்புகழ் குன்றவோ பொறார்; மாறாக, அவற்றின் புகழ் பெருக்கவே விரும்புவர்; மன்னர்களின் இவ்வுள்ளுணர்வை உணர்ந்

திருந்த காரணத்தால், அவற்றைக் காட்டியே அவர்களின் போர் வெறியைத் தணிக்க முயன்றுள்ளார்கள்.

கொடுமுதலைகள் கூடி வாழ்தற்கேற்ற ஆழமும் அகலமும் கொண்ட அகழியாலும், செம்பை உருக்கி வார்த்து எடுத்தாலொத்த திண்மை வாய்ந்த மதிலாலும் வளைப்புண்டு அழிக்கலாகா ஆற்றல் மிக்க அரணையும் எளிதில் அழிக்க வல்ல ஆற்றல் வாய்ந்த கிள்ளி வளவன், சேரர் தலைநகராம் கருவூரைக் கைப்பற்றக் கருதினான்; உடனே சோழர் பெரும்படையொன்று சேரநாடு புகுந்து கருவூரை வளைத்துக் கொண்டது. சோழன் வரவுணர்ந்த கருவூர்க் காவலன், அரண் வாயிலை அடைத்துக் கொண்டு அகத்தே அடங்கி விட்டான்; முற்றுகை நெடிது நாள் நீளலாயிற்று; சினங் கொண்ட சோழர் படை, கோட்டையைக் கொன்னே வளைத்துக் கொண்டிருக்க விரும்பாது, கருவூரைச் சூழ உள்ள காவற் காட்டினுள் புகுந்து, காவற் காட்டு மரங்களை வெட்டி வீழ்த்துவதில் முனைந்தன. அப்போதும் அகத்தோன் புறம்போந்து போரிடத் துணிந்தானல்லன்; கிள்ளிவளவனும் முற்று கையைக் கைவிட்டானல்லன். இரு பேரரசர்களிடையே தோன்றிவிட்ட பகையுணர்வையும், அதன் பயனாய் உருவாகிய கருவூர் முற்றுகையினையும் கிள்ளிவளவன் அவைப் புலவராகிய ஆலத்தூர்க் கிழார் உணர்ந்தார். கருவூர்க் கோட்டையின் கவினையும், அக்கருவூரைச் சூழ்ந்தோடும் ஆன்பொருநை ஆற்றின் தூய வெண்மணற் பரப்பில் காற்சிலம்பு ஒலிக்க ஓடிவந்தமர்ந்து, கைவளை ஒலிக்கப் பொற்கழங்கினை உருட்டி ஆடி மகிழும் கருவூர் மகளிரின் மாண்பினையும் கண்டு கண்டு களித்தவர் புலவர் ஆலத்தூர்க் கிழார். அக்காட்சி நலங்களைக் கண்டு களித்த

அவர்க்குக், கருவூர் முற்றுகையால் சேரநாட்டு மக்களை அடைய இருக்கும் சீர் கேடும், கருவூரும், அந்நகருக்கு ஒரு பால் அரணாகச் சூழ்ந்து ஓடும் ஆன் பொருநையும் பெற இருக்கும் பெருங்கேடும் பெருந்துயர் தருவவாயின. வர இருக்கும் அவ்வழிவினைத் தடுத்து அழிக்கத் துடித்தது அவர் உள்ளம். கருவூரை வளைத்து நிற்கும் படைக்குத் தலைவனாய்ப் பாசறைக்கண் வீற்றிருக்கும் கிள்ளிவளவன் பால் சென்றார் புலவர். அவனோ கருவூர் அழிவு கண்டு மகிழும் ஆர்வத்தில் திளைத்து நிற்கின்றான். அந்நிலையில், கருவூர் மாநகர்க்கும் மக்களுக்கும் அவனால் வர இருக்கும் அழிவின் கொடுமையினை எடுத்துக் காட்டி வருந்தித் தடுத்தல் இயலாது போயிற்று; அதனால், தாம் எண்ணியதை முடிக்க, வேறு ஒரு புது முறையினைச் சிந்திக்கத் தொடங்கினார்; அதன் பயனாய், மன்னன் மனம் உவக்கும் உரை வழங்கினால் உறுபயன் உண்டாம்; இந்நிலையில், அவன் மனம் உவக்கும் உரை, அவன் காது குளிரும் வகை; அவன் பகைவர் மீது வழங்கும் பழியுரைகளே ஆகும். அவ்வாறு பகையரசரைத் தம் முன் பழித்துரைப்பார்க்கு, அரசர்கள், அவர் விரும்புவன எல்லாம் வழங்குவர்; மன்னர்களின் மன இயல்பு அதுவாகும் என்ற தெளிவு பிறந்தது. உடனே, ஆலத்தூர்க் கிழார் வளவனைப் பார்த்து, "அரசே! அரசர்கள், தம் மொத்த ஆற்றல் வாய்ந்த அரசர்களோடு போர் புரிவதையே விரும்புவர்; அதுவே அவர்தம் வீரத்திற்கும் அழகும், அறிவுடைமையுமாம். தமக்கு நிகரில்லாதாரோடு போர் தொடுத்துப் போதல் அவர்க்குப் புகழாகாது; மாறாக, மாபெரும்பழியாம். இவ்வுண்மை நீ அறியாத தொன்றன்று. ஆனால், இன்று நீ அவ்வறிவிழந்து நிற்பது காண

வருந்துகின்றேன்; புகழ் தேடி வந்த உன்னைப் பழிநாடி வருகிறதே என்ற உணர்வால் இது உரைக்கின்றேன்; உன் பெரும்படையால் வளைக்கப் பெற்றிருக்கும் இக்கருவூர்க் கோட்டையினுள் வாழ்வோன் இயல்பினை, நீ சிறிதும் எண்ணிப் பார்த்திலை போலும். சிறந்த ஓர் அரசன், பகைப்படை தன் தலைநகர் எல்லையில் வந்து தங்குவதையே தன் மற மானத்திற்கு இழுக்காக எண்ணி, அன்றே எதிர் வருவன். ஆனால் உன் படை கருவூர் நோக்கிப் புறப்பட்டது மட்டுமல்லாமல், அக்கருவூரை வளைப்பதும் செய்துளது; முற்றுகையிட்டு ஒரு நாளோ இரு நாளோ கழியாமல் கணக்கற்ற நாட்கள் கழிந்து விட்டன; ஆனால், கருவூர்க்கு உரியவனோ கதவை அடைத்துக் கொண்டு அகத்தே வாளா அடங்கியிருக்கின்றனனேயன்றி, ஆறாச்சினம் கொண்டு புறம் போந்து போரிடக் கருது கின்றானல்லன். அம்மட்டோ! கருவூரை வளைத்திருக்கும் உன் படை வறிதே ஆழ்ந்து கிடக்கவும் இல்லை. காவற் காட்டு மரங்களை வெட்டி வீழ்த்தும் அழிவுத் தொழிலை அயராது மேற்கொண்டுள்ளன; மரங்களை வெட்டி வீழ்த்தும் ஒலி, உள்ளிருப்போன் காதுகளில் சென்றும் நுழைகிறது; காவற் காட்டு அழிவு, தன் அரசப் பெருஞ் சிறப்பின் அழிவு, தன் மறமானத்தின் அழிவு என்பதை அவன் உணர்ந்தான் அல்லன்; மரங்க்ள் மளமள என முறிந்து விழும் ஒலி கேட்டும், அவன் மறவுணர்வு கொண்டானல்லன்; காரணம், அதற்கேற்ற ஆண்மையோ, ஆற்றலோ அவன்பால் இல்லை; அதனால், அச்சத்திற்கு அடிமையாகி அடங்கிக் கிடக்கின்றான். அத்தகை யானோடு போரிடுவது ஆற்றல் மிகு மாவீரனாகிய உனக்குப் பெருமை தரும் செயலாகாது: இம்முற்றுகையால்

உன் புகழ் மாசுறுவதல்லது மாண்புறாது; புகழ் தேடுகிறோம் என்ற உணர்வால், உள்ள புகழை இழந்து விடுவது உன்னொத்த பெரியோர்க்கு ஒவ்வாது; "ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை ஊக்கார் அறிவுடையார்!" என்றார் வள்ளுவர். புகழ் பெருக வாழ வேண்டிய நீ பழி பெற்று விடுதல் கூடாதே என்ற ஆர்வத்தின் மிகுதியால், என் உள்ளம் உணர்ந்த உண்மைகளைக் கூறி விட்டேன். இனி, மேலும் விடாது முற்றி அழிப்பதே மேற்கொண்டு பழி மேற்கொள்வதோ, முற்றுகையைக் கைவிட்டுப் புகழ் கொள்வதோ நின் செயல்," என்றார். அவன் புகழ் வளர்ச்சியைக் காரணமாகக் காட்டிப் போர் ஒழிக்கும் பணியினை மேற்கொண்டார்.

"அடுநையாயினும், விடுநையாயினும்
நீ அளந்தறிதி நின் புரைமை வார் கோல்,
செறியரிச் சிலம்பின், குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கின் தெற்றியாடும்
தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்லன் அரஞ்செய் அவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின் நிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறும்
கடிமரம் தடியும் ஓசை தன்னூர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப
ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு ஈங்கு நின்
சிலைத்தார் முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தகவுடைத்து."

—புறம்: 36.

சோழர் என்ற ஒரு குடியில் பிறந்திருந்தும், அரச வாழ்வின் மீது கொண்டு விட்ட ஆராக் காதலால், சோணாட்டின் உள்நாட்டுத் தலைநகராம் உறையூர் அரண்

வாழ்வை நெடுங்கிள்ளி பெற்றிருப்பது பொறாது, பெரும் படையொடு சென்று உறையூரை வளைத்துக் கொண்டான் நலங்கிள்ளி. தன்னைப் போல் சோழர் குடியில் வந்தவன் தானே நலங்கிள்ளி; உறையூரை அவன்தான் உடைமை யாக்கிக் கொள்ளட்டுமே என எண்ணி உறையூர் விட்டு வெளியேறாது, உறையூர் அரண் வாயிலை அடைத்துக் கொண்டு உள்ளே அடங்கி விட்டான் நெடுங்கிள்ளி. இந்நிலை நீளின், கரிகாற் பெருவளத்தான் அரிதின் முயன்று, அரணும் பெருங்கோயிலும், குடிமக்கள் வாழ்வதற்காம் எழுநிலை மாடங்களும் இடம் பெறக் கண்ட உறந்தைப் பெருநகர் உருக்குலைந்து போய்விடும்; அந்நிலையை எண்ணி ஏங்கினார் ஒரு புலவர்; கோவூர்க்கிழார் என்ற அப்புலவர் எண்ணி ஏங்குவதோடு அமைதி கொண்டு விடாது, அவ்வழிவு நிகழாவண்ணம் காக்கவும் கருதினார்; முற்றி வளைத்துக் கொண்டு அரண்புறத்தே பாசறை கொண்டிருக்கும் நலங்கிள்ளி பால் சென்றார்; ஆனால் அவனோ உறையூர் அரியணையில் அமரப்போகும் அந்நிலையை ஆர்வத்தோடு எதிர்நோக்கி, அது பெற, எத்துணை பெரிய போர் மேற்கொள்ளவும் துணிந்திருந்தான்; அவன் மனக் குறிப்பு அதுவாதல் அறிந்த புலவர் போரைக் கைவிடுக என வெளிப்படக் கூற விரும்பாது, அதைக் குறிப்பு மொழிகளால் கூறத் துணிந்து, "நலங்கிள்ளி, உன்னால் வளைக்கப்பட்டு, இவ்வுறையூர் அரணகத்தே அடங்கியிருப்பானை, இப்போழ்துதான் கண்டு வந்தேன். அவன் கழுத்தில், ஆத்திப்பூ மாலை மணங்கமழக் கண்டு களிப்புற்றேன்; அரண் புறத்தே வந்து, அரணை வளைத்துக் கொண்டிருக்கும் பெரும் படைக்கு உரியவனாகிய உன்னைக் காண்கின்ற நான், உன் கழுத்தில்,

அகத்தோன் மார்பில் மணக்கும் ஆத்தி மாலைக்கு உரியோராகிய சோழர் குலத்தவர்க்குப் பகைவராகிய பாண்டியர்க்கு உரிய வேப்பமாலை மணக்குமோ, அல்லது, அச்சோழர்க்குரிய பிறிதொரு பகைவராகிய சேரர்க்குரிய பனந்தோட்டு மாலை ஒளி வீசுமோ என்ற ஐயப் பாட்டுணர்வோடு ஊன்றி நோக்கிய யான் வியந்தே போனேன்; உன் மார்பில் வேப்பந்தாரும் இல்லை; பனந்தோட்டு மாலையும் பளபளக்கவில்லை; மாறாகச், சோழர் குடிக்கு உரியதும், உன்னால் பகைக்கப்பட்டு, இவ்வரணகத்தே அடைப்புண்டு கிடப்போன் கழுத்தில் கண்டு வந்ததுமாகிய ஆத்திப்பூ மாலையே அணி செய்து கிடக்கிறது! ஆக நீங்கள் இருவருமே சோழர் குலத்தவர் என்பதை அறிந்தேன்; ஆக, அடைத்து நிற்போனும் சோழன்; வளைத்து நிற்கும் நீயும் ஒரு சோழனே; நலங்கிள்ளி, பகைத்து நிற்கும் இருவரும் எவ்வளவுதான் ஆற்றல் மிகுந்தவராயினும், இறுதியில் ஒருவர் வெல்லப், பிறிதொருவர் தோற்றே தீர்வர்; உங்கள் இருவரில் யார் தோற்பினும், தோற்றவன் ஒரு சோழன் என்றே ஊரும் உலகமும் கூறும்; நலங்கிள்ளி, பிறந்த சோழர் குடிக்குப் பெருமை தேடித்தர வேண்டும்; அதற்கு ஒரு பேரரசு அமைக்க வேண்டும் என்ற ஆர்வ மிகுதியால், நீ மேற் கொண்டிருக்கும் இம்முற்றுகை, நீ பிறந்த குடிக்குப் பெருமை தேடித் தருவதற்கு மாறாக, மறையா நெடும் பழியைக் கொண்டு தருவதை, ஆர்வத்தால் நீ அறிந்திலை; அரசே! உன் செயலால் குடிப் புகழ் குன்றும்; ஆகவே இம் முற்றுகையைக் கைவிடுக!" எனப் புகழ் பெருக வழி கூறுவார் போல் போர் ஒழியப் பொருள் மொழி வழங்கினார்.

"இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்:
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;
நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்றே; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்றே;
ஒருவீர் தோற்பினும் தோற்பது உம் குடியே;
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்
குடிப் பொருள் அன்று நும்செய்தி; கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும் இவ் இகலே."

-புறம்: 45.

ஒருவன் நல்லவனாக வாழத் துணை புரிவன இரண்டு; ஒன்று அச்சம்; இரண்டு அன்பு. இவை ஒவ்வொன்றும் இரண்டு காரணங்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றும்; இதைச் செய்தால் பழி வருமே எனத் தீயன செய்யும் நிலையிலும், இதைச் செய்யாது விட்டால் பழி வருமே என நல்லன செய்யா நிலையிலுமாக அச்சம் தோன்றும் நிலைக்களம் இரண்டாம். அது போலவே, இதைச் செய்தால் இன்பம் பெறலாமே என நல்லன செய்யும் நிலையிலும், இதைச் செய்யாதிருந்தால் இன்பம் பெறலாமே எனத் தீயன செய்யா நிலையிலுமாக அன்பு தோன்றும் நிலக்களமும் இரண்டாம்.

இவ்வாறு ஒருவனை நல்லவனாக்கும் நிலையில், அச்சம் அன்பு ஆகிய இரண்டுமே துணை புரியும் என்றாலும் அச்சத் துணையினும் அன்புத் துணையே சாலச் சிறந்தது. நல்லனபால், அச்சங் காரணமாகப் பிறக்கும் பற்றினும், அன்பு காரணமாகப் பிறக்கும் பற்று ஆற்றல் வாய்ந்ததாகும். ஆனால், ஒருவனை நல்ல வனாக்கும் பணியில், அன்பினும், அச்சமே பரவிச் செயல்படுவதாகும். அன்புணர்வு காரணமாக நல்லவ

ரானவரே உலகில் மிகப் பலராவர். அன்புணர்வு பிறப்பதற்கு வழி வகுப்பதே அச்ச உணர்வுதான். பழி கண்டு அஞ்சும் உள்ளத்தில்தான், புகழ் மீது கொள்ளும் அன்புணர்வு உருப்பெறும். அதனால்தான் ஆண்டவனை வழிபடு என அறிவுரை வழங்க வந்த நாவரசர், "அஞ்சி ஆயினும், கொண்டு ஆயினும், நெஞ்சம்! வாழி! நினை நின்றியூரனை!" என, அச்சங் காரணமான வழிபாட்டிற்கு முதல் இடம் அளித்துள்ளார்.

இப்பேருண்மையை அறிந்திருந்த காரணத்தால், பழந்தமிழ்ப் புலவர்கள், இப்போரின் முடிவு, உங்கள் ஆண்மை ஆற்றல்களுக்குப் பழியாம் என்றும், உங்கள் குடிப் புகழ் குன்ற வழி வகுக்கும் என்றும், அச்சங்காட்டி அமர் ஒழிக்க முனைந்துள்ளார்கள். ஆனால் அவ்வறிவுரையும் அவர்கள் எதிர்நோக்கிய அளவு பயன் தராது போகவே, பழிதரும் என்ற அச்சுறுத்தலைக் காட்டினும், பெரியதோர் அச்சுறுத்தலின் துணையை நாடியுள்ளார்கள்.

மக்கள் அனைவரும் அழியாப் பெருவாழ்வு பெற்று வாழவே எண்ணுவர். அதனால், தாம் வாழும் இடம் நிலையற்றது, தம் வளத்தை அழிக்க வல்லது என அறிந்த அக்கணமே அவ்விடத்தைக் கைவிட்டு அகல்வர். தம் வாழ்வும் வளமும் வற்றாது நிற்றற்காம் இடம் தேடிப் போதற்குச் சிறிதும் பின்னிடார். இந்நிலைக்கு மாறாக, வாழும் இடம் அழிக்கலாகா அரண் உடையது என்ற உணர்வுடையராகி விடின், அவ்விடம் விட்டு அகல எண்ணார். அகல எண்ணாமையோடு, ஆண்டே ஆண்டு பல வாழ்தற்காம் வழிவகைகளையும் தேடி அலைவர். மக்கள் இயல்பு இது.

இவ்வுலகம் நிலையற்றது; ஆனால், அது நிலையற்றது என்ற எண்ணம் வரப் பெற்றவர் உலகில் மிக மிகச் சிலராவர். நில்லாதவற்றை நிலையின என உணரும் புல்லறிவாளரே மிகப் பலராவர். இவ்வுலகமும், இவ்வுலக இன்பங்களும் நிலைபேறுடையன என்ற அறியாமை யுணர்வுடையார்க்கு, அறம் உணர்த்தல் அறிவுடைமை யாகாது; அவர் உள்ளத்தில் படிந்து கிடக்கும் அவ் வறியாமை இருள் அறவே அழிக்கப்படுதல் வேண்டும். அறியாமை அகன்ற உள்ளத்தில்தான் அறஉணர்வு வித்தூன்றி வளரும்.

பழந்தமிழ்ப் புலவர்கள், இந்த உண்மையையும் உணர்ந்தவர்களாவர். உலகாளும் மன்னர்கள், இவ்வுலக வாழ்வு நிலைபேறுடையது; அரசப் பெருவாழ்வு அழிக்க லாகா அரண் பெற்றது என்ற உணர்வு கொண் டிருப்பதினாலேயே, அவர்கள் தங்கள் அரச வாழ்வைப் பெருக்கிக் கொள்வதில் ஆர்வம் கர்ட்டி அலைகின்றனர்; பேரரசு அமைக்கப் போர் போர் எனப் போர் வெறி கொண்டு திரிகின்றனர்; அதனால், அன்னார் போர் வெறியைத் தணிக்க வேண்டுமாயின், முதற்கண் இவ்வுலகம் நிலை பேறுடையது என எண்ணும் அவர் உள்ளத்தின் அறியாமையை அறவே அகற்ற வேண்டும்: இவ்வுலகம் நிலையற்றது என்ற நிலையாமை உணர்வை அவர் நெஞ்சுணரப் பண்ணுதல் வேண்டும் என்ற உண்மை நிலையை உணர்ந்த காரணத்தால், நிலையாமை கூறிப் போர் ஒழிக்கும் பணியினை விரும்பி மேற்கொண்டார்கள்.

"உடைவேல மரத்தின் இலையளவு சிற்றிடமும் பிறர்க்கு உரியதன்று எனப் போற்றிப் புகழுமாறு, கடல் சூழ்ந்த இப்பேருலகம் அனைத்தையும், தம் ஒரு குடைக்கீழ்

வைத்துத் தாமே ஆண்ட பேரரசர் மிகப் பலராவர். கடல் அலைகள் கொழிக்கக் கரைக்கண் வந்து குவியும் மணலை எண்ணிக் காணினும் காணலாம்; ஆனால் அவ்வாறு ஒப்பற்ற பேரரசு அமைத்து உலகாண்ட உரவோர் தொகையினை எண்ணிக் காணல் இயலாது. அவ்வாறு ஆண்ட அரசர்கள், இறவாது இன்று வரை வாழ்ந்தார் ஒருவரும் இலர். தமக்கே உரியவாக எண்ணித் தாமே ஆண்டு வந்த அந்நாட்டைத் தமக்குப் பின்னர், பிறகு கைப்பற்றி ஆளுமாறு கைவிட்டு மாண்டு மறைந்தே போயினர்; உடம்பிற் குடிகொண்ட உயிர்களுள், அவ்வுடம்பை விட்டுப் பிரியாது, அவ்வுடம்போடே இரண்டறக் கலந்து வாழ்கிறது என்ற உயர்நிலை பெற்ற உயிர், இன்றுவரை இருந்ததில்லை. உயிர், குடிகொண்ட உடம்பை விட்டுப் பிரிந்து போவது, முக்கால உண்மையாம்; அது பொய்த்துப் போவது எக்காலத்தும் இல்லை!" என்ற, ஐயாதிச் சிறு வெண் தேரையார் என்ற ஆன்றோர் வழங்கிய அறிவுரை காண்க.

"இருங்கடல் உடுத்த இப்பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவணது இடைபிறர்க்கின்றித்
தாமே ஆண்ட ஏமங்காவலர்
இடுதிரை மணலினும் பலரே; சுடுபிணக்
காடு பதியாகப் போகித், தத்தம்
நாடுபிறர் கொளச் சென்று மாய்ந்தனரே;
அதனால் நீயும் கேண்மதி யத்தை! வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை; மாயமோ அன்பற."

—புறம்: 363

சிறு குன்றுகளும் பெரு மலைகளும் மண்டித் தமிழ் வேந்தர் மூவர்க்கும் ஒத்த உரிமையுடையதான தமிழகத்தை,

தமிழகம் மூவேந்தர்க்கும் உடைமையாம் என்ற பொதுச் சொல் வழங்குவதைப் பொறாது, தம் தனியுடைமையாகக் கொண்டு தாம் ஒருவராகவே நின்று ஆண்ட அரசர்களின் வாழ்நாளும் மாண்டே போயின; தமிழகம் அனைத்தையும தனிக் குடைக் கீழ் வைத்து ஆண்ட அவ்வரசர்களுள் ஒருவராவது இறவா நிலை பெற்றுள்ளாரல்லர். அனை வருமே மாண்டு மறைந்து போயினர். அவர் ஆண்ட பெருநாடும், அவர் ஈட்டிய பெருநிதியும் அவர் இறந்து போவுழி, இறவாத் துணையாக அவருடன் சென்றில. அவற்றையும் அவர்கள் இழந்தே போயினர். ஆகவே வாழ்வும் வளமும் செல்லும் உயிர்க்கு நல்ல துணைகள் ஆகா. மாறாக ஈண்டு அவர்கள் செய்யும் நல்வினை, அறத்தொடு பட்ட ஆக்கவினை ஒன்றே, உயிர்க்கு உற்ற துணையாய் அமையும்," எனப் பிரமனார் கூறும் பொன் மொழியும், நிலையாமை கூறி அறம் வலியுறுத்தும் அப்பணி புரிவது காண்க.

"குன்றுதலை மணந்த, மலைபிணித்து யாத்தமண்
பொதுமை கட்டிய மூவர் உலகமும்
பொதுமையின்றி ஆண்டி சினோர்க்கும்
மாண்ட அன்றே யாண்டுகள்! துணையே
வைத்தது அன்றே வெறுக்கை! வித்தும்
அறவினையன்றே விழுத்துணை!"

—புறம்: 357.

இந்நிலையாமை உணர்விற்கே ஆசிரியர் தொல் காப்பியனார் காஞ்சி எனும் பெயர் சூட்டி விளக்கி யுள்ளார்.

"காஞ்சிதானே பெருந்திணைப் புறனே;
பாங்கரும் சிறப்பின் பல்லாற்றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே."

—தொல். பொருள்: 78.

உயிர் வாழ உறுதுணை புரியும் உணவினைப் பெறுவதற்காக என்ற உயர்ந்த குறிக்கோள் காரணமாக, இன்றியமையா நிலையில் எழுந்த போர், காலம் செல்லச் செல்லத் தேவையற்ற ஒன்றாக, சொல்லொணாக் கொடுமை யுடையதாக மாறிவிட்ட காரணத்தால், நிலையாமை உணர்வை எடுத்துக் காட்டி ஒழிக்க வேண்டிய ஒன்றாக மாறிவிட்டது.

பலவாற்றானும் வளர்ந்துவிட்டது என்ற பாராட்டிற் குரிய இந்நாட்களிலும், பல்லாற்றானும் உயர்ந்தவர் என்ற பாராட்டினைப் பெற்றவரும் உணர மறுக்கும் போர்க் கொடுமையைத் தமிழர்கள், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உணர்ந்து, அதை ஒழிக்க வல்ல ஒரே வழி நிலையாமை வுணர்வுதான் என்பதையும் அறிந்து, அறம் வழங்கியுள்ளார்கள் என்றால், தமிழர்தம் பண்பாட்டுப் பெரு நிலைதான் என்னே!

  

